# கூந்தலை நன்றாக வாரி முடிவதின் வனப்பு

கூந்தலை வழவழப்பாகவும், பொலிவுடனும் விளங்கச் செய்யும்

**ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி**

வாரினால் உங்கள் கூந்தல் அழகாகத் தோற்றமளிக்கும்.






கூந்தல் அலங்காரத்தைச் செய்யும் விதம்:

ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி கூந்தலை நன்றாக இழைய வாரவும். அடியில் ரிப்பனினால் கூந்தலை நன்றாகக் கட்டவும். மேல்புறத்தைநோக்கி கூந்தலை வளையமாக மடித்து, பின்செய்து, எஞ்சியுள்ள கூந்தலை இடதுபுறம் தொங்கும்படி விடவும். (படம் 1.) எஞ்சியுள்ள கூந்தலை வளையமாகச் சுற்றி, நுனிப் பாகத்தை உள்ளே சொருகிவிடவும். (படம் 2.) கொண்டையை நன்றாகப் பின்செய்து, நகைகளினால் அலங்கரிக்கவும்.

ஸ்வஸ்திக் ஹெயர் ஸ்டைல் "அலங்கார்"

**ஸ்வஸ்திக்**
ஆயில் மில்ஸ்
லிமிடெட்
பம்பாய்.

Shilpi S.O.M. 16-A TAM

பிலவ, பங்குனி 26

# கல்கி

ஏப்ரல் 8, 1962



## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| சொன்னதைச் செய்வாரா? | (தலையங்கம்) | ... 3 |
| சர்க்கார் தொழில்களின் அவலநிலை | ... | ... 4 |
| கார்ட்டூன் | ... | ... 5 |
| என்ன சேதி? | ... | ... 5 |
| விருது பெறும் விற்பன்னர்கள் | ... | ... 9 |
| மணிபல்லவம் | நா. பார்த்தசாரதி | ... 12 |
| பவழத் தீவு | வாண்டுமாமா—ரமணி | ... 26 |
| திருமூலர் தவமொழி | ராஜாஜி—சோமு | ... 31 |
| நந்தவனம் | சோமு | ... 34 |
| கால்நடைச் செல்வங்கள் | டாக்டர் டி. பட்டாபிராமன் | ... 41 |
| சாரதா (வெள்ளித் திரை) | காந்தன் | ... 45 |
| எப்போ வருவாரோ? | கோமதி நாகராஜன் | ... 46 |
| சிறப்புமிக்க சான்றோர்கள் | கதிர் | ... 51 |
| புதுவெள்ளம் | அகிலன் | ... 54 |
| மீண்டும் ஒரு பண்டிகை நாள் | வாசுதேவன் நாயர்—கிருஷ்ணன் நம்பி | ... 62 |
| காணமற்போன கடிதங்கள் | கொக்கி | ... 74 |
| கானல் நீர் | கல்யாண சுந்தரி ஜகந்நாத் | ... 76 |
| நொண்டிக் கதை | ர. சு. நல்லபெருமாள் | ... 82 |
| படித்துப் பாருங்கள் | ... | ... 87 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மிகப் பழங்கால முதலாகவே அமெரிக்கப் பூர்வீகக் குடிகள் புகையிலையைப் பரம் பொருளிடமிருந்து பெற்ற வரப்பிரசாதமாகப் போற்றித் தொழுததுண்டு. விசேஷச் சடங்குகளின்போது புகையிலையை யாகத் தீயிலிடுவதும், மழையற்ற வரட்சியின் போது பொடித்த புகையிலையைக் காற்றில் தூவிவிடுவதும், மீன்கள் கிடைக்காத போது கடலில் புகையிலைத் தூள்களை இறைப்பதும் அவர்களிடமிருந்த சம்பிரதாயம்.



## புகையிலையின் வரலாறு... 2

Panama

20

CIGARETTES




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.702 TM

Greens' Advtg



மலர் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 36

# சொன்னதைச் செய்வாரா?

**வ**ர்த்தகப் பிரமுகர்களும் தொழிலதிபர்களும் கூடிய கூட்டத்திலாகிலும் தனியார் தொழில் நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்துக்குச் செய்துள்ள சேவையைப் பிரதமர் நேரு அவர்கள் அங்கீகரித்திருப்பது நமக்குப் பெரு மகிழ்ச்சியளிக்கிறது.

சர்க்காரின் நேரடி மேற்பார்வையில் நடக்கும் தொழிலேபோல்தான் "தனியார் தொழில்" என்று அழைக்கப்படும் துறையும் பொதுமக்களின் நன்மைக்காகவே நடைபெறுகிறது. தனியார் தொழிலிலும் பொதுமக்களின் செல்வமும், நலனும் விருத்தியாகி வருகின்றன.

இந்திய வர்த்தக சமுதாயத்தினர் புதுப் புதுத் தொழில் துறைகளில் ஆர்வம் காட்டுவது மேனாடுகளில் பாராட்டுக்களைத் தேடித் தந்துள்ளது என்று செல்வாக்குள்ள பெரும் பத்திரிகைகள் எழுதி வருகின்றன. மேனாட்டு மோகம் இன்னும் நம்மை விட்டுப் போகவில்லை. நம் கண்ணால் பார்த்துத் தெரிந்து கொள்வதை விட மேனாட்டினர் கண்டு சொல்லும் பாராட்டுக்கு அதிக மதிப்பு இருந்து வருகிறது!

வர்த்தக சமுதாயம் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை 'ஹிந்து' பத்திரிகை நினைவுறுத்துகிறது. ஏழை மக்களின் முன்னேற்றமும் அவர்கள் வாழ்வு வளம் பெறச் செய்ய வேண்டியதும் அவர்கள் பொறுப்பு என்று கூறுகிறது. இதைத்தான் காந்தியடிகள் தர்மகர்த்தா முறை என்றார். குறளாசிரியர் 'ஒப்புரவு' என்ற அதிகாரத்தில் வற்புறுத்துவதும் இதுவே.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு

சட்டமன்றங்களில் சட்டங்கள் இயற்றி மக்களை ஒப்புரவுடன் வாழச் செய்ய முடியாது. ஏழைகளுக்கு உதவக் கூடியவர்களின் உதவியைப் பாராட்டிப் புகழ்ந்து ஊக்கினால் தான் அவர்கள் ஒப்புரவறிந்து வாழ முயல்வார்கள். மக்கள் சுயமாகவே கட்டுத் திட்டங்கள் வகுத்துக் கொண்டு வாழ்ந்தால் அதற்கு அதிக மதிப்புண்டு. படாடோப வாழ்வை வெறுத்து மக்கள் தாமாகவே எளிய வாழ்வை மேற்கொண்டால் அது மிக உயரியதாகும். அதற்குப் பதில் கடுமையான சட்டங்கள் இயற்றி மக்களைப் பலாத்கார மாக எளிய வாழ்க்கை வாழத் தூண்டுவதால் விபரீத விளைவுகள் ஏற்படுவதைத்தான் காண்கிறோம். லஞ்ச ஊழலும், கள்ளத்தனமும் அன்றாட நடைமுறையாகப் போய் விடுகின்றன. இதனைத் தவிர்த்து, மக்கள் இயல்பாகவே நல்லவர்களாகவும் யோக்கியர்களாகவும் பிறருக்கு உதவி செய்பவர்களாகவும் வாழ வழி செய்யவேண்டும் என்பதே சுதந்திரக் கட்சியின் லட்சியம்.

இப்பொழுதெல்லாம் வியாபாரத்தில், தொழில் துறையில் 'ஏகபோகம்' நிலவி வருவதைப் பிரதமர் கண்டித்திருக்கிறார். இது தானாக உண்டாகிவிடவில்லை. அரசாங்கம் கடைப்பிடிக்கும் பெர்மிட் லைசென்சு ஆட்சி முறையின் காரணமாகவே ஏகபோக வர்த்தக முறை ஏற்பட்டு வருகிறது. தங்களுக்கு வேண்டியவர்களுக்குப் பெர்மிட்டுகளும் லைசென்சுகளும் வழங்கி ஏக போக வர்த்தகத்தை நிலைநாட்டி விடுகிறார்கள். யாரும் எந்த வியாபாரமும் செய்யலாம்; சர்க்காரிடம் பெர்மிட்டோ லைசென்ஸோ வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை என்றால் அந்த இடத்தில் ஏக போக வர்த்தகத்துக்கு இடமே இல்லாமற் போய் விடுகிறது. ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டுப் பலர் வியாபாரம் தொடங்குவதால்

போட்டி மார்க்கெட் ஏற்பட்டு வாங்குவோருக்குச் சகாயமான விலையில் நல்ல பொருள் கிடைக்கிறது! கண்ட்ரோல் வர்த்தகம் இருக்குமிடங்களிலெல்லாம், மிக அதிகமான விலை கொடுத்து மிக மட்டமான பொருளை வாங்க வேண்டி ஏற்படுவதைத்தான் நமது அன்றாட அனுபவத்தில் காண்கிறோம்.

சோஷலிஸக் கொள்கையில் தீவிர ஆர்வம் கொண்ட பிரதமர் நேருஜியே, தனியார் தொழில் துறை இந்நாட்டுக்கு மிகவும் அவசியம், நல்லதும்கூட என்று பேசியிருக்கிறார். அதைத் தலையெடுக்க விடாமல் செய்வது நாட்டுக்கு நல்லது அல்ல என்று பேசியிருப்பதைப் பார்த்து மகிழ்ச்சியுண்டாகிறது. சுதந்திரக் கட்சியின் கொள்கை பிரதமர் உள்ளத்தில் உறைக்கத் தொடங்கி விட்டது குறித்துத் திருப்தியுண்டாகிறது.

வடஎல்லையிலிருக்கும் சீனு, மெள்ள மெள்ளத் தனது ஆக்கிரமிப்பை அதிகப்படுத்திக் கொள்வது போல், சோஷலிஸமும் மெள்ள மெள்ள மக்களின் உரிமைகளைப் பறித்து, ஏகபோகத்தை வளர்க்கத்தான் பார்க்கும்! இதற்கு ஒரிஸ்ஸா முதல் மந்திரி திரு பட்நாயக்கின் பிதற்றலே சான்று.

சர்க்கார் தானே ஒரு வர்த்தகத்தை ஏகபோகமாக நடத்தினுலும் சரி, சர்க்காரிடமிருந்து பெர்மிட் லைசென்சு பெற்று வேறு எவராகிலும் ஏகபோகமாக நடத்தினுலும் சரி, அதனுல் பெருங் கஷ்டமும் நஷ்டமும் அடைவது மக்களே!

நேருஜி வர்த்தக சம்மேளனத்தில் உண்மையில் அந்தரங்கசுத்தியோடு பேசியிருந்தாராளுல் அவர் தமது ஆட்சியில் தாண்டவமாடும் பெர்மிட் லைசென்சு கோட்டா முறையை எவ்வளவு தூரம் குறைக்க முடியுமோ அவ்வளவுக்குக் குறைக்க உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும்.

# சர்க்கார் தொழில்களின் அவல நிலை

அவ்வப்போது கல்கி இதழ் ஒருவித மக்கல் காகிதத்தில் அச்சிட்டு வழங்கப்படுவதைக் கண்டு நேயர்கள், ''காகிதம் நன்முக இல்லை; படங்கள் தெளிவாக இல்லை; தொடர்கதைகளை 'பைண்டு' செய்து வைத்துக்கொள்ள முடியவில்லை'' என்றெல்லாம் குறை கூறுகின்றனர். மற்றப் பத்திரிகையாளருக்கும் இக்குறைகள் உண்டு. இக்குறைகளுக்குப் பரிகாரம் காண்பது பத்திரிகையாளர் கையில் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். நிலைமையில் மாறுதல் ஏற்படுவதற்கு நேபா பேப்பர் தொழிற்சாலையில் அல்லவா முன்னேற்றம் ஏற்பட வேண்டும்?

1958-ம் ஆண்டில் இத் தொழிற்சாலையை மத்தியப் பிரதேச சர்க்கார் மேற் கொண்டனர். ஆண்டுக்கு 30,000 டன் காகித உற்பத்தி செய்யக் கூடிய வாய்ப்பு உள்ளது இந்த ஆலை. ஆனல் 23,000 டன்களுக்கு மேல் இதுவரை இங்கே உற்பத்தி ஆனது கிடையாது. இந்தக் காகித ஆலையில் உற்பத்தியாகும் காகிதத்தின் தரத்தைச் சொல்லாமல் இருப்பதே நல்லது. காகிதத்தின் நிறம் வெண்மை என்பது அவர்களுக்குத் தெரியாது. மஞ்சள் காகிதம் அளிப்பதே நாட்டுக்குப் பெருத்த சேவை என்று அவர்கள் நினைக்கிறார்கள் போலும்! உற்பத்தி விலையும் அயல்நாட்டுக் காகித விலையைவிட டன்னுக்கு 164 ரூபாய் அதிகம்.

இந்த மட்டரகக் காகிதத்தைத் தான் அதிக விலைக்குப் பத்திரிகைகள் மீது கட்டாயமாகத் திணித்து வருகிறார்கள். அதன் பின்னரும் தொழிலில் என்னமோ லாபம் கிடைக்க வில்லை. நஷ்டத்திலே தான் நடைபெறுகிறது இந்த நேபா காகித ஆலை. ஐந்து கோடி ரூபாய் மூலதனத்தில் 75 லட்சம் வரையில் நஷ்டத்தில் கரைந்து விட்டது. உற்பத்திக் குறைவுக்கும், தரக் குறைவுக்கும் காரணம் மின்சார வசதி முழுமையாய்க் கிடைக்கவில்லையாம்; திறமையுள்ள சிப்பந்திகள் கிடைக்கவில்லையாம். உற்பத்தி முறைகளை மாற்றிக் கொள்ள முடிய வில்லையாம்; ஆறு ஆண்டுகளுக்குப் பின்னரும் இந்த லட்சணத்தில் ஒரு தொழிற்சாலை இயங்குகிறதென்முல், இதன் நிர்வாகத்திலும், செயல் முறைகளிலும் எவ்வளவு ஊழல்கள் இருக்கின்றன என்பது விளங்கும். இவற்றையெல்லாம் லோக சபையின் மதிப்பீட்டு கமிட்டி தனது 157 வது அறிக்கையில் அதிகார பூர்வமாக எடுத்துக் காட்டி வன்மையாகக் கண்டித்திருக்கிறது.

மற்றொரு உதாரணம் பாருங்கள். மேற்கு ஜெர்மனியின் ஒத்துழைப்புடன் நிர்மாணித்து நடத்தப்படும் ரூர்கேலா உருக்கு ஆலையில் உற்பத்திக் குறைவினுலும், இதர நடைமுறைக் குறைபாடுகளினுலும், தவறுகளாலும் எதிர்பார்த்த உற்பத்தி இன்னமும் கிடைக்கவில்லை. நிலைமையைப் பரிசீலனை செய்ய மேற்கு




ஜெர்மனியிலிருந்து இந்தியாவுக்கு வந்த நிபுணர்கள் இதைப் பற்றிக் கூறுவது:

''உருக்குச் சாலையை முற்றிலும் சீராகவே அமைத்து முதல்தரமான நிலைமையில்தான் ஹிந்துஸ்தான் ஸ்டீல் ஸ்தாபனத்தினிடம் ஒப்படைத்தோம். ஆனால் உற்பத்தி சரிவர நடைபெறாத தற்கு நிலக்கரியின் தரக் குறைவும், ஆலையில் நாங்கள் சொல்லிய ஆலோசனைகளை ஏற்காததும்தான் காரணம்.''

இந்தக் குற்றச்சாட்டை ஹிந்துஸ்தான் ஸ்டீல் ஸ்தாபனம் சுலபமாக மறுத்து விடக்கூடும். பொறுப்பைத் தட்டிக் கழிப்பது சுலபம். ஆனால் அவ்வாறு மூடி மறைக்க முயலாமல் ''நிலைமை மோசமாகத்தான் இருக்கிறது'' என்பதை அமைச்சர் ஸ்ரீ ஸ்வரண் ஸிங் ஒப்புக் கொண்டதற்கு அவரைப் பாராட்ட வேண்டும்.

சர்க்கார் தொழில்கள் பல ஆண்டுகளுக்குப் பின்னரும் இம்மாதிரி அவல நிலைமையிலிருப்பது சோஷலிஸக் கொள்கையில் நம்பிக்கை உள்ளவர்களுக்கும் எல்லாத் தொழில்களும் சர்க்காராலேயே நடத்தப்பட வேண்டும் என்று தீவிரமாக வாதிப்பவர்களுக்கும் எச்சரிக்கை போலாகும்.

# என்ன சேதி?

## ஒரு தேநீர் விருந்து

சென்னை மயிலாப்பூர் சுதந்திரக் கட்சியினர், புதிதாகச் சட்டசபைக்கு வந்துள்ள சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களையும் அவர்களுடன் இணைந்து செயலாற்ற இருக்கும் பார்வர்டு பிளாக் கட்சி அங்கத்தினர்களையும் பாராட்டி ஒரு தேநீர் விருந்தளித்தனர். அவ்வமயம் சட்ட சபை சுதந்திரக் கட்சியின் செலவுக்காகத் திரு சா. கணேசன் அவர்களிடம் ரூ. 1001 பணமுடிப்பு அளித்துத் தங்கள் அளவு கடந்த ஆர்வத்தைக் காண்பித்துக் கொண்டனர்.

பேராசிரியர் ரத்தினசுவாமி அவர்கள், ''ஆளும் கட்சி அங்கத்தினர்களுக்குத் தங்கள் ஆட்சியின் குறைகளைக் கூட எடுத்துச் சொல்ல முடியாத நிலை ஏற்படுவதால் சுதந்திரக் கட்சி அங்கத்தினர்களுக்குத் தங்கள் தொகுதி மக்கள் குறைகளை மட்டுமன்றி, காங்கிரஸ்காரர்கள் வெற்றி பெற்ற தொகுதி மக்கள் குறைகளையும் எடுத்துச் சொல்லிப் பரிகாரம் தேட வேண்டிய கடமை இருக்கிறது'' என்று கூறியது குறிப்பிடத்தக்கதாகும்.

ராஜாஜி தமது முடிவுரையில், எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் சட்டசபைக்குள்

இருக்கும்போது, தங்களை நாட்டு மக்கள் அனைவருடைய பிரதிநிதிகளாகப் பாவித்துப் பேச வேண்டும் என்றும் வெளியில் கட்சிக் கொள்கையை எடுத்துக் கூறி மக்களது ஆதரவைப் பெற வேண்டும் என்றும் கூறினார்.

இந்த இனிய விழாவை ஏற்பாடு செய்த திரு பன்னலாலும், அவரது நண்பர்களும் நமது பாராட்டுக் குரியவர்களாவார்கள்.

### பஸ் கட்டண விஷயம்

சென்னை நகரத்தில் ஓடும் சர்க்கார் பஸ்களில் குறைந்தபட்சக் கட்டணத்தை ஏழு நயா பைசாவிலிருந்து பத்து நயாபைசாவாக உயர்த்தும் உத்தேசத்தைச் சர்க்கார் கைவிடக் கூடும் என அறிந்து மகிழ்கிறோம். மீண்டும் என்றேனும் தசாம்ச முறையில் ஏதேனும் சௌகரியங்களைக் காட்டிக் கட்டணங்களை மாற்றி யமைக்கச் சர்க்கார் கருதுமானாலும் அதனால் பொது மக்களுக்குப் பிரதிகூலம் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

### சும்மாயிருப்பதேசுகம்!

சென்ற வாரத்துடன் முடிவடைந்த மக்கள் சபையின் 507 அங்கத்தினர்களில் 104 பேர் கடந்த ஐந்தாண்டுகளில் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையாம். மூன்று அங்கத்தினர்கள் மூன்று நிமிஷங்கள் மட்டுமே பேசினார்களாம். மற்றும் மூன்று பேர்கள் ஐந்து நிமிஷங்கள் மட்டுமே பேசினார்களாம்.

இவர்கள் நிச்சயமாக எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்க முடியாது. ஏனெனில் அவர்கள் பதவியைக் காப்பாற்றிக் கொள்ளவும், அடுத்த தேர்தலில் வாக்காளர்களை அணுகி வோட்டுக் கேட்பதற்கும், சட்ட சபையில் தாங்கள் புரிந்த சாதனைகளைத் தானே (பெரும்பாலும் பேச்சுக்கள்) எடுத்துக் காட்ட வேண்டும்? அவர்கள் பேசியே தீரவேண்டும்.

ஆளுங்கட்சியைச் சேர்ந்தவர்களுக்கு இந்தக் கவலையில்லை. வேண்டிய அளவு நேருஜி பேசி விடுகிறார். கட்சி டிக்கட்டு இடைத்துவிட்டால், தேர்தலில் வெற்றியும் தன்னால் கிட்டி விடுகிறது. ஆளுங் கட்சி அங்கத்தினர்கள் தனிப்படப் பேசினாலும் பேசாவிட்டாலும், நடைமுறை, செயல் முறை எல்லாம் கட்சியின் கொள்கை, கோட்பாடு, ஒழுங்குமுறை என்ற அடிப்படையில் நடைபெறுகின்றன. வோட்டுக்கள் போடும் சமயம் வரும் போதெல்லாம் கட்சியின் உத்தரவுப்படியே வோட்டுக்கள் அளிக்கப்படுகின்றன. இந் நிலையில் பேசிப் பயன் என்ன? உண்மை நிலையை எடுத்துச் சொல்ல வேண்டுமானால், கட்சியின் ஒழுங்குமுறைகளை மீறுதலாகும். ஏக கட்சி அரசாங்கத்தில் இதைக் காட்டிலும் வேறு எதை எதிர்பார்க்க முடியும்?

### வருந்துகிறோம்

ஐ. நா. ஸ்தாபனத்தில் வெகு சிறப்பாகப் பணியாற்றித் தமக்கும், தமது நாட்டுக்கும், குறிப்பாகத் தமிழகத்துக்கும் பெருமை தேடித் தந்த திரு டி. ஜி. நாராயணன் திடீரென்று மாரடைப்பினால் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். பத்திரிகைத் தொழிலில் புகுந்து ராஜதந்திரியின் பதவிக்கு உயர்ந்து, உலக ராஜதந்திரிகளின் பாராட்டுதல்களைப் பெற்ற கௌரவம் படைத்தவர். வெவ்வேறு நாடுகளின் அரசியல் நிலவரங்களை ஆராய்ந்து பார்த்து, பட்சபாதமின்றி மதிப்பிடும் சாமர்த்தியம் உள்ளவர். சிக்கலான உலக விவகாரங்களையும் அமைதியாகவும் சாமர்த்தியமாகவும் கையாளும் திறமை வாய்ந்தவர். சரளமாகப் பழகுவதற்கு உகந்தவர். சமீப ஆண்டுகளில் உலகத்தில் ஆயுத பரிகரணத்துக்காக அவர் விடாமுயற்சியுடன் தொடர்ந்து பாடுபட்டுக் கொண்டிருந்தார். அவருடைய பிரிவு அவருடைய நண்பர்களுக்கு மட்டுமின்றி உலகத்துக்கே ஏற்பட்ட ஒரு நஷ்டம். அவருடைய மரணத்தினால் சோகத்தில் ஆழ்ந்திருக்கும் அனைவருக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



— திரு டி. ஜி. நாராயணன்

### மதுரைக்கு விமானம்

ஏப்ரல் முதல் தேதியுடன் நின்றுவிட இருந்த சென்னை — மதுரை விமான ஷட்டில் சர்வீஸ் மேலும் பதினைந்து நாட்களுக்குச் செயல்பட இந்தியன் ஏர்லைன்ஸ்

கார்ப்பரேஷன் அனுமதித்திருக்கிறது. இதற்குள் தேவையான முயற்சிகளை மேற்கொண்டு இதை நிரந்தரமாக்கிக் கொள்ள வகை செய்து கொள்ள வேண்டியது அவசியம்.

சென்ற ஒரு வருஷ காலமாக இந்த ரூட்டில் சர்விஸைப் பரீட்சார்த்தமாக நடத்தி வந்திருக்கிறார்கள். இந்த மார்க்கத்தில் ஒரு நாளைக்கு இரண்டு சர்விஸுகள் இயங்கி வருகின்றன. போதிய பிரயாணிகள் இவ்வசதியைப் பயன்படுத்திக் கொள்ளாததால் வருஷத்துக்குப் பத்து லட்சம் ரூபாய் இந்தியன் ஏர்லைன்ஸ் ஸ்தாபனத்துக்கு நஷ்டம் ஏற்படுகிறதென்றும், இதை ஈடு செய்து கொடுக்கத் தமிழக சர்க்கார் முன்வந்தால், சர்விஸைத் தொடர்ந்து நடத்த முடியும் என்றும் அவர்கள் தெரிவித்தனர். நஷ்டத்தை ஏற்றுக் கொள்ளச் சென்னை சர்க்கார் முன் வரவில்லை. மத்திய அரசாங்கத்தின் பொறுப்பில், நடைபெறும் இந்தப் போக்குவரத்தின் லாப நஷ்டங்களை மத்திய சர்க்கார் ஏற்பதுதான் முறை என்று எண்ணத்தோன்றும். ஆனால் தமிழ் மக்களுக்கும் இந்த சர்விஸ் தொடர்ந்து நடப்பதில் மிகுந்த அக்கறை உண்டு என்பதை மறந்து விடக் கூடாது. மதுரை நகரம் தமிழ் நாட்டின் தலைநகரமாக விளங்கிச் சரித்திரப் பிரசித்தி பெற்றது. மீனாட்சியம்மன் ஆலயமுள்ள பெருமையால் தெய்வ பக்தி மிகுந்த மக்களுக்கும் பக்தர்களுக்கும், புனிதமான க்ஷேத்திரம். தொழில் வளர்ச்சியும் வேகமாக விரிவடைந்து இந்நகரம் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. இன்னமும் முன்னேறிக் கொண்டு வருகிறது. சென்னை மாநகருக்கு அடுத்தபடி மதுரையம்பதிதான் அதிகமான ஜனத்தொகையுள்ள நகரம். இப்படிப் பல விதத்திலும், முக்கியத்துவம் உள்ள மதுரைக்கும், ராஜ்யத் தலைநகரான சென்னைக்கும் இடையே விமானப் போக்குவரத்து நீடித்து நடப்பது முக்கியமே ஆகும். மத்திய சர்க்கார் ஒரு வேளை இதில் அசிரத்தை காட்டினாலும் தமிழக சர்க்கார் தீவிர கவனம் செலுத்தி அவசியமானால் நஷ்டத்தை மத்திய சர்க்காருடன் பகிர்ந்து கொண்டாவது இந்த சர்விஸைத் துண்டித்துப் போக விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்



# விருதுபெறும் விற்பன்னர்கள்

ரசிகத் தன்மை உள்ளவர்களுக்கு மட்டுமே வாக்குரிமை வழங்கி ஒரு கலைப் பார்லிமெண்ட் ஏற்படுத்தினால் அதில் நாட்டின் பத்து சதவிகித மக்களே வாழும் தமிழகத்துக்கு ஏறக்குறைய 'மெஜாரிட்டி' அந்தஸ்தே கிடைக்கும். இன்று கலைப் பார்லிமெண்டைப் போல் செயலாற்றி வரும் சங்கீத நாடக அகாடெமியானது தமிழகத்தின் இந்தக் கலைச் சிறப்பை உணர்ந்திருக்கிறது. இந்த ஆண்டு ஜனாதிபதியின் பரிசைப் பெறுவதற்காக அது தேர்ந்தெடுத்துள்ள ஒன்பது பேரில் நால்வர் தமிழகத்தவர். இந்த நால்வரில் மாதர் குலத்துக்குச் சரிநிகர் சமான ஸ்தானம் கிடைத்திருப்பதும் குறிப்பிட்டு மகிழவேண்டிய விஷயமாகும்.

கர்நாடக சங்கீத வாய்ப் பாட்டுக்காக ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள் விருது பெறுகிறார். காஞ்சி அருகேயுள்ள தாமலைச் சேர்ந்த ஸ்ரீமதி பட்டம்மாளின் பாட்டில் காஞ்சிப் பட்டின் அழுத்தமும், வனப்பும் காணப்படும் என்பது பிரசித்தம். அலை விசாத கடலின் ஆழமும், தெளிவும், அமைதியும் கொண்டது ஸ்ரீமதி பட்டம்மாளின் இசை. இருபத்தெட்டாண்டுகளாக முன்னணி வித்வாம்ஸினியாகக் கச்சேரி செய்து வருகிறார் ஸ்ரீமதி பட்டம்மாள். அதற்குப் பல ஆண்டுகள் முன்பு பதினோராவது வயதிலேயே அவர் ரிகார்டு கொடுத்து ஒரு 'ரிகார்டு'ம் ஏற்படுத்தி யிருப்பது பலருக்குத் தெரியும்.

தமக்குச் சங்கீதத்தின் ஓரிரு அம்சத்தை எடுத்துச் சொன்னவர்களையும் கூடக் குருவாகவே கருதும் இந்த வித்வாம்ஸினி முக்கியமாகச் சுய உழைப்பினாலேயே தம் இசைக்கு மெருகு ஊட்டிக் கொண்டார். ஸ்ரீ அரியக்குடி அவர்கள் கூறியது போல் இசைப் புலமைக்காகப் 'பாடுபட்ட(அ)ம்மாள்' அவர். ஸ்ரீமதி பட்டம்மாளின் தனிச் சிறப்பு, சாகித்தியங்

களின் உச்சாரணத்துக்கு அவர் அளிக்கும் கவனமாகும். சிறுமியாக இருந்தபோது தீக்ஷிதர் கிருதி ஒன்றை இவர் தைரியமாகப் பாடிய விதரணையைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களின் பேரரான ஸ்ரீ அம்பி தீக்ஷிதர் அவர்கள் தாமாகவே முன் வந்து இவருக்கு இரண்டு தீக்ஷிதர் க்ருதிகளைச் சொல்லி வைத்திருக்கிறார்!

ஸ்ரீமதி பட்டம்மாளது வித்வத்தோடு இனிமையும் விநயத்தையும் போற்றி அவற்றுக்குக் கிடைத்துள்ள விருதை வாழ்த்துகிறோம்.

கர்நாடக வாத்திய இசைக்கான கௌரவம் நாதஸ்வர வித்வான் திருவீழிமிழலை ஸ்ரீ சுப்பிரமணியப் பிள்ளைக்குக் கிடைத்திருக்கிறது. திருவீழிமிழலை சகோதரர்களில் இவர் வயதில் ஸீனியர்; வித்தையிலும் ஸீனியர். சகோதரர் ஸ்ரீ நடராஜ சுந்தரம் பிள்ளை அவர்களுடன் இருபத்தைந்தாண்டுகள் சக்கைப் போடாகப் பொழிந்து தள்ளியிருக்கிறார். உருப்படிகளைக் கவனமாகப் பாடம் செய்து கொண்டு அதன் பின்பே அவற்றை வாத்தியத்தில் இசைப்பதால் வாய்ப்பாட்டைக் கேட்கிறோமோ என்ற பிரமையை உண்டாக்குபவர். சவுக்க கால வாசிப்பில் புகழ் பெற்றவர். லய வித்தியாசங்களில் தனி இடம் பெற்றவர். ஏழெட்டு ஆண்டுகள் திருவையாறு தியாகராஜ உத்ஸவத்தை முன்நின்று நடத்தி வைத்தவர். நாத விருந்தளிக்கும் இந்த வித்வான் 1956-ம் ஆண்டு மியூஸிக் அகாடெமியின் சங்கீத கலாநிதி விருதும் பெற்றிருக்கிறார்.

பரத நாட்டியத்துக்கான பரிசைப் பெறுகிறார் திருநெல்வேலி ஸ்ரீமதி முத்து ரத்தினம்பாள் அவர்கள். இன்றைய கலை உலகம் இவரைப் பற்றி அதிகம் அறியாது. ஆனால் ஒரு பொன் விழாக்காலம் பின் சென்று பார்த்தால், இவர் பெற்றிருந்த கியாதி தெரியும். தனி வாழ்வுக்காகக் கலை வாழ்வைத் துறக்க மறுத்து முப்பதாண்டுகளுக்கு மேலாகத் துணிவுடன் பரதமாடியவர் இவர். சிதம்பரம் சுப்பிரமணிய நட்டுவனார் என்பவர் பின் பாட்டுப் பாடும்போது நவ நவமாகச் சங்கதிகளை அடுக்கிக் கொண்டு போக அப்போதைக்கப்போதே மனோதர்மத்துடனும், கற்பனையுடனும் அவற்றுக்கு முத்து ரத்தினம்பாள் அபிநயிப்பது முத்தும் ரத்தினமும் சேர்ந்தாற்போல் மிளிருமாம். இன்று இந்த எழுபது பிராயத்து மூதாட்டியின் ஜீவனத்துக்குச் சென்னை சங்கீத நாடக சங்கமே உதவி புரிந்து வருகிறது.

நாடக நடிகர், டைரக்டர், தயாரிப்பாளர், திரைப்பட நடிகர் என்று பல விதத்தில் பரிசுபெறத் தகுதிபெற்ற ஸ்ரீ டி. கே. சண்முகம் சிறந்த மேடை நடிகருக்குரிய அகாடெமிப் பரிசைப் பெறுகிறார். சுமார் ஐம்பது வயதான ஸ்ரீ சண்முகத்துக்கு நாடக மேடையை நாற்பத்தைந்து ஆண்டுகளாகத் தெரியும். திரைப்பட உலகில் 'மேனகா' மூலம் புகுந்து அந்தப் படத்துக்குப் பரிசு வாங்கித் தந்த சண்முகம் அவர்கள் 1953-ம் ஆண்டு 'மனிதன்' படத்தில் மிகச் சிறப்பாக நடித்துத் தாமும் பரிசு பெற்றார். 1960-ம் ஆண்டு சிறந்த நாடக நடிகர் என்று ராஜ்ய சங்கீத நாடக சங்கம் இவருக்கு அளித்தபரிசே இன்று தேசிய அளவில் பிரமோஷன் பெற்றிருக்கிறது.

ஜனாதிபதி விருதுகளில் ஒன்பதில் நாலு தமிழ் நாட்டுக்கு என்றால் சங்கீத நாடக அகாடெமியின் கௌரவ உறுப்பினராக (ஃபெல்லோ) தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நால்வரில் இருவரும் தமிழகத்தினராவர்.

கௌரவமும் கண்ணியமும் நிரம்ப ஹரி கதை செய்யும் திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் அவர்கள் இவர்களில் ஒருவர். ஸ்ரீ பாகவதர் அவர்களின் ஹரி கதையில், கதை அம்சமும், நாடக உத்தியும், சங்கீதமும், ஹாஸ்யமும், மொழிப் புலமையும் பஞ்சாமிருதமாகச் சேர்ந்து இனிக்கும். திலுதிலுவென்று மின்னல் கொடி போல் சில விநாடிகளுக்குள் ராகங்களின் எழிலைக் காட்டிப் புல்லரிக்கச் செய்வது இவரது இசை. ஜனரஞ்சகம் என்ற பெயரில் கதையின் ஓட்டத்தை முறிக்காமல், அதற்கு அநுகுணமாகவே சென்று, சிந்திக்க வைத்துச் சிரிக்கச் செய்யும் உயர்ந்த ஹாஸ்யம் ஸ்ரீ பாகவதர் அவர்களுடையது. பகவான் மகிமையை உணர்ந்து சொல்வதால்தானே ஹரிகதை சொல்பவர்கள் பாகவதர் எனப் பெயர் பெற்றிருக்கிறார்கள்? இதற்கேற்ப இவரது இதர சிறப்புக்களெல்லாம் இவருடைய பக்திக்கு அடங்கியே சென்று, அதனாலேயே ரசம் பெறும். அறுபத்துமூன்று பிராயமான ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் அவர்களுக்குக் கிடைத்துள்ள வெகுமானம் ஹரிகதைக் கலைக்கு நாடு அளிக்கும் மரியாதையாகும்.

'லாஸ்ட் பட் நாட் லீஸ்ட்' என்ற முறையில் கடைசியாக பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களைப் பற்றி எழுதுகிறோம். இவருடைய ஊர் பாபநாசம் இல்லை; பேரும் சிவன் அல்ல. பாபநாசத்தில் இருந்தபோது பிரசித்தி பெற்றதாலும், சிவத் தலங்கள் தோறும் சென்று திருவிழாக் காலங்களில் பஜனைகள் செய்ததாலும் 'போலகம் ராமையா' பாபநாசம் சிவன் ஆனார்.

பாடல் இயற்றும் ஆற்றல் தன்னால் இவரை இவரது பதினைந்தாம் பிராயத்தில் வந்தடைந்தது. அதிலிருந்து 57 ஆண்டுகளாகச் சொல்லழகும், பொருளாழமும், ராக லயச் சிறப்பும் கொண்ட தீந்தமிழ்ப் பாடல்களாகப் பொழிந்து வருகிறார் இவர். தமிழிசைக்காக இயக்கம் தொடங்கியதற்கு எவ்வளவோ காலம் முன்னரே நீலகண்ட சிவனின் அருமையான தமிழ்ப் பாடல்களைத் தமிழகத்தில் பரப்பினார். இன்று இவரது சொந்தப் பாடல்களில் சுமார் நானூறு வழக்கத்தில் உள்ளன. சாஸ்திரிய சங்கீதத்தைச் சினிமாவிலும் சிறக்கச் செய்தவர் சிவன். பண் பாடிப் பக்தி வளர்க்கும் ஸ்ரீ சிவனுக்கு 'சிவபுண்ணிய கானமணி' என்று ஸ்ரீ காமகோடி பெரியவர்கள் விருதளித்து வாழ்த்தியுள்ளார். சங்கீத நாடக அகாடெமியில் இந்த சாகித்தியகர்த்தா கௌரவ உறுப்பினராவதால் அகாடெமியே கௌரவம் பெற்றிருப்பதாகக் கருதுகிறோம்.

அகாடெமியினால் கௌரவிக்கப்பட்டுள்ள உஸ்தாத் படே குலாம் அலிகான், பண்டிட் ரவிசங்கர், கலியாண் புர்க்கார், திருப்தி மித்ரா, அல்காஸ்வர், கோபேசுவர் பானர்ஜி, உதயசங்கர் ஆகிய வட இந்தியக் கலைஞர்களையும் பாராட்டி மகிழ்கிறோம்.

# துளிதுளியாக தேன் அமிர்தம்

சுருசுருப்பான சிறிய தேனீ புஷ்பத்திலிருந்து புஷ்பத்திற்கு பறந்துசென்று தேனை துளித்துளியாக சேகரித்து சேமித்து வைக்கிறது.

தேனை சேகரிக்கும்போதே, மலருக்கு பூந்தாதுவையும் கொண்டு வருகிறது. இதனால் அதிக விதைகளும், மலர்களும் கிடைக்கின்றன.

இம்மாதிரியே தேசிய சேமிப்பு ஸ்தாபனமும் மக்களின் சேமிப்பை சேகரித்து நம் அபிவிருத்தித் திட்டங்கள் நிறைவேற உதவுகிறது. இதனால் மக்களுக்கு நன்மையும் ஏற்படுகிறது.

சிறுசேமிப்பு செக்யூரிட்டிகள் மற்றும் கணக்குகள் பற்றிய விவரங்களை எந்த தபால் நிலையத்தினிடமிருந்தோ அல்லது கீழ்க்கண்ட ஸ்தாபனத்தின் உத்தியோகஸ்தர்களிடமிருந்தோ பெற்றுக்கொள்ளலாம்.



## தேசீய சேமிப்பு ஸ்தாபனம்

DA 61/746

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி





## 14. வழிகள் பிரிகின்றன

தான் இட்ட கோலத்தைத் தானே மிதித்துக் கொண்டு வீட்டுக்குள்ளே திரும்பிப்போய் விட்டாள் முல்லை. அவளுடைய சொல்லம்புகளால் தாக்கப் பெற்றுத் தலை தாழ்ந்து போய்த் தன் மனமும் உணர்வுகளும் அவளுக்குப் பட்ட நன்றிக் கடனைத் தீர்க்க வழியின்றி முடிவு தெரியாமல் மனத்திலுள்ளேயே அழுது புலம்பிடத் தயங்கி நின்றான் இளங்குமரன். அவனுடைய கைகளில் அவள் திருப்பிக் கொடுத்து விட்டுப் போயிருந்த அந்தப் பழைய ஏடும் காய்ந்த பூவும் மலையத்தனை சுமையாய் மாறிக் கொண்டு கனத்தன.

'நன்றிச் சுமை இவ்வளவு கனமானதா?' என்று எண்ணியபடியே கையிலிருந்த பொருள்களையும் தரையிலிருந்த முடிவடையாத கோலத்தையும் பார்த்துக் கொண்டே நின்றான் அவன். தனக்குள்ளே மட்டும் கேட்கிற குரலில் அவன் மனம் பெரிதாய் ஓலமிட்டு அழுதது.



தாழ்ந்து போன தலை நிமிராமல் முடிவற்ற பல கணங்களாக அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்தக் கோலத்தை மிதித்துக் கொண்டு இன்னும் நான்கு கால்கள் உள்ளேயிருந்து முன்னால் நடந்து வந்தன. வருகிறவர்கள் யார் என்று அறிவதற்காக அவன் எதிரே நிமிர்ந்து பார்த்தான். உள்ளே யிருந்து வளநாடுடையாரும், அவர் மகன் கதக்கண்ணனும் வந்து நின்று கொண்டிருந்தார்கள்.



அந்தக் கிழவருடைய கண்கள் அவனை நோக்கி நெருப்புக் கோளங்களாகக் கனன்றன. மீசை துடிதுடித்தது. இந்த முதுமையில் இவ்வளவு கோபத்தையும் கொதிப்பையும் தாங்கிக் கொள்ள ஆற்றலில்லை என்பதுபோல்











அவருடைய உடல் நடுங்கியது. இந்த நிலையில் அந்தக் கிழட்டுச் சிங்கத்தைப் பார்ப்பதற்கே அவனுக்குப் பயமாயிருந்தது. தன் நாவிலிருந்த தைரியத்தையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு பேசுவது போல அவருடைய கண்களை நேருக்கு நேர் பாராமல் மூன்றே மூன்று வார்த்தைகளை ஒவ்வொன்றாக எண்ணி அவரிடம் பேசினான் இளங்குமரன்:—

''நீங்கள் என்னை மன்னித்துவிட வேண்டும்....''

''உன்னை நான் ஒருகாலும் மன்னிக்க முடியாது. நீ பெரிய ஞானியாயிருக்கலாம். திருநாங்கூரில் பல ஆண்டுகள் புற உலக நினைவே இன்றிக் கல்வி கற்றிருக்கலாம். ஆனால் உனக்கு எல்லாவற்றையும் கற்பித்த உன்னுடைய குருவினிடம் நீ ஒன்றை மட்டும் கற்க மறந்துவிட்டாய். அதற்குப் பெயர் நன்றி.''

''அதைக் கற்க இன்னொரு பிறவி எடுக்கிறேன் ஐயா! இந்தப் பிறவியில் அது முடியாமல்தான் போய் விட்டது. நினைத்துப் பார்த்தால் நான் உங்கள் குடும்பத்துக்கும் உங்களுக்கும் நிறைய நன்றிக் கடன் பட்டிருப்பது எனக்கே தெரிகிறது. ஆனால் அந்தக் கடனை எந்த விதத்தில் நான் தீர்க்க வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களோ; அதே விதத்தில் தீர்ப்பதற்கு இந்த பிறவியில் நான் இயலாதவனாகிவிட்டேன். இந்தப் பிறவியில் என்னுடைய அநுபவங்கள் எல்லாம் சத்திய சோதனைகளாகிவிட்டன. சத்திய சோதனைகளில் இறங்குகிறவர்கள் தங்களுக்கு மிகவும் வேண்டியவர்களைக் கூட ஏமாறச் செய்து விடும்படியான சந்தர்ப்பங்களைத் தவிர்க்க முடியாமல் அடைந்து தான் ஆக வேண்டியிருக்கிறது. என்னுடைய குலப்பகைவரான எதிரியை நான் பழிவாங்கும் நோக்குடன் பகை திரட்டிப் புறப்பட மறுத்தபோது என் மாமன் மகனுடைய குலபதிக்கு அது பெரிய ஏமாற்றமாயிருந்தது. என் எதிரியை நான் சந்தித்து நியாயம் கேட்கிற முறையில் கொடுமையும் வன்மையும் வேண்டும் என்று எனக்குத் துணையாகப் பின் தொடர்ந்த நீலநாகரை நான் மறுத்துத் திருப்பி அனுப்பிய போது அவருக்கு ஏமாற்றமாயிருந்தது. உங்கள் மகள் முல்லையை நான் மணம் புரிந்து கொள்ளாமற் போனது உங்களுக்கு ஏமாற்ற மாயிருக்கிறது. சத்தியத்தை ஏமாற்றக்கூடாதென்று நாம் ஏதோசெய்தால் அதன் மறுபுறம் அந்தச் செய்கையால் ஏமாறிய மனிதர்கள் வந்து நிற்பதைக் காண்கிறோம். மனிதர்களுக்கு மட்டும் திருப்தியாக நடந்து கொண்டால் சத்தியத்தை ஏமாற்றியதாக முடிகிறது. சத்தியத்துக்குத் திருப்தியாக நடந்து கொண்டு விட்டதாக நாம் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தால் அந்தச் சமயத்தில் அதே காரணத்தால் தாங்கள் ஏமாறியதாகச் சொல்லிக் கொண்டு மனிதர்கள் வந்து கண் கலங்கி நிற்கிறார்கள்.''....

''உபதேசம் போதும்! இவற்றை எல்லாம் புரிந்து கொள்ளுவதற்கு நாங்கள்கற்றுத்துறை போகவில்லை. பொது மனிதர்களையும் பொதுவான மனித உறவுகளையும் தவிர எங்களுக்கு வேறு ஒன்றும் தெரியாது. எங்களுடைய வாழ்க்கையிலே இரண்டே இரண்டு எல்லைகள் தான் உண்டு. ஒன்று வீரம். மற்றொன்று அன்பு. இந்தக் குடும்பத்தில் எவரும் இந்த விநாடிவரை வீரத்தில் ஏமாறியதில்லை. ஆனால் இன்று இந்தக் குடும்பத்துப் பெண்ணொருத்தி அன்பில் ஏமாறி விட்டாள். வெற்றியைத் தவிர வேறு தளர்ச்சிகளைக் கண்டறியாத இந்த வீரக் குடியின் வாழ்க்கையில் இன்று என் மகள் காதலிலே தோற்றுப் போய் வீழ்ந்து விட்டாள். இன்று காலையில் உலகத்துக் கெல்லாம் பொழுது விடிந்தது. என் மகளுக்கு மட்டும் இருண்டு போய் விட்டது. உன்னுடைய இதயத்துக்கு உணரும் சக்தி இருந்தால் அறுபட்டு வீழ்ந்த பூங்கொடி போல உள்ளே அவள் குமுறிக் குமுறி அழுது கொண்டிருப்பதை நீயும் உணர முடியும். ஆனால் நீ கல்நெஞ்சன். பகைவர்களுக்கு நல்லவனாகி உறவினர்களை ஏமாற்றும் வஞ்சகன்.

''நீ மணிபல்லவத்திலிருந்து திரும்பி வந்து விட்ட செய்தியை நான் இங்கு வந்து கூறியவுடனே என் மகள் இன்று காலை இந்தவீட்டின் படிகளில் நீ ஏறி வருவாய் என்று ஆவலோடு எதிர்பார்த்து நேற்றிரவிலிருந்தே எப்போது விடியும் எப்போது விடியும் என்று விடிவதற்காகவே இரவெல்லாம் கண் விழித்துக் காத்திருந்து விடிந்ததும் வாயிலில் தண்ணீர் தெளித்துக் கோலமிட்டுக் கொண்டிருந்தாள். அந்தக் கோலம் இதோ இப்படி முடியாமல் முடிந்து விட்டது.''

''.........................''

சிறிது நேரம் மேலே ஒன்றும் பேசவராத மௌனத் தவிப்புக்குப் பின் வளநாடுடையார் முகத்தைத் திருப்பிக் கொண்டு வெறுத்தாற் போல உள்ளே போய் விட்டார். மீண்டும் அவன் முகத்தைப்பார்த்து அவனோடு பேசும் விருப்பமே இல்லாதவராகத் திரும்பிப் போவது போலிருந்தது அவர் நடை. அப்படிப் போவதற்கு முன் இளங்குமரன் தன் வாழ்க்கைத் துணைவியோடு அவரை வணங்க முற்பட்டதுவும் வீணாயிற்று. அந்த வணக்கத்தையும் ஏற்றுக் கொள்ளாமலே அவர் விரைந்து உள்ளே போய் விட்டார்.

கதக்கண்ணன் மட்டும் தன்னுடைய அகன்ற பெரிய விழிகளிலே கோபம் கனல இளங்குமரனையே இமையாமல் பார்த்துக் கொண்டு நின்றான். அவனுடைய அந்தப் பார்வை இளங்குமரனைச் சுட்டெரித்தது. அவன் கூசி நின்றான். சிறிது நேரத்தில் தன் தந்தையைப் போலவே கதக்கண்ணனும் வெறுப்போடு உள்ளே திரும்பிய போது பின்புறமிருந்து பழைய நண்பனுகிய இளங்குமரனின் நெகிழ்ந்த குரல் அவனைத் தடுத்து நிறுத்தியது:—

''கதக்கண்ணு! உன் தந்தையைப்போலவே நீயும் என்னை மன்னிக்க விரும்பவில்லையென்று தெரிகிறது. உன்னாலும் என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை. பொறுத்துக் கொள்ளவும் முடியவில்லை. நீலநாகருடைய படைக் கோட்டத்தில் நீயும் நானும் ஒருசாலை மாணவர்களாக இருந்து பயின்ற நாட்களும், அப்போது தொடங்கிப் பழகிய நட்பும், உறவுகளும் மறந்து இப்போது இந்த ஒரே ஒரு கணத்தில் என்னை வெறுத்துப்பிரிகிற துணிவை உன்னால் எவ்வாறு அடைய முடிந்ததோ? இதைக் கண்டு நான் வியப்படைகிறேன். குடிவழி வந்த பரம்பரை வீரம் கடுமையான துணிவையும்உனக்குத்தந்திருக்கிறதோ என்னவோ? உன்னுடைய இந்த வெறுப்புக்காகவும் நான் வருத்தப்படவில்லை. நீங்கள் வெறும் மனித உறவுகளுக்காக மட்டுமே நட்புச் செய்யத்

தெரிந்தவர்கள். அந்த உறவுகள் உடையும் போது உங்கள் மனங்களும் மாறி விடுகின்றன. உங்களுடைய வாழ்வில் வீரமும் அன்புமே உங்களுக்கு எல்லைகள். அதில் ஓர் எல்லையை அழிப்பதற்கு என்னையறியாமலே நான் காரணமாயிருந்திருக்கிறேன். எனக்குப் புரிகிறது. அதற்காக என் மனமும் நோகிறது. மறுபடியும் பிறந்து இந்தப் பழங்கடனைத் தீர்க்க வேண்டும் என்று ஆசைப்படுவது தவிர இப்போது நான் வேறொன்றும் முடியாதவனாக இருக்கிறேன். இந்த நிலையில் என்னுடைய வறுமை எனக்கே தெரிகிறது.

''முடிந்தால் உன் தங்கை முல்லையிடம், சொல்! நான் என்னுடைய தோள்களிலும் மார்பிலும் பட்டுக் கொண்டு வந்த புண்களை எல்லாம் முன்பு ஒரு காலத்தில் அவள் தன் கைகளால் மருந்திட்டு ஆற்றியிருக்கிறாள். ஆனால் இன்று இந்தக் காலை வேளையில் அவளே என் மனத்தில் உண்டாக்கியிருக்கிற புண்ணை எங்கே எப்படி எந்தப் பிறவியில் ஆற்றிக் கொள்வது என்ற வேதனையோடுதான் நான் போகிறேன் என்று சொல். இதைத் தவிர இப்போது அவளுக்குச் சொல்ல என்னிடம் வேறு ஒன்றுமில்லை.''

இவ்வாறு கூறிவிட்டுச் சுரமஞ்சரியோடு தன் வழியில் விலகி நடந்தான் இளங்குமரன். வீதியில் சிறிது தொலைவு சென்ற பின் அவன் மறுபடி திரும்பிப் பார்த்த போது வரிசையாய் எல்லா வீடுகளின் முன்பும் முழுமையாயிருந்த கோலத்துக்கு நடுவே அந்த ஒரே ஒரு கோலம் மட்டும் அரை குறையாயிருந்து தனியாய்த் தெரிந்தது. ஆம்! அந்தக் கோலம் முடியவில்லை. அதைத் தொடங்கியவளுக்கே எப்படி முடிப்பதென்று தெரியவில்லை.

அந்த வீதியின் கோடியில் திரும்பிய போது அதுவரை அடக்கிக் கொண்டிருந்த துயரம் கட்டுடைந்து வெடித்தாற் போல அழுகை பொங்கும் குரலில் சுரமஞ்சரி அவனிடம் கூறினாள்:-

''நான் ஒருத்தி உங்கள் வாழ்வில் குறுக்கிட்டு உங்களை அடைந்ததால் உங்களுக்கு எவ்வளவோ துன்பங்களை யெல்லாம் உண்டாக்கி விட்டேன்.''

இதைக் கேட்டு அவன் சிரித்தான்.

''நானே விரும்பிஏற்றுக் கொண்ட துன்பம் தானே இது? என்னைத் தோற்கக் கொடுத்து எனக்கு இன்பமாக நானே அங்கீகரித்துக் கொண்ட துன்பம் நீ! இப்போது மட்டும் திடீரென்று உன் மனத்தில் ஏன் இந்தக் கலக்கம் ஏற்படுகிறது? உனக்குக் கிடைத்த வெற்றிக்காக நீயே பயப்படுகிறாயா? என்னோடு வாதிட்டு முறையாக நீ என்னை வென்றதாக நினைத்துப் பெருமை கொள்வதை விட்டு விட்டுப் பேதை போல் நீ ஏன் வருந்துகிறாய்? உன் மேல் எனக்கு ஒரு கோபமும் இல்லை. உனக்குத் தோற்ற இடமே என்னுடைய வாழ்வில் சத்திய சோதனையின் நிறைவான இடமாகவும் இருக்கலாம். அந்த விநாடியில் நான் என்னுடைய சத்தியத்துக்கு மிகவும் அருகே நின்றிருக்கிறேன். என்னுடைய குணங்கள் தோல்வியிலும் நான் வெற்றியே பெற உதவியிருக்கின்றன. ஆற்றோடு மிதந்து வந்த பூமாலை நீராடிக் கொண்டிருந்தவன் மூழ்கி யெழுந்தபோது அவனுக்கு நோக்கமும் எண்ணமும் இல்லாதபடியே அவன் கழுத்தில் நேர்ந்தது போலத் தான் எனக்கு நீயும் கிடைத்திருக்கிறாய்.''

''அப்படி உங்களை அடைந்தது என் பாக்கியம்தான்.''

பேசிக்கொண்டே நடந்துநடந்து அவர்கள் காவிரிக் கரையை அடைந்திருந்தார்கள். பொழுது நன்றாகப் புலர்ந்து விட்டது. காவிரிக் கரை மரக் கூட்டங்களில் இளம் கதிரொளி பொன் வெயில் தூவிக் கொண்டிருந்தது.

''இப்படித் தனியாக ஓர் ஆண்பிள்ளையோடு கால்கள் நோவ நடந்து துணை செய்வோரும், தோழிமாரும் இன்றி வந்து காவிரியில் நீராடும் சந்தர்ப்பம் இதற்கு முன் உன் வாழ்வில் என்றுமே நேர்ந்திருக்காது சுரமஞ்சரி.''

''இன்று இவ்வளவு பெரிய துணையோடு நேர வேண்டுமென்பதற்காகவே இதுவரை இப்படி நேராமல் இருந்தது போலும்.''

''தெரிந்து கொள்! இப்படி எதிர்பாராதது நேர்ந்துகொண்டே இருப்பதுதான் வாழ்க்கை. இந்த வாழ்க்கை வீதியில் நம்மோடு நெருங்கிய துணையாக வரத் தவிப்பவர்கள் கூட ஏதேதோ கோப தாபங்களால் பாதி வழியிலேயே நின்று போகிறார்கள். துணையாய் எப்போது எதற்காக வந்தார்கள் என்று தெரியாமல் நாமே சிலரை மறந்து விடுகிறோம். கடைசி வரை உடன் வருவதற்கு எவரேனும் சிலரால்தான் முடிகிறது. இந்த யாத்திரையில் நாமே சிலரை நடுவழியில் தவிக்கத் தவிக்க விட்டு விட்டு மேலே நடந்து வந்து விடுகிறோம். அதற்காகக் கலங்கி அந்த இடத்திலேயே நின்று அழிந்து கொண்டிருக்கவும் முடிவதில்லை. கலங்காமல் மேலே நடந்து விடவும் தயக்கமாயிருக்கிறது. அந்தத் தயக்கம், 'நாம் இன்னும் மனிதர்கள் தான்' என்பதை நமக்கு நினைவு படுத்துகிறது. நம்முடைய கல்வி, மனப்பக்குவம், பயிற்சியடைந்த உணர்வுகள், எல்லாம் அந்தவிநாடிகளில் நம்மைக் கைவிட்டு விடுகின்றன. நாம் முயன்று சேர்த்துக் கொண்ட ஞானங்கள் எல்லாம் நம்மிடமிருந்து பிரிந்து நின்றுகொண்டு, 'அதோ அதுதான் உன் பிறப்பிலேயே நீ கொணர்ந்த சொந்த ஞானம்' என்று நம்மிடம் மீதமிருக்கும் புத்தியைச் சுட்டிக் காட்டிச் சிரிக்கின்றன. ஈரேழு பதினான்கு புவனங்களையும் ஆட்டிப் படைக்கிற தவ வலிமை பெற்ற பெரு முனிவர்களும் இந்த விதமான தளர்ச்சியைத் தங்கள் வாழ்க்கையில் சந்தித்திருக்கிறார்கள்.''

''நீங்கள் கூறுவது எனக்குப் புரியவில்லை. ஆனால் நிறைகுடமாகிய உங்கள் மனமும் இப்போது எதற்காகவோ கலங்கித் தவிக்கிறதென்று மட்டும் புரிகிறது.''

''உனக்கு அவ்வளவு புரிந்தால் போதும் சுரமஞ்சரி!'' என்று கூறிவிட்டுக் காவிரி நீரில் குளிப்பதற்கு இறங்கினான் இளங்குமரன். அவளும் இறங்கினாள்.

இருவரும் நீராடிக் கரையேறிய வேளையில் ''இப்போது என் கண்கள் எதிரே காண்பது கனவில்லையே?'' என்று பழகிய குரல் ஒன்று மிக அருகிலிருந்து அவர்களைக் கேட்டது. இளங்குமரன், சுரமஞ்சரி இருவருமே அந்தக் குரலைப் புரிந்து கொண்டு நிமிர்ந்து பார்த்தார்கள்.

மேலேயிருந்து ஓவியன் மணிமார்பனும், அவன் மனைவி பதுமையும் காவிரியில் நீராடுவதற்காகப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்தார்கள். நீண்ட நாட்களுக்குப் பின் ஓவியன் மணிமார்பனைச் சந்தித்த சுரமஞ்சரிக்கு அவனிடம் பேசவும், நலம் தெரிந்து கொள்ளவும் ஆவல் எழுந்தது. அந்த ஆவலும் நாணமும் போராடக் கணவனோடு ஒன்றினாற் போல நின்றாள் அவள். நினைத்த சொற்களைப் பேச வரவில்லை. அதற்குள் ஓவியனே அவர்களை நோக்கிப் பேசினான்:–

''ஐயா! நீங்கள் இருவரும் இப்படியே சிறிது நேரம் நில்லுங்கள். இந்தக் காட்சி என் கண்களில் நிறையட்டும். உமையொரு பாகனாகச் சிவபெருமான் நிற்பது போல் இந்தக் காலை வேளையில் எங்களுக்குக் காட்சியளிக்கிறீர்கள். இந்தப் புனிதமான வைகறை வேளையில் இதைக் கண்ட கண்கள் வாழ்க! ஓவியத்தில் பலமுறை இப்படி உங்களை ஒன்று சேர்த்து எழுதி மகிழ்ந்திருக்கிறேன் நான். எனக்குத் திருமணமாகிய சில தினங்களில் நானும் என் மனைவியும் இயற்கை வளம் காண்பதற்காகப் பொதிகைமலைக்கு மகிழ்ச்சி உலாப் புறப்பட்டுப் போயிருந்தோம். அன்று என் மனைவி பதுமை என் மனத்துக்குப் பெரிதும் விருப்பமான ஓவியம் எதையாவது நான் அந்த மலைச் சூழலில் வைத்து வரைய வேண்டுமென்று என்னைக் கேட்டுக் கொண்டாள். என் மனத்தில் முதல் முறையாக நான் பூம்புகாருக்கு வந்து திரும்பிய காலத்திலிருந்து நாளும் இடை விடாமல் எழுதிக் கொண்டிருக்கிற ஓவியம் எதுவோ அதையே அன்று பொதிகை மலையில் அவளுக்கும் வரைந்து காண்பித்தேன். அந்த ஓவியத்தில் காதலர் இருவர் கற்பனையாய் ஒன்று சேர்ந்திருந்தனர். அவர்கள் மெய்யாகவே ஒன்று சேர்ந்திருப்பதை இன்று நானும் என் மனைவியும் இப்போது எங்கள் கண்ணெதிரே காண்கிறோம். நீங்கள் இருவரும் வாழ்க்கைப் படகில் இன்று ஒன்றாகவே பயணம் செய்யத் தொடங்கி யிருக்கிறீர்கள். காதற் படகில் நீங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து பயணம் செய்வதாக நான் என் மனைவியிடம் முன்பே வரைந்து காட்டி மகிழ்ந்த ஓவியங்கள்கணக்கற்றவை.''



''மணிமார்பா! நீ பரிசுத்தமான கலைஞன். அதனால்தான் உன்னுடைய பழைய கற்பனைகள் எல்லாம் இன்று உன் கண்களே காணும்படி மெய்யாக மலர்கின்றன. இதோ என் பக்கத்தில் நாணி நிற்கிற பெருமாளிகைப் பெண் இப்படி என்னை அடைந்ததற்காக நன்றி செலுத்த வேண்டியவர்கள் யாராவது இருப்பார்களானால் அது நீ மட்டும்தான். நீண்ட காலத்துக்கு முன்பு அன்று அந்த இந்திர விழாக் கூட்டத்தில் நீ என்னைச் சந்தித்த போது என் உருவத்தை ஒரே ஒரு முறை வரைந்து கொள்வதற்கு மட்டும் உன்னிடம் நான் இணங்கினேன். ஒன்றும் தெரியாத அப்பாவிக் கலைஞனைப் போலிருந்து கொண்டே என் வாழ்க்கையையே இப்படி வேறு விதமாக மாற்றி வரைந்து முடித்திருக்கிறாய் நீ! நான் யாரை அதிகமாக வெறுத்தேனோ அவளுக்குப் பக்கத்திலேயே இன்று நெருங்கி நின்று விடும்படியான சந்திப்புக்கள் தொடக்கத்தில் அன்று உன் காரணமாகவே நேர்ந்தன.

இன்று இவ்வளவு காலத்துக்குப் பின்பு எண்ணிப் பார்க்கும் போது நான் உனக்கும் சிறிது தோற்றுப் போயிருப்பதை உணர்

கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பு சுரமஞ்சரி எனக்கு எழுதிய மடலை என்னிடம் கொண்டு வந்து கொடுத்து விட்டு, 'இப்படிப் பெண் களின் அன்பிஞல் உலகத்தில் மகாகாவியங்கள் பிறந்திருக்கின்றன ஐயா!' என்று நீ என்னிடம் கூறிய போது, 'அப்படி மகாகாவியங்களைப் படைக்கிற அன்பை அந்த ஏழடுக்கு மாளிகை யிலிருந்து எதிர்பார்க்க முடியாது' என மறு மொழி கூறி உன்னை மறுத்தேன் நான். 'அன் பின் சக்தி அளப்பரியது. அதற்கு முன் சாதா ரண உணர்வுகள் தோற்று விடுகின்றன. ஒரு காலத்தில் இதே பெண்ணின் சிரிப்புக்கு— நீங்கள் தோற்றுப் போனல் கூட நான் ஆச் சரியப்பட மாட்டேன்' என்று அன்றைக்கு என்னிடம் அறைகூவி விட்டு அதன் விளைவாக நான் உணர்ச்சி வசப்பட்டு உனக்குச் செய்த துன்பத்தையும் நீ ஏற்றுக் கொண்டு போயிருந் தாய். சொன்னபடியே இன்று எங்களை இந்தக் கோலத்தில் சேர்த்துப் பார்த்த பின்பும் நீ ஆச்சரியப்படாமல் தான் நிற்கிருய். நேற் றிரவு நீலநாகரை அழைத்துக் கொண்டு பட் டினப் பாக்கத்து மாளிகைக்கு வந்த போதும் நீ என் நிலைகளைக் கண்டு ஆச்சரியப்படவில்லை. இன்று இந்த மாறுதலைக் கண்டும் சிரித்துக் கொண்டுதான் நிற்கிருய்!''

''அப்படி எல்லாம் என் வார்த்தைகளுக்குப் பெரிய பெரிய அர்த்தங்களைக் கற்பிக்கா தீர்கள். ஏரல் எழுத்துப் போல் நான் நினை யாததெல்லாம் நினைத்துத் திட்டமிட்டதை ஒப்பத் தற்செயலாக நடந்திருக்கின்றன. அந்தப் பெருமாளிகைச் செல்வருக்கும் உங்க ளுக்கும் உள்ள பகைமைகள் உங்களுக்கே நன்ருகத் தெரிந்த பின்பும் நீங்கள் இப்படி விட்டுக் கொடுத்துக் கருணை மறவராக நிற்பதுதான் இந்த வாழ்வுக்குக் காவியப் பெருமையைத் தருகிறது. ஆனல் நீலநாக ரைப் போன்றவர்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

''அவர் இதை ஒப்புக் கொள்ளாததற்கும் அவருக்கு என் மேலுள்ளஅன்புதான் காரணம் மணிமார்பா! அவர் ஒரு பெரிய மலைச்சிகரம். அதே உயரத்துக்கு நீ வேறு சிகரங்களைத் தேடக் கூடாது. எல்லா மனிதர்களுடைய மனத்தையும் அந்தச் சிகரத்தின் உயரத்திஞல் அளக்கவும் முயலக் கூடாது. கருங்கல்லாய் இறுகிப் போயிருக்கும் அந்தச் சிகரத்தின் உச்சியிலிருந்தும் பாசமும், அன்பும் ஊறிப் பெருகுவதுண்டு.''

''உண்மைதான் ஐயா! வயிற்றுப்பசியும் கவலைகளும் இல்லாத உலகம் ஒன்று ஏற்பட் டால் அங்கே அன்புதான் விலை மதிப்பற்ற செல்வமாக இருக்கும். மற்ற எல்லாச் செல் வங்களும் மதிப்பிழந்து போகும். மற்ற எல் லாச் செல்வங்களும் மதிப்போடு இருக்கிற காரணத்தால்தான் சில சமயங்களில் பசி கவலை குரோதங்களிஞல் அன்பைப் பற்றி மறந்து போகிறேம். இந்தப் பெருமாளிகைச் சகோதரியாருடைய தந்தையும் அவரைச் சேர்ந்தவர்களும் இத்தனை காலம் குரோதத்தி ஞல்தான் அன்பை மறந்து போயிருந்தார்கள் போல் இருக்கிறது. ஆனல் இப்போது உங்க ளருகே நாணி நிற்கும் இந்தச் சகோதரி யார் தன் குடும்பத்தின் வரலாற்றையே மாற்றி விட்டுப் புது வழியில் உங்களோடு இறங்கி வந்து விட்டார்'' என்று கூறிக் கொண்டே நீராடுவதற்காகக் கீழே படிகளில் இறங்கிஞன் மணிமார்பன்.

அவனும் பதுமையும் நீராடிவிட்டு வருகிற வரை இளங்குமரனும் சுரமஞ்சரியும் கரையில் காத்திருந்தார்கள்.

தன்னருகே நீராடிய ஈரம் புலராமல்மேகக் காடாய்ச் சரிந்த சுரமஞ்சரியின் கூந்தலி லிருந்து எழும் நறுமணங்களை உணர்ந்து இளங்குமரன் தன் கண்களால் அவளை நன் ருகப் பார்க்கத் தொடங்கிய போது, எல்லா அணிகலன்களையும் இழந்த பின்னும் பிறந்த போதே உடன் பிறந்து, வளர்ந்தபோதே உடன் வளர்ந்து நிறைந்த இயற்கை வனப்புக் களையே போதுமானவைகளாகக் கொண்டு பேரழகியாய் மணந்து கொண்டிருந்தாள் அவள் 'இவற்றில் தெரியும் அழகு மிகுதியா? நாணம் மிகுதியா?' என்று பிரித்துக் காண முடியாத கவர்ச்சி நிறைந்த கண்கள். 'நான் கனிந்திருக்கிறேன்; நான் கனிந்திருக்கிறேன்' என்பதைச் சொல்ல மொழியின்றித் துடிப்பது போல மெல்ல அசையும் செல்வச் செவ்விதழ் களின் நகைக் கனிவு. வார்த்தைகளால் பேச முடியாததைப் பேசும் நளினமான சிரிப்பு- இவ்வளவும் நிறைந்து தோன்றிஞள் சுரமஞ் சரி. காலைக் கதிரொளியில் அவள் முகமும் கைகளும், பாதங்களும் மெருகிட்ட பொன் ஞகி மின்னின.

எத்தனை அழகுகள்! எத்தனை அழகுகள்! அத்தனை அழகுகளையும் புதிதாய் இன்றுதான் புரிந்து கொள்வது போல் அவளைப் பார்த் தான் இளங்குமரன்.

இப்போது மூன்ருவது முறையாகவும் அவ னுடைய பார்வையே அவளைப் புது மணப் பெண்ணுக அலங்கரிக்கத் தொடங்கியது.

''சுரமஞ்சரி! உன்னுடைய நாணமே உனக்குப் பெரிய அணிகலன்.''

''அது உங்களுடைய பார்வையிலிருந்து தான் எனக்குக் கிடைக்கிறது. உங்கள் கண் களின் பார்வையாலேயே நான் அலங்கரிக் கப்படுகிறேன்......''

''அப்படியாஞல் வேறுவிதமான அலங்கா ரங்களுக்கு நீ ஆசைப்பட வில்லைபோலும்.''

இந்தச் சொற்களைக் கேட்டு அவனுடைய இதழ்களில் அது வரை கரந்திருந்த நகை சற்றே மலர்ந்து புன்னகையாய்ப் பிறந்தது. பின்பு பெருநகையாகவும் வளர்ந்தது. மெல்ல நெகிழ்ந்த பவழச் செவ்வாயில் பற்கள் முத்துக் களாய் ஒளி வீசின. விடிகாலையில் ஒவ்வொரு இதழாய் மலரும் பூவைப் போல் அவள் முகத்தில் உணர்ச்சிகள் மலர்ந்து கொண்டும் மணந்து கொண்டும் நின்றன. கன்னங்களில் குங்குமச் சிவப்புப் பரவியது. கால் விரல் தரையைக் கிளைக்கலாயிற்று.

'இன்று இந்த வேளையில் தன் முன் இப்படி நாணிக் குழைந்து நிற்கிற இதே பெண்தானு நேற்று அப்படி எல்லாம் ஆற்றல் வாய்ந்த சொற்களைத் தேடித் தனக்கு முன் வாதிட் டாள்?' என்று எண்ணி வியந்தான் இளங் குமரன். அவள் அழகுகள் ஒவ்வொன்றும் இப்போதுதான் புரிந்த புதுமைகளாய் அவன் மனத்தில் நிறைந்தன.

மணிமார்பனும் அவன் மனைவியும் நீராடி விட்டுக் கரைக்கு வந்த பின்பு எல்லாருமாக அங்கிருந்தே ஆலமுற்றத்துப் படைக்கலச் சாலைக்குப் புறப்பட்டுப் போனுர்கள். எல்

லாரும் படைக்கலச் சாலைக்குள் நுழைகிற போது கரமஞ்சரி மட்டும் வாயிலிலேயே தயங்கி நின்றாள்.

முன்பு ஒரு நாள் பின்னிரவு வேளையில் நகரமே உறங்கிக் கிடந்த பேரமைதியி னிடையே வசந்தமாலையும் தானுமாகத் தேர் ஏறி வந்து இதே படைக்கலச் சாலையில் இளங் குமரனைத் தேடிய போது வாயிற்கதவருகே நின்று தன்னைத் தடுத்த அந்த இரும்பு மனி தனை நினைத்துக் கொண்டு பயந்தாள் அவள்.

கரமஞ்சரி மருண்டு போய்த் தயங்கி நிற்ப தன் காரணம் இளங்குமரனுக்குப் புரிந்தது.

''பயப்படாமல் என்னோடு உள்ளே வா. உலகத்தில் எல்லாரும் அன்புக்கும் பாசத்துக் கும் கட்டுப்பட்டவர்கள்தாம். நீலநாகரும் அதற்கு விதிவிலக்கில்லை. நீ இப்போது இங்கே என் வாழ்க்கைத் துணையாகி என் னுடனே வருகிறாய்....'' என்று இளங் குமரன் அவளைக் கைப்பற்றி உள்ளே அழைத் துக் கொண்டு போனான்.

அவனையும் கரமஞ்சரியையும் சேர்த்துப் பார்த்ததும் நீலநாகர் வெறுப்போடு அலட்சியமாகத் தலையைக் குனிந்து கொண் டார். பின்பு இளங்குமரனிடம் நேருக்கு நேர் பேச விரும்பாதவர்போல மணிமார் பனை விளித்துப் பேசினார்

''மணிமார்பா! உன்னுடைய நண்பன் இப்போது இங்கே எதற்காக வந்திருக்கிறான்? தன்னுடைய தோல்வியைக் கொண்டாடுவ தற்காக இப்படி இங்கே திரும்பி வந்திருக் கிறானா என்று அவனைக் கேள்!''

''எந்தத் தோல்வியைச் சொல்கிறீர்கள்?'' என்று இளங்குமரனே சிரித்தபடி அவரை எதிர்க் கேள்வி கேட்டான். எனினும் அவர் அவன் பக்கம் திரும்பாமலே பேசினார். முதலில் இருந்த கடுமை மட்டும் சற்றே குறைந்து விட்டாற் போல அவருடைய பேச்சு அவனை நோக்கியே பிறந்தது.

''இதே ஆலமுற்றத்துப் படைக்கலச் சாலை யில் கற்றுப் பயின்று உரமேறிய இணையற்ற வீரமும், திருநாங்கூர் அடிகளிடம் குருகுல வாசம் செய்து பெற்ற வரம்பிலா ஞானமும் இப்படி இந்தப் பகைவன் மகளின் வளை சுமக்கும் கைகளுக்காகத் தோற்றுப் போய் விட்டாற்போலிருக்கிறது. இந்தத் தோல்விக் கோலத்தை நானும் காண வேண்டும் என்று என் முன்னாலே வந்து நிற்க வெட்கமாக இல் லையா உனக்கு?''

''வெட்கமாக இல்லை. பெருமையாகத் தான் இருக்கிறது. என் பெருமைக்குக் குறை வின்றி நானே விரும்பித் தோற்ற தோல்வி தான் இது. இந்தத் தோல்வியில் எந்த வித மான தாழ்வையும் நான் உணரவில்லை. பெரு மைப்படத் தக்க தோல்வி இது. 'எல்லா வற்றையும் வென்று கைப்பற்றி நிமிர்ந்து நிற்கும் துணிவைப் போல எல்லாவற்றையும் விட்டுவிடுகிற துணிவும் வீரனுக்கு இருக்க வேண்டும்' என்று நீங்களே என்னிடம் அடிக் கடி கூறியிருக்கிறீர்கள். யாரை மிக எளிதாக நம்மாலே வென்றுவிட முடியும் என்று நாம் உணர்கிறோமோ அவர்களுக்கே தோற்றுப் போய் விட்டுக் கொடுத்து விடுவதிலும் ஒரு சுகம் இருக்கிறது. பரிபூரணமான தெய்வீக இன்பம் அது. இந்த விதமான தோல்விக்குக் காரணமாக இருப்பது நமது கருணைதானே ஒழியப் பலவீனமன்று. தங்களால் வெல்ல முடிந்தவர்கள்மேலும் கருணை கொண்டு அவர்கள் தங்களுக்கு ஒப்பானநிலையில்தங்களை எதிர்த்து வெற்றிபெற முடியாததை எண்ணி இரங்கி, அவர்களுக்கும் வெற்றி மகிழ்ச்சியை அளித்துப் பார்க்கலாமே என்ற பெருந் தன்மையோடு தோற்கிற தோல்வியைச் சான் றோர்கள் கொண்டாடுகிறார்கள். இந்தத் தோல்வி சான்றாண்மையின் இலக்கணம். இதில் வெற்றியைவிட அதிகமான சுகம் உண்டு. அந்தச் சுகத்தை இப்போது நான் அடைந்து விட்டேன்.

சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்

என்று சால்பின் பண்பு சொல்லப்பட்டிருக் கிறது. பெரிய காரியங்களைச் சாதிப்பதற் காகவே மனத்தை ஆளவேண்டும் என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். பிறருக்காக விட் டுக் கொடுத்துத் தியாகம் செய்கிற இந்தத் தோல்வி பெரிய காரியமில்லை என்று நீங்கள் எப்படிக் கூற முடியும்? அன்பையும், வீரத்தை யும் தவிர, எங்கள் வாழ்வுக்கு வேறு எல்லைகள் இல்லை என்றார் வளநாடுடையார்! நீங்களோ நெகிழ்ச்சியில்லாத முரட்டு வீரம் ஒன்றைத் தவிர உங்கள் வாழ்வுக்கு வேறு எல்லையே இல்லை என்கிறீர்கள். தியாகப் பண்பு என்ற ஒன்று எனது வாழ்க்கையில் இணையற்றதொரு

பேரெல்லையாக இருப்பதை நீங்களெல்லாம் மறந்து போய் விட்டீர்களோ, என்னவோ? நெகிழ்ச்சியே சிறிதும் இல்லாத கொடுமை மறவராக நீங்கள் உங்களுடைய வாழ்க்கையைப் பழகிக் கொண்டு விட்டீர்கள்.''

''என்னை நான் அப்படிப் பழக்கி வைத்துக் கொண்டிருந்தது உண்மைதான்! ஆனால் உன் மேல் பாசமும் அன்பும் கொள்ளத் தொடங்கிய நாளிலிருந்து அந்த இறுகிய குணத்திலிருந்தும் நான் என்னைத் தளர்த்திக் கொள்ளும்படி ஆகிவிட்டது. அப்படித் தளர்த்திக் கொள்ள நேராமல் நான் என் போக்கிலேயே இருந்திருந்தால் எவ்வளவோ விதங்களில் எனக்கு நன்றாயிருக்கும். 'உன் மேல் அன்பு கொண்ட காரணத்தால் எனக்கு உண்டாகிய கவலைகள் ஏற்பட்டிருக்காது. நான் என்னுடைய கடமைகளைத் தவிர வேறு எந்தவிதமான உலக பந்தங்களிலும் சிக்கியிருக்க மாட்டேன். உன்னைப் போல் அழகும் வீரமும் ஞானமும் நிறைந்த இளைஞன் ஒருவனை என் மாணவனாக இந்த வாழ்க்கை வழியில் சந்தித்திருக்காவிட்டால் நான் வேறு எந்த மனிதன் மேலும் அன்பு செலுத்துவதற்கே சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்காது. அன்பு, நெகிழ்ச்சி, பாசம், நமக்கு வேண்டியவனுக்கு இன்ன இடத்திலே இன்னது நேரிட்டு விடுமோ என்ற கவலை இவற்றையெல்லாம் உலகத்தில் நான் உணர்வதற்குக் காரணமாக இருந்த முதல் மனிதன் நீ. கடைசி மனிதனும் நீதான்.

மறுபடியும் உன்னிடம் ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன். நீ மீண்டும் என் வாழ்க்கையில் குறுக்கிடாதே. அன்பையும் பாசங்களையும் என்னை உணரச் செய்யாதே. கடுமையான வீரத் துறவியாகவே என்னை வாழ விடு. உன்னைச் சந்திப்பதற்கு முன்பு எப்படி இருந்தேனோ அப்படிக் கர்மவீரனாக வாழவிடு. நீ இங்கிருந்தால் எனக்கு உன் மேல் ஏற்பட்டு விட்ட பாசங்களாலேயே நான் என் வழியில் கடுமையான இறுக்கத்தோடு வாழ முடியாமல் போய் விடலாம். உன்னுடைய வாழ்வு எப்படி இருந்தாலும் நீ மலர்ந்த மனத்தைப் பெற்றவன். கட்டுக்களுக்கு நடுவேயும் விடுபட்டு வாழ முடிந்தவன். நான் இப்போது எதை உன்னுடைய தோல்வியாக நினைத்து ஏளனம் செய்கிறேனோ அதையே நீ உன்னுடைய வெற்றியாக என்னிடம் நிரூபிக்கிறாய். அப்படி நிரூபிப்பதற்கு நீ கற்றிருக்கிற கல்வியும், தத்துவங்களும் உனக்குத் துணை செய்கின்றன. நீ நிரூபிப்பதை மறுப்பதற்கும் என்னிடம் சொற்கள் இல்லை......''

எப்படியோ கோபத்தோடு பேச்சைத் தொடங்கிக் கொதித்தவர் இறுதியில் இப்படித் தன்னை நோக்கிக் கண்கலங்கி நின்ற போது இளங்குமரனுக்கு அவருடைய உண்மைநிலை புரிந்தது. அந்தப் பெருவீரருடைய கண்களையும் கலங்கச் செய்து விட்ட பாவத்துக்கு வருந்தியவனாக அவன் தயங்கி நின்றான். முல்லையைப் போலவே இவரும் வேறு ஒருவிதமான அன்புப் பிடிவாதத்தினால்தான் தன்னிடம் இந்தச் சினமும் இந்தக் கலக்கமும் அடைந்து நிற்கிறார் என்பது அவனுக்குப் புரிந்தது. தன் மேல் அவர் வைத்து விட்ட அன்பே அவரை இந்த இரண்டுங்கெட்ட நிலைக்கு ஆளாக்கி வேதனைப்படுத்துகிறது என்பதை அவன் விளங்கிக் கொண்டான்.



அந்த நிலை விளங்கியவுடனே தான் என்ன செய்ய வேண்டும் என்பதையும் அவனால் தெளிவாகஉணரமுடிந்தது. அப்படி உணர்ந்த உடனே கரமஞ்சரியோடு அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான் அவன். பின்பு நிதானமாக எழுந்து நின்று கொண்டு, ''எங்களுக்கு விடை தந்தருளுங்கள் ஐயா! உங்களுடைய கடுமையான வீர வாழ்க்கை மறுபடி உங்களுக்குக் கிடைக்கட்டும். அந்தக் கடுமையான கடமை வாழ்க்கையினால் இந்தச் சோழ நாட்டுக்கு ஆயிரமாயிரம் புதிய வீரர்கள் தோன்ற வேண்டும். அதற்கு நான் ஒருவன் தடையாக இருக்க விரும்பவில்லை. என் மேல் அன்பு கொள்வதன் காரணமாக வீரர்களைத் தோற்றுவிக்கிற பெருவீரரின் மனம் இப்படிச் சலனமடைய நேர வேண்டாம்'' என்று நெகிழ்ந்த மனத்தோடு அவரை வேண்டிக் கொண்டு தன் மனைவியுடனே புறப்பட முற்பட்டான் இளங்குமரன்.

நீலநாகர் இளங்குமரனுக்காக மட்டும் இது வரை சற்றே நெகிழ்ந்து திறந்திருந்த தம் மனத்தின் உணர்ச்சிக் கதவுகளை இப்போது நன்றாக இறுக்கி அடைத்துக் கொண்டு மறுபடியும் கர்ம வீரராக மாறி அவர்களை வாழ்த்தி விடை கொடுத்தார். அப்படி விடை கொடுத்த போது அவர் கண்களில் நீர் கலங்கவில்லை. மனத்தில் எந்தப் பாசமும் இல்லை. சலனங்களே இல்லாமல் மனம் தெளிந்திருந்தது. இளங்குமரனும் கரமஞ்சரியும் படைக்கலச் சாலையிலிருந்து வெளியேறிய போது மணிமார்பனும் அவன் மனைவியும்கூட அவர்களோடு சேர்ந்தே புறப்பட்டு விட்டார்கள்.

அன்று மாலை பூம்புகார் நகரம் நான்கு பேர்களுக்குத் தன் எல்லையிலிருந்து மானசீகமாக விடைகொடுத்தது. இந்த நால்வரும் தன் மண்ணின் மேல் நின்றும் நடந்தும் ஆடியும் ஓடியும் பழகிய நாட்களை அந்தப் பழம் பெரும் நகரம் என்றுமே மறக்க முடியாது தான். இவர்கள் அங்கு வாழ்ந்த நாட்களில் இவர்களுக்கு ஏற்பட்ட சுகதுக்கங்களும் வெற்றி தோல்விகளும் அந்த நகரத்துக்கு நன்றாக நினைவிருக்கும். அதன் மண்ணிலும் காற்றிலும் அந்த நிகழ்ச்சிகள் சுவடுகளாய் அழியாமல் மணந்து கொண்டே யிருக்கும்.

ஓவியன் மணிமார்பனும், அவன் மனைவி பதுமையும் பாண்டிய நாட்டுக்குப் புறப்பட்டார்கள். ''நண்பனே! மறுபடியும் வாழ்க்கை வீதியில் எங்காவது என்றாவது சந்திப்போம்'' என்று கூறி அவர்களுக்கு விடைகொடுத்தான் இளங்குமரன். கரமஞ்சரி நன்றி நிறைந்த கண்களால் ஓவியனை நோக்கிக் கைகூப்பினாள். அவர்கள் செல்ல வேண்டிய வழிகள் பிரிந்தன. வீதியில் மட்டுமல்ல; வாழ்க்கையிலும்தான். நெருங்கிப் பழகிய பல பேர்களுடைய வழிகளிலிருந்து இவர்களும் இவர்களுடைய வழிகளிலிருந்து அந்தப் பல பேரும் இன்று இந்த மாலை வேளையில் பிரிந்து விலகிப் போய்விட்டார்கள். மறுபடி சந்திக்க நேர்கிற வரை இவையெல்லாமே பிரிவுதான். மறுபடி சந்தித்தாலும் அதன் பின்னும் மறுபடி பிரிவு இருக்கும். இப்படிச் சந்திப்பும் பிரிவும்தான் வாழ்க்கை. சந்தித்தால் பிரிவதையும், பிரிந்தால் சந்திப்பதையும் தவிர்க்க முடியாது.

''விரைவில் வருகிறேன்; கவலைப்படாதே'' என்று மணிநாகபுரத்திலிருந்து தான் புறப்பட்டு வரும்போது தன் தாய் மாமன் மகளை குலபதியிடம் கூறிவிட்டு வந்திருந்த சொற்களை நினைவுகூர்ந்தவனாகத் தன் துணைவி கரமஞ்சரியோடு மணிபல்லவத் தீவுக்குப் புறப்பட்டான் இளங்குமரன்.

அன்று மாலை இளங்குமரன் கரமஞ்சரியோடு கப்பல் ஏறுவதற்காகப் பூம்புகார்த் துறையில் நின்று கொண்டிருந்த சமயத்தில் அப்போதுதான் மணிபல்லவத்திலிருந்து வந்து கரை சேர்ந்த கப்பல் ஒன்றிலிருந்து விசாகை எதிரே இறங்கி வந்து கொண்டிருந்தாள். இந்தச் சந்திப்பு வியக்கத்தக்கவாறு அங்கே நேர்ந்தது. இளங்குமரன் கரமஞ்சரியை விசாகைக்கு அறிமுகம் செய்து வைத்துவிட்டுத் தன் வாழ்வில் நிகழ்ந்த புது மாறுதல்களையெல்லாம் அவளிடம் சொன்னான்.

அவை யெல்லாவற்றையும் கேட்டு விட்டு விசாகை புன்முறுவல் பூத்தாள். பின்பு அவனை நோக்கிச் சொல்லலானாள்:

''இப்போது நாம் இங்கே எதிரெதிர்த் திசைகளில் எதிரெதிர் வழிகளில் பிரிவதற்காக இந்த மாலை வேளையில் விடைபெறுகிறோம். நெடுங்காலத்துக்கு முன் இப்படி ஒரு வாழ்க்கையை நான் வாழவேண்டும் என்றுதான் என் தந்தை என்னைச் சுயம்வர மண்டபத்துக்குள் அழைத்துப் போய் நிறுத்தினார். அன்று நான் இந்த வாழ்வின் வாயிற்படிக்கருகே போய் விட்டுத் திரும்பி வேறு வழியில் வந்தேன். நீங்களோ இதற்கு எதிர் வழியிலிருந்து நடந்து வந்து இந்த வழி மேல் இன்று நின்று கொண்டீர்கள். உங்களை வாழ்த்துகிறேன். உங்களுடைய இந்தத் தோல்விக்கும் எல்லையற்ற கருணைதான் காரணமாக இருக்கிறது. என்னுடைய இந்தத் துறவு வாழ்க்கைக்கும் எல்லையற்ற கருணைதான் காரணமாக இருக்கிறது. இதே வாழ்க்கையோடு இந்த உலகத்

தில் நான் தனியாக என்னால் முடிந்த அறங்களைச் செய்து கொண்டிருக்கிறேன். இந்த உடம்பில் உயிரும், கைகளில் பிச்சைப் பாத்திரமும் இருக்கிறவரை விசாகையின் தருமம் குறைவில்லாமல் நடைபெறும். நீங்களும் இல்லற வாழ்வில் உங்களால் முடிந்த தருமங்களைச் செய்யுங்கள். என் துறவு நெறி நான் மட்டும் தனியாகச் செய்கிற அறம். உங்கள் மனை வாழ்வோ நீங்கள் இரண்டு பேருமே சேர்ந்து செய்கிற அறம். ஆகவே நீங்கள்தான் என்னைக் காட்டிலும் அதிகமான அறங்களை இனிமேல் உலகத்துக்குச் செய்ய வேண்டும்.

''நான் புத்த பூர்ணிமைக்காக யாத்திரை புறப்பட்டு வருகிற போதெல்லாம் மணிநாகபுரத்துக்கும் வந்து உங்களைக்காண்பேன். நான் கூறியபடியே அலைகளைக் கடந்து அலைகளின் நடுவே போய் நீங்கள் வாழப் போகிறீர்கள். நீங்கள் பிறந்த தீவைப் போலவே உங்கள் வாழ்வும் தத்துவமாக நிலைத்து நிற்கட்டும். ஞானிகள் மணிபல்லவத் தீவைச் சக்தி பீடமாகக் கூறுகிறார்கள். முறையாகச் சுற்றி நிலை திரும்புகிற தேர் போல உங்கள் வாழ்வு அங்கே போய் நிறைகிறது'' என்று கூறி விசாகை அவர்களை வாழ்த்தி விடை கொடுத்தாள்.

அப்போது விசாகை தன்னைப் பிரிந்து செல்வதற்கு இருந்த அந்தக் கடைசி விநாடியில் இளங்குமரன் அவளிடம் ஓர் உதவி கோரினான்:

''அம்மையாரே! பாத்திரத்திலிருந்து இட முடியாத பிச்சை ஒன்று இந்தக்கடைசி விநாடியில் உங்களிடமிருந்து எனக்கு வேண்டும்....''

''என்ன பிச்சை அது?''

''பசிக்கிற வயிறுகளுக்கும், தவிக்கிற மனங்களுக்கும், ஆறுதல் அடையத்தக்க நிறைவு உங்களிடமிருந்தே கிடைக்க முடியும். இந்தப் பூம்புகாரின் புறவீதியில் உங்களுடைய ஆறுதலுக்காக ஒரு பேதைப் பெண் காத்துக் கொண்டிருக்கிறாள். முதலில் நீங்கள் அவளுடைய துக்கத்தைப் போக்க வேண்டும். அதன்பின் அவளை வேறுவிதமான வாழ்க்கைக்குத் துணியும்படி பயிற்ற வேண்டும்.''

''யார் அந்தப் பேதைப் பெண்?''

''வீரசோழிய வளநாடுடையார் மகள் முல்லை. அவளைச் சந்தித்து அவளுடைய துன்பங்களுக்கு நீங்கள் அடிக்கடி ஆறுதல் கூற வேண்டும்.''

''அவளுக்கு என்ன துன்பம்?''

''உங்களைப் போன்ற புனிதவதிகளுக்குப் பெரிதாகப்படாத துன்பம் அது! அந்தத் துன்பத்தை என் சொற்களால் நான் உங்களிடம் சொல்ல விரும்பவில்லை. அப்படிச் சொல்வதற்கு நாளும் என் மனமும் கூசி நிற்பதற்குரிய செய்தி இது. அந்தப் பெண்ணின் துன்பங்களுக்கு இனிமேல் உங்கள் வார்த்தைகள்தான் மருந்தாக வேண்டும். ஆனால் இந்த வேண்டுகோளை நான் உங்களிடம் வேண்டியதாகவும் அவளுக்குத் தெரியலாகாது.''

''புரிகிறது! துக்கமும் வேதனையும் நிறைந்து கிடக்கும் இந்த உலகத்தின் பொது வழிகளிலிருந்து பிரித்து என்னுடைய வழியில் நான் அழைத்துக் கொண்டு போவதற்கு ஒரு பெண்ணை எனக்குச் சுட்டிக்காட்டுகிறீர்கள். அவளை அந்த வழியில் அழைத்துச் செல்ல எனக்கு ஒரு மறுப்பும் இல்லை. இந்த உதவியை அவசியம் உங்களுக்கு நான் செய்கிறேன்'' என்று ஒப்புக் கொண்டாள் விசாகை. தன் கண்களின் பார்வையாலேயே புண்ணியத்தைப் பரப்பவல்ல அந்தத் தெய்வீகப் பெண்ணுக்கு இப்போது மீண்டும் வணக்கம் செலுத்தி விடை கொடுத்தான் இளங்குமரன். சுரமஞ்சரியும் பயபக்தியோடு விசாகையை வணங்கினாள். ''நீ கொடுத்து வைத்தவள் பெண்ணே! எவராலும் வெல்ல முடியாத மனத்தை உன் அன்பினால் வென்றிருக்கிறாய்'' என்று தன்னை வணங்கிய சுரமஞ்சரியை வாழ்த்திவிட்டுச் சென்றாள் விசாகை.

இளங்குமரன் சுரமஞ்சரியோடு அந்தக் கப்பலில் ஏறிய போது பூம்புகார் நகரின் மேல் அந்தி மாலை சூழ்ந்து கவிந்து கொண்டிருந்தது. நகர வீதிகளின் மாடங்களில் எல்லாம் அந்தி விளக்குகள் மின்னத் தொடங்கியிருந்தன.

''இந்த நகரத்தையும் இதன் உறவுகளையும் விட்டுப் பிரிவதனால் உன் மனம் எந்த விதத்திலும் கலங்கவில்லையா, சுரமஞ்சரி?''

''நான் அடைந்திருப்பது பெரிதாக இருக்கும்போது இழந்ததை எண்ணி வருந்த முடியாது.''

## திருப்பழனத்தில் ஒரு திருப்பணி

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

25-3-62 கல்கியில் ''திருப்பழனத்தில் ஒரு திருப்பணி'' என்ற குறிப்பைப் பார்த்தேன். சப்த ஸ்தான உற்சவத்துக்கான கண்ணாடிப் பல்லக்கைச் செய்து வைக்கும் நற்பணியை எல்லாருக்கும் அறிமுகப்படுத்தி வைத்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மேற்படி பல்லக்கு இவ்வாண்டு விழாவின் உற்சவக் கைங்கரியத்துக்கே தேவைப்படுவதால் தமிழ்ப் புத்தாண்டு (14-4-62) பிறப்பதற்கு முன் பக்தர்கள் தங்கள் நன்கொடைகளை அனுப்பி வைத்தால் சௌகரியமாக இருக்கும்.

அனுப்பப்படும் நன்கொடைகளின் விவரத்தைக் ''கல்கி'' பத்திரிகையில் அவ்வப்போது வெளியிட்டு வந்தால் அது மேற்படி தெய்வக் கைங்கரியம் நன்கு நிறைவேறப் பேருதவியாக இருக்கும்.

ராஜா ஸ்ரீ கோவிந்த ராவ் ஜீவாஜீ மோத்தே ராவ்சாஹிப்
பரம்பரை டிரஸ்டி.

ஸ்ரீ ஆபத்சகாயேசுவர ஸ்வாமி தேவஸ்தானம், திருப்பழனம், திருவையாறு வழி, தஞ்சை ஜில்லா

பக்தர்கள் தங்கள் காணிக்கையை 14 - 4 - 62 க்குள் கிடைக்கும்படி மேற்படி விலாசத்துக்கு அனுப்பிவைத்தால் போதும். அதன்பிறகு அனுப்பும் தொகை இந்தத் திருப்பணிக்குப் பயன்படாது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். —ஆசிரியர்

''இறந்ததை எண்ணி வருந்தத்தான் வேறு ஒருத்தி இருக்கிறளே'' என்று கூறியபடி இளங்குமரன் சுரமஞ்சரியைச் சோதனைசெய்யும் குறிப்போடு அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். அவளுடைய கண்களில் கலக்கம் தெரிந்தது. அதே கலக்கத்தை அப்போது தன் கண்களுக்கு முன் அங்கே இல்லாத இன்னொரு முகத்திலும் கற்பனை செய்து பார்த்தான் அவன். அந்தக் கற்பனையே வேதனை அளிப்பதாயிருந்தது.

கப்பல் நகர்ந்தது. கரை மெல்ல மெல்ல விலகியது. விசாகையின் வார்த்தைகளை நினைத்துக் கொண்டான் அவன். எவ்வளவு பொருத்தமான வார்த்தைகள் அவை?

**'முறையாகச் சுற்றி நிலைதிரும்புகிற தேர் போல உங்கள் வாழ்க்கை அங்கே போய் நிறைகிறது.'**

அப்போது சுரமஞ்சரி மெல்லிய குரலில் அவனைக் கேட்டாள்:

''நம்முடைய பயணம் எப்போது முடியும்? என்றைக்கு நாம் கரை சேருவோம்?''

'எந்தப் பயணத்தைப் பற்றிக் கேட்கிறாய் சுரமஞ்சரி? நம்முடைய இந்தப் பயணம் இன்னும் சில நாட்களில் முடிந்து விடும். அதற்கு அப்புறம்தான் நம்முடைய சொந்தப் பயணம் தொடங்குகிறது. அந்தப் பயணத்திலிருந்து நாம் கரை சேர எவ்வளவு காலமாகுமோ? விசாகையைப் போல் நான் தனியாகவே நடத்த முடியாமல் போய் விட்ட பயணம் அது. இனி மேல் அதற்காகக் கவலைப்பட்டும் பயனில்லை. நன்றாக விடுபட வேண்டுமானால் நன்றாகக் கட்டுண்டுதான் தீர வேண்டுமென்று அருட்செல்வ முனிவர் அன்றொரு நாள் சிரித்த படியே என்னிடம் கூறி விட்டுப் போனார். அந்தச் சில வார்த்தைகளுக்குள் இவ்வளவு பெரிய விளைவுகள் அடங்கியிருக்குமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. உன்னை ஏற்றுக் கொண்டதோடு என் பாசங்கள் முடிந்துவிடவில்லை. இனி மேல்தான் ஒவ்வொரு பாசமாகத் தொடரப் போகிறது. என் தாய் மாமன் மகனான குலபதி மணிநாகபுரத்தில் எனக்காகவே என்னை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பான். நாமும் அங்கே போய்த்தான் இனிமேல் வாழப் போகிறோம். நம்முடைய வாழ்க்கையைப் பார்த்தே இனி அவன் தன்னுடைய பழைய துக்கங்களை எல்லாம் மறந்துவிடுவான்....'' என்று கூறி நெட்டுயிர்த்தான் இளங்குமரன்.

கடலில் அலைகள் சரிந்து சரிந்து மீண்டு கொண்டிருந்தன. பூம்புகார் தொலைவில் மங்கியது. அதன் சுகதுக்க நினைவுகள் அவர்கள் மனங்களில் தங்கின. தன்னருகே கரையைப் பார்த்தபடி கண்கலங்கி நின்று கொண்டிருந்த சுரமஞ்சரியை நோக்கிச் சிரித்தான் இளங்குமரன்.

அவனுடைய அந்தப் பார்வை அவளை மணப் பெண்ணாக அலங்கரிக்கத் தொடங்கியது. அதற்கு நாணி நிமிர்ந்தும் நிமிராமலும் நளினமாகத் தலையைச்சாய்த்துக் கடைக்கண்களால் அவனைக் காண முயன்றாள் அவள்.

அவள் அப்படிப் பார்க்க முயன்ற முகம் எதுவோ அதிலிருந்து அவளுடைய வாழ்க்கை பிறந்தது. அவனுடைய கண் பார்வையினால் அவள் மலர்ந்து நின்றாள். பின்பு அந்த மலர்ச்சி வாடவே இல்லை. அப்படியே நெடுங்காலத்துக்கு வாழ்கின்ற நித்தியமான மலர்ச்சியாய் வளர்ந்தது.

# 15. ஆகுதி நெருப்பு

**கா**விரியின் நீர்ப் பெருக்கைப்போல வற்றாமல் ஓடிக் கொண்டிருந்த கால வெள்ளத்தில் நாற்பது ஆண்டுகளுக்கு அப்பால் மறுபடியும் ஒரு நிகழ்ச்சி.

நாற்பது ஆடிப் பெருக்குகளும், நாற்பது இந்திர விழாக்களும் கனவுகளாய் விரைந்து ஓடி மறைந்த பின் நாற்பத்தொன்றாவது ஆண்டின் சித்திரை மாதமும்பிறந்துவிட்டது!

அதோ! அந்த வள்ளுவ முதுமகன் வச்சிரக் கோட்டத்து முரசை யானை மேலேற்றி முரசறைந்து கொண்டே 'பசியும் பிணியும் நீங்கி வளம் சுரக்க வேண்டும்' என்ற மங்கல வாக்கியத்துடன் தொடங்கி இந்த ஆண்டிலும் இந்திர விழா வரப்போவதை நகரத்துக்கு அறிவிக்கிறான். தேச தேசாந்திரங்களில் இருந்தெல்லாம் இந்திர விழாவுக்காக மக்கள் வந்து பூம்புகாரில் கூடுகிறார்கள். நகரம் திருவிழாக் கோலம் கொண்டு பொலிகிறது. அந்த ஆண்டு இந்தி விழாவின் கோலாகலத்தில் சமய வாதிகளின் பங்கும் வழக்கம் போல் நிறைந்திருந்தது.

அந்தத் திருவிழாவின் இடையே ஒரு நாள் சமய வாதிகள் மிகுந்து கூடியிருக்கும் நாளங்காடி ஞான வீதியில் இப்படி ஒருவிநோதமான சம்பவம் நடைபெறுகிறது.

அன்று காலையில் போது விடிந்ததிலிருந்து அந்த ஞான வீதியில் கூடியிருந்த சமய வாதிகள் யாவரும் ஒரு பெண்ணின் வாதத்துக்கு எதிர் நிற்க முடியாமல் தொடர்ந்து தோற்றுப் போய்க் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண்ணைக் கண்டு அதிசயப்படாதவர் இல்லை. வரிசையாய்ப் பல பேர்களுடைய நாவற்கிளைகளை வீழ்த்தி விட்டு வெற்றிமுழக்க மிட்டுக் கொண்டிருந்தாள் அந்தப் பெண். அவள் பௌத்த சமயத்தைச் சேர்ந்தவள் என்று கூட்டத்தில் இருந்தவர்கள் கூறிக் கொண்டனர்.

அந்தப் பெண்ணைப் பற்றிய செய்திகள் நகர் முழுவதுமே பரபரப்பாகப் பரவி யிருந்தன. அவள் சமயவாதிகளை வென்று வெற்றி மேல் வெற்றி பெறும் இந்த அதிசயத்தைக் காண நாளங்காடியில் இடம் போதாமல் பெருங் கூட்டம் கூடிவிட்டது. அந்த அதிசயப் பெண் மணியைப் பார்க்க வேண்டு மென்ற ஆவலில் கடல் கடந்த நாடுகளில் இருந்து இந்திர விழா பார்க்க வந்திருந்தவர்கள் எல்லாரும்கூட நகரின் வேறு இடங்களைச் சுற்றிப் பார்ப்பதை மறந்துவிட்டு நாளங்காடியில் வந்து கூடியிருந்தனர். அவ்வளவு சிறப்பாக இந்திர விழாவுக்கே பெருமையூட்டிக் கொண்டிருந்தது அவளுடைய அறிவுப் போர். காலையிலிருந்து பொழுது சாய்கிற நேரம் நெருங்குகிற வரை அவளை எதிர்த்து வெல்வதற்கு யாரும் இல்லை. எதிர்த்து வந்து கொடியை ஊன்றியவர்கள்

எல்லாம் அவளுக்குத் தோற்றுக் கொண்டேயிருந்தார்கள்.

சாயங்கால வேளை. தோற்றவர்கள் கைகளிலிருந்து வரிசையாய்ச் சரிந்து விழுந்து கிடந்த நாவற்கிளைகளுக்கு நடுவே மதம் பிடித்த பெண் யானை போன்ற அறிவுச் செருக்குடனும் 'என்னை எதிர்த்து வந்து வாதிடுவதற்கு இன்னும் யாரேனும் உண்டோ?' என்ற வினவுடனும் நிமிர்ந்து நிற்கிறாள் அந்தப் பெண். அவளுடைய வயதைக் குறிப்பிட்டுச் சொல்ல முடியாதபடி துறவு ஒழுக்கங்களாலும் புலனடக்கத்தாலும் பொலிவு பெற்ற முகத் தோற்றம் அவளுக்கு வாய்த்திருக்கிறது. அவளுடைய தழல்நிற மேனியைத் துறவுநெறிக்குரிய சீவர ஆடை அணி செய்து கொண்டிருக்கிறது.

கையில் கொடியேந்தி நின்று கொண்டு மலர்ந்த முகமும் தூய சிரிப்புமாக வாதுக்கு வருகிறவர்களை எதிர்பார்க்கிறாள் அவள். அவளுக்கு எதிரியே கிடைக்கவில்லை. அந்த ஞான வீதியில் அவளே தன்னிகரற்று நின்று கொண்டிருக்கிறாள்.

மனைவியோடும் குழந்தை குட்டிகளோடும் இந்திர விழாப் பார்க்கக் கடல் கடந்து வந்திருந்த நாகநாட்டு முதியவர் ஒருவர் அவளை நோக்கிக் குனிந்த தலை நிமிராமல் கூட்டத்தின் ஒரு கோடியிலிருந்து விரைந்து நடந்து வருகிறார்.

அருகே வந்து அவள் முகத்தை ஏறிட்டு நிமிர்ந்து பாராமலே, "நான் உன்னோடு வாதிட வந்திருக்கிறேன்" என்கிறார் அவர்.

இதைக் கேட்டு அவள் அலட்சியமாய்ச் சிரிக்கிறாள்.

"முதியவரே! இந்த வயதில் மனைவி மக்களோடு இந்திர விழாப் பார்க்க வந்த இடத்தில் இங்கே என்னைப் போல ஒரு பெண்ணுக்குத் தோற்க ஆசையாக இருக்கிறதா உமக்கு?"

"நீ என்னை வென்ற பின்னர் பேச வேண்டிய வார்த்தைகள் இவை!"

"இத்தனை பேர்களை வென்ற எனக்கு உங்களை வெல்வது பெரிய காரியம் இல்லை."

"முடிந்தால் வென்று கொள்! ஒரு காலத்தில் உன்னைப் போல் நானும் இந்த வீதியில் வெற்றி நடை நடந்திருக்கிறேன்."

"இன்று தளர்நடை நடக்கிறீர்கள்."

இந்த வார்த்தைகளால் தாக்கப்பட்டுக் கோபத்தோடு அவளருகில் நெருங்கி வந்து நன்றாக அவளை நிமிர்ந்து பார்த்தார் அவர்.

அவள் அந்த மனிதரின் முகத்தைப்பார்த்து விட்டு அப்படியே அயர்ந்து போய் நின்றாள். அவளுடைய கையிலிருந்த கொடி நழுவியது. மனத்திலிருந்து பகைமை நழுவியது. மனமும் உடம்பும் புல்லரித்து நடுங்கின.

"முல்லை! நீயா?" என்று அந்த மனிதர் தாங்கொணாத வியப்போடு தன்னை நோக்கிக் கேட்ட கேள்விக்கு அவள் மறுமொழி கூறவில்லை. விழிகளில் கண்ணீர் பெருக நின்றாள். எந்த மனிதரை எண்ணி எண்ணிப் பல ஆண்டுகளுக்கு முன்பே அவள் தன்னைத் தோற்றுப் போயிருந்தாளோ அந்த மனிதரே இப்போது இப்படி முதியவராய் வந்து எதிரே நிற்கிறார். அந்த மனிதரின் அருகே நின்ற மக்களையும் சிறுவர் சிறுமிகளையும் அவர்களின் தாயையும் ஏக்கத்தோடு திரும்பிப் பார்த்தாள் முல்லை.

"ஐயா! உங்களுக்கு நீண்ட நாட்களுக்கு முன்பே ஒரு முறை எதற்கோ தோற்றுப் போயிருக்கிறேன் நான். மீண்டும் என்னைப் புண்படுத்தாமல் இங்கிருந்து போய்விடுங்கள்" என்று வாதத்தைத் தொடங்காமலே தான் அவரிடம் தோல்வியடைந்து விட்டதாகச் சொன்னாள் அவள். சுற்றிலும் கூடியிருந்த கூட்டத்துக்கு இது வியப்பாக இருந்தது. பெரிய பெரிய ஞான வீரர்களின் கொடிகளை யெல்லாம் துணிந்து வாதிட்டுச் சாய்த்த வீராங்கனை இன்று இந்தத் தளர்ந்த மனிதருக்கு முன் ஏன் இப்படித் தன் கொடியைத் தானே சாய்த்துக் கொண்டு தோற்றுப் போய் நிற்கிறாள் என்று கூட்டத்தில் கூடியிருந்தோர் புரியாமல் மருண்டனர்.

"இத்தனை ஆண்டுகளுக்குப்பின் இன்னும் ஒரு முறை என்னை அறிவில் தோல்வியடையச் செய்து பார்க்க உங்களுக்கு ஆசையாயிருக்கிறதா? உங்களிடம் முன்பு நான் அன்பில் தோற்றதை மறக்கவே எனக்கு இத்தனை ஆண்டுகள் போதவில்லை. நான் படித்த நூல்களும் என்னுடைய துறவும் விசாகை எனக்குச் சொல்லிப் பயிற்றிய தத்துவங்களும்கூட இன்னும் என் உள்ளத்தின் பழைய நெருப்பை அவிக்க முடியவில்லை. அதே நெருப்பை இன்று நீங்கள் மேலும் வளர்க்க விரும்புகிறீர்களா?" என்று அவள் தன்னை நோக்கிக் கேட்ட கேள்விக்கு மறுமொழி யின்றித் தலையைக் குனிந்து கொண்டு வந்தது போலவே திரும்பினான் இளங்குமரன்.

தன் மனைவி மக்களை உடனழைத்துக் கொண்டு அவன் அந்தக் கூட்டத்திலிருந்து வெளியேறிய போது, "கரமஞ்சரி! நாம் திரும்பவும் இன்றே மணிநாகபுரத்துக்குக் கப்பலேறி விடுவோம். இவ்வளவு காலத்துக்குப் பின்பு இந்த நகரத்துக்கு நாம் புறப்பட்டு வந்த வேளை நல்ல வேளையில்லை போலிருக்கிறது" என்று மனைவியிடம் கூறினான்.

"ஏன்?" என்று அவன் மனைவி கரமஞ்சரி திகைத்துப் போய் அவனைக் கேட்டாள்.

"உனக்கு இவளைத் தெரிகிறதா கரமஞ்சரி?" என்று பதிலுக்குத் தன் மனைவியைக் கேட்டான் அவன்.

அவள் ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

"நாற்பது ஆண்டுகளுக்கு முன் இந்த நகரின் புறவீதியில் ஒரு காலை வேளையில் நீயும் நானும் காவிரிக்கு நீராடப் போய்க் கொண்டிருந்த போது தன்னுடைய கோலத்தை முடிக்கத் தெரியவில்லை என்று அழுதுகொண்டு ஓடினாளே; அவளுடைய புதுக் கோலம் இது."

"பாவம்! இத்தனை காலத்துக்குப் பின்னும் அவளுடைய மன நெருப்பு ஆறவில்லை போலிருக்கிறது" என்று கரமஞ்சரியும் அவனோடு சேர்ந்து கொண்டு அந்தப் பெண்ணுக்காக அநுதாபப்பட்டாள்.

ஆனால் மற்றொரு புறம் அவனுக்கு முன் தன் நாவற்கிளையைத் தானே சாய்த்த அந்தப் பேதைப் பெண்ணோ நாளங்காடியின் ஒரு மூலையில் யாருமில்லாததொரு மரத்தடியில் போய்க் கண்ணீர் பெருக வீற்றிருந்தாள்.

அவளுடைய துயரத்துக்கு முடிவு ஏது? பாவம்! காலம் அதை ஆறச் செய்யட்டும்!

# பிரியாவிடை

## (முடிவுரை)

சோழநாட்டு நகரங்களில் எல்லாம் பெருநகரமான பூம்புகாரின் செல்வச் செழிப்பு மிக்க வாழ்க்கையில் இன்னும் எத்தனையோ இந்திர விழாக்களை அறிவித்து வள்ளுவ முதுமகன் நகருக்கு முரசறைவான்! இன்னும் எத்தனையோ ஆடிப் பெருக்குகளுக்குக் காவிரியில் வெள்ளம் வரும்; தணியும். மழை பெய்யும். வெயில் காயும். பருவ காலங்களால் விளையும் புதுப் புது மாறுதல்கள் காவிரிக் கரை வாழ்க்கையில் எத்துணை எத்துணையோ நிகழ்ச்சிகளைப் படைக்கும். சமயவாதிகளும் ஞானிகளும் சந்திப்பார்கள். அளவளாவுவார்கள். பிரிவார்கள். அறிவும் செல்வமும் ஓங்கி வளரும். அந்தக் கோநகரத்துக் கவிகளின் நாவில் புதுப் புதுக் கவிதைகள் பிறக்கும். இளம் பிள்ளைகள் பலர் தோன்றுவார்கள். மூத்துத் தளர்ந்தவர்கள் பலர் இறப்பார்கள். அரசர்கள் மாறுவார்கள். அரசாட்சி மாறும். ஏறும். தாழும். வாணிகர்களுடைய வாழ்க்கை வளரும் தளரும். மாபெரும் துறைமுகத்தில் கப்பல்கள் வரும். போகும். நிற்கும். மிதக்கும்.

ஆனால்.......?

என்ன சொல்வது? அதை எப்படிச் சொல்வது? அதோ! நாளங்காடியின் ஒரு கோடியில் அந்த மரத்தின் கீழ் வாடியிருந்து கண்ணீர் சிந்துகிறாளே முல்லை; அவளுடைய நெஞ்சின் கனல் இனி எப்போது தணியும்? அவளுடைய தாகம் எந்தப் பிறவியில் தீரும்? நூறு நூறு சமய ஞானிகளை வென்று பெற்ற வெற்றிப் பெருமிதத்திலும் அவள் மனம் நிறையவில்லை. யாரோ ஒருவனுக்கு என்றோ ஒருநாள் தோற்றதையே அவள் இன்னும் எண்ணி வருந்துகிறாள். எந்தக் கோலத்தையோ அரை குறையாக நிறுத்தி விட்டு இந்தத் தவக் கோலத்தை மேற்கொண்டாள் அவள். இந்தக் கோலமும் நிறையாதபடி இப்போது மனம் தவிக்கிறது. தனக்கு உள்ளேயே அடங்காமல் உள் நெருப்பாய்க் கொதிக்கிறது.

மறுபடியும் அவள் இளங்குமரனைச் சந்திக்க விரும்புகிறாள். ஆனால் இந்தப் பிறவியில் இன்று நாளங்காடியில் சந்தித்தது போல இதே ஏமாற்றங்களோடு அல்ல. தன்னுடைய நிறைவடையாத நினைவுகளை நிறைவு செய்து கொள்வதற்காக அவள் இன்னொரு பிறவி எடுக்க ஆசைப்படுகிறாள். அப்போது இதே பூம்புகாரின் புற வீதியில் ஏதாவதொரு வீரக் குடும்பத்தில் இளங்குமரனும் கட்டழகனாகப் பிறந்திருப்பான். அவனை அவள் அடைவதற்கு எந்தப் பகைமையும் இருக்காது. எந்தப் போட்டியும் இருக்காது.

அந்தப் பிறவி வாய்க்கிறவரை அவள் இந்த உலகத்துச் சுகங்களுக்கெல்லாம் தன்னிடமிருந்து நிரந்தரமாக விடை கொடுக்கிறாள்.

''வாழ்வதற்கென்று வாய்க்கும் சுகங்களே! உங்களுக்குப் பிரியாவிடை கொடுக்கிறேன். மீண்டும் அடுத்த பிறவியில் என்னை வந்து சந்தியுங்கள். அப்போது நானும் அவரும் உங்களை எதிர்பார்த்துக் காத்திருப்போம்'' என்று கற்றும் கற்காத பேதையாய்த் தனக்குத்தானே கூறிக்கொண்டு அந்த மரத்தடியிலிருந்து எழுந்து நடக்கிறாள் அவள். சில கணங்களில் அவள் தோற்றமும் பார்வையிலிருந்து மறைந்து விடுகிறது. இந்திர விழாவின் பெருங்கூட்டத்தில் யாரோ ஒருத்தியாக அவளும் கலந்து விடுகிறாள். தனியாய்த் தெரியாமல் பலரிடையே, ஒருத்தியாய் மறைந்து போய்விடுகிறாள். பன்மையில் கலந்த பின்பு ஒருமையும் தனித் தன்மையும் ஏது?

அவ்வளவு பெரிய கூட்டத்தில் அவளைப் போலவே வாழ்வில் விரும்பியது கைகூடாமல் துக்கப்படுகிறவர்கள் எத்தனையோ பேர் இருக்கலாம். ஆனாலும் அவளுடைய துக்கம் பெரியது. அதற்கு இணையாக வேறு ஒன்றும் இருக்க முடியாது.

அதைச் சொல்ல வார்த்தைகள் இல்லை. வார்த்தைகளால் சொல்ல முடியாத அந்தத் துக்கத்துக்கு விடிவு பிறக்கட்டும் என்று தெய்வங்களை வேண்டிக் கொண்டு முல்லைக்கு இப்போது இந்தப் பிறவியில் விடை கொடுக்கலாம்.

## நிறைந்தது



தமிழ்
வருஷப்-
பிறப்பன்று
14-4-62







சிவாஜி
கணேசன்
அளிக்கும்
ராங்காநாதன்
பிக்சர்ஸ்

# படித்தால் மட்டும் போதுமா

வசனம் - ஆரூர்தாஸ் • இசை - விஸ்வநாதன் - ராமமூர்த்தி
பாடல்கள் - கவிஞர் கண்ணதாசன் • ஒளிப்பதிவு - G. விட்டல் ராவ்
கலை - கங்கா

டைரக்ஷன்
A. பீம்சிங்

உரிமையாளர்கள்
சிவாஜி பிலிம்ஸ் (பி) லிமிடெட்
சென்னை-14

S.S.

ELEGANT

# பவழத்தீவு

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ரமணி..

14





















இந்த நதியின்
போக்கோடு இப்படியே
இன்னும் எத்தனை நாள்
பிரயாணமோ!


சேனாபதியின் கவலைக்கு
ஒரு முடிவு ஏற்படுகிறது.
நமது படகுப் பிரயா
ணம் இத்துடன்
முடிவடைகிறது. இந்தப்
பாறைக்கு அப்பால் தான்
நீங்கள் குறிப்பிட்ட பாழ
டைந்த நகரம் இருக்கிறது.
துல்பாணியின் ராஜ்யமும்
கூட அதன் அருகில்
தான் உள்ளது.


ஆனந்தா, நீ பின்
தங்கி வராதே...
பார்த்து ஏறு....


சேனாபதியாரே.
அதோ! நான் கண்
டது கனவல்லவே.


ஆனந்தன் கண்டது கனவல்ல. அவ
னுடைய மூதாதையர் ஒரு காலத்தில் நிர்
மாணித்த இந்திர புரியின் இடிபாடுகளைத்தான்....


சிரமத்திற்குப் பலன்
கிடைத்தது. ஆனால்
நாம் தனியாக என்ன
செய்வது? நமது பட
கைக் கவிழ்த்து சென்
றதால் பகைவர் நம்
மைப் பின் தொடர்ந்தே
வந்திருக்க வேண்டும்.


இந்த நிலையில் நாம் நம் படைகளை விட்டுப் பிரிந்திருப்பது நல்லதல்ல.
சேனாபதியாரே! கவலை வேண்டாம். இங்குள்ள குகையில் ஆனந்தமுடன் தங்கி இருங்கள். நான் போய்ப் படைகளை விரைவில் அழைத்து வந்து விடுகிறேன்.


கந்தா அப்படியானால் நானும் உன்னோடு வருவேன். நீ இல்லாமல் என்னால்.......


இளவரசே! உங்களை இனி ஒரு கணமும் தனியே அனுப்பமாட்டான் இந்த நந்திவர்மன்.


நம்மில் யாருமே போகாமல் படைகளை வர வழைக்கிறேன்... ஜம்பு... ஜம்பு... ஜ...ம்...பூ...ஊ...ஊ




சேனாபதியாரே, உங்கள் யோசனை எனக்குப் புரிகிறது. ஜம்புவினால் பேச முடியாதே. எப்படிப் படைகளை அழைத்து வரும் என்றுதானே சந்தேகப் படுகிறீர்கள். படைத் தலைவருக்கு ஒரு லிகிதம் எழுதிக் கொடுங்கள். நான் ஜம்புவிடம் அது செய்ய வேண்டியவைகளைப் பற்றிச் சொல்லி அனுப்புகிறேன்.


கந்தனின் உத்தரவைத் தாங்கிய ஜம்பு கண மாத்திரத்தில் கானகப் பாதை வழியே விரைந்தது.
தொடரும்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கேயின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக்கொண்டு அதன் ஊற்றுப்பெருக்கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

**டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!**

CB-6-19-TAM.


PHILIPS


பிலிப்ஸ்
நோவாஸோனிக்
ரேடியோ
ஒலியில் ஒரு புது உலகம்










PALMOLIVE
HAIR OIL

# திருமூலர் தவமொழி

ராஜாஜி சேரமு

52

இறைவனை நம்முடைய கண்களுக்குப் புலப்படுகிற ஒரு சாதாரணமான பொருளைப் போல, வெளியே பார்க்க முடியுமா? உள்ளத்தினுள்ளே உணர்வு மயமான அனுபவத்தில் கண்டு இன்புற வேண்டிய பொருள் என்பதைப் பாடுகிறார் திருமூலர்.

**வானுக்குள் ஈசனைத்**
**தேடும் மருளர்காள்**

[வானுக்குள்—ஆகாசத்தில். மருளர்காள்—அறிவடையாத மக்களே.]

வானத்தில் இறைவன் இருக்கிறான் என்று எண்ணும் அறியாமையை இப்படிச் சொல்லுகிறார்.

**தேனுக்குள் இன்பம்**
**சிவப்போ கறுப்போ**

தேனுக்குள் தித்திப்பு சிவப்பாக இருக்குமா அல்லது கறுப்பாக இருக்குமா என்று கண்ணினால் பார்க்க முடியுமா? அந்தத் தேனின் இனிப்புக்கு நிறம் ஏது?

**தேனுக்குள் இன்பம்**
**சிறந்திருந் தாற்போல்**
**ஊனுக்குள் ஈசன்**
**ஒளிந்திருந் தானே**

தேனுக்குள் பரந்து நிற்கிற இனிப்பு என்ற சுவையைப் போல, இந்த ஊனுக்குள் ஒளிந்து நிற்கிறான் இறைவன்!

**வானுக்குள் ஈசனைத்**
**தேடும் மருளர்காள்**
**தேனுக்குள் இன்பம்**
**சிவப்போ கறுப்போ**
**தேனுக்குள் இன்பம்**
**சிறந்திருந் தாற்போல்**
**ஊனுக்குள் ஈசன்**
**ஒளிந்திருந் தானே!**

இந்த அழகான பாடலுடன் திருமூலர் தவமொழியை முடிப்போம்.

* * *

முனிவர் நூல் முடிவில் குருநாதனாகிய நந்தி பெருமானை வணங்குகிறார். பாடலின் ஒவ்வொரு அடியிலும் குருவின் திருவடியை வாழ்த்துகிறார்.

**வாழ்கவே வாழ்கஎன்**
**நந்தி திருவடி**
**வாழ்கவே வாழ்க**
**மலம்அறுத் தான்பதம்**

[மலம் அறுத்தான் — ஆணவம், கன்மம், மாயை என்கிற மாசுகளை அறுத்தவனாகிய குருவினுடைய. பதம்—திருவடி.]

**வாழ்கவே வாழ்க**
**மெய்ஞ்ஞானத் தவன்தாள்**

[மெய்ஞ்ஞானத்தவன் – மெய்யான ஞானமே சொரூபமாக உள்ள திருமூர்த்தி. தாள்—திருவடி.]

**வாழ்கவே வாழ்க**
**மலம்இலான் பாதமே**

[மலம் இலான்—மாசு மறுவில்லாத புண்ணியமூர்த்தி.]

**வாழ்கவே வாழ்கஎன்**
**நந்தி திருவடி**
**வாழ்கவே வாழ்க**
**மலம்அறுத் தான்பதம்**

வாழ்கவே வாழ்கமெய்ஞ்
ஞானத் தவன்தாள்

வாழ்கவே வாழ்க
மலமிலான் பாதமே!

தம்முடைய குருவின் திருவடியைச் சிந்தித்து வாழ்த்திய திருமூலரை, நாமும் சிந்தித்து இந்தத் தொடரை முடிப்போமாக! திருமூலரின் தவப் பாடல்களைப் பற்றிய ஒரு பழைய துதிப் பாடல்:

ஐய மாக்கடல்
ஆழ்ந்த உயிர்க்கெலாம்

[ஐய மாக்கடல்—சந்தேகம் என்னும் பெருங் கடலுக்குள். ஆழ்ந்த உயிர்க் கெலாம் — மூழ்கித் துயர்ப்படுகிற மனிதருக்கெல்லாம்]

கையில் ஆமல
கம்எனக் காட்டுவான்

[கையில் ஆமலகம் என—உள்ளங்கை நெல்லிக்கனி போல, அத்தனை தெளிவோடு. காட்டுவான்—உண்மையை விளக்கிக் காட்டுவதற்காக. காட்டு வான்—காட்டுவதற்காக.]

மையல் தீர்திரு
மந்திரம் செப்பிய

[மையல்—மயக்கம். தீர்—தீர்த்து வைக்கிற. திருமந்திரம்—திருமந்திரப் பாடல்களை. செப்பிய—மொழிந்த.]

செய்ய பொற்றிரு
மூலனைச் சிந்திப்பாம்

[செய்ய பொற்றிருமூலனை—செம்மை நிரம்பிய பொன்னை திருமூல முனிவனை. சிந்திப்பாம்—தியானித்து வணங்குவோமாக!]

ஐய மாக்கடல்
ஆழ்ந்த உயிர்க்கெலாம்

கையில் ஆமல
கம்எனக் காட்டுவான்

மையல் தீர்திரு
மந்திரம் செப்பிய

செய்ய பொற்றிரு
மூலனைச் சிந்திப்பாம்!

—முற்றும்—

---

பம்பாய் மாதுங்காவிலுள்ள கலா நிலையத்தினர் தங்கள் பன்னிரண்டாவது வருடக் கொண்டாட்டமாக 10, 11 தேதிகளில் மராத்தி, தமிழ், மலையாளம் ஆகிய மொழிகளில் நாடகங்கள் நடத்தி ரஸிகர்களின் பாராட்டுதலைப் பெற்றனர். அவர்கள் நடத்திய தமிழ் நாடகத்தில் வரும் காட்சியைக் கீழேயுள்ள படத்தில் காணலாம்.

நாட்டியமணி குமாரி சுதா துரைசாமி நட்டுவாங்கம் செய்ய அவர் சிஷ்யை குமாரி அனுராதாவின் நாட்டிய அரங்கேற்றம் பம்பாய் ஜெய் ஹிந்த் கல்லூரியில் நடந்தது.



# முன் கதைச் சுருக்கம்

திருநெல்வேலியிலுள்ள 'லக்ஷ்மி விலாஸ்' மிட்டாய்க்கடையில், பொட்டலம் போட்டுக் கட்டுவதற்காகப் பழைய காகிதங்களும் பழம் புத்தகங்களும் விற்பனைக்கு வருவதுண்டு. நல்ல புத்தகங்களாக வரும்போது லாலா ராம்சிங் அவற்றை நண்பர்களிடம் படிக்கக் கொடுப்பார்.

ஒரு நாள் ராம்சிங் ஒரு புத்தகக் கட்டை என்னிடம் கொடுத்து அதை வீட்டுக்குப் போய் நிதானமாகப் பார்க்கும்படி சொல்லுகிறார். வீட்டுக்கு வந்ததும் 'பொட்டலத்தைத் திறந்து பார்த்தால் அது சித்திரக் காட்சிகள் அடங்கிய ஓர் ஓவிய மடல்! ஏதோ ஒரு கோவிலைப் புதுப்பிக்கிற பணியில் ஈடுபட்டுள்ள சித்திரக்காரன் ஒருவன், பலபல சித்திரங்களைக் காகிதத்திலே வரைந்து பார்த்திருக்கிறான்! ஆச்சரியத்தோடு அந்தச் சித்திரங்களைப் புரட்டினேன்! திகைப்பு என்னவென்றால், அந்தச் சித்திரங்கள் அனைத்திலும் மீண்டும் மீண்டும் ஒரே பெண்ணின் முகம் காணப்பட்டது! அந்த முகம் இதற்கு முன்பு நான் பார்த்த முகம். அடிக்கடி சந்தித்த முகம்! ஆனால் யார் என்று நினைவு வரவில்லை!

மறுநாள் மாலை வழக்கம்போல் ராம்சிங்கும் நானும் தாமிரவருணி நதியின் கரையில் ஆற்று மணலிலே சென்று உட்கார்ந்தபோது, அந்த முகத்தையுடைய வாலிபன் யாரென்று புரிகிறதா என்று லாலா கேட்டார்! வாலிபன் என்றதும் புரிந்து விட்டது! தினந்தோறும் அந்த ஆற்று மணலில் உள்ள சீனிவாச மண்டபத்துக்கு மேல் ஒரு வாலிபன் வந்து உட்காருவது வழக்கம்! அவனுடைய முகந்தான் அந்தச் சித்திர மடலில் திரும்பத் திரும்ப வந்த பெண் முகம்! ஆனால் அது பெண் முகம்! இவனோ வாலிபன்! அது மட்டுமில்லை. இந்த விசித்திர இளைஞனைச் சிங்கம்புத்தூர் ஜமீன் வட்டாரத்தைச் சேர்ந்த ஒரு மீசைக்காரரும் ஒரு வக்கீல் குமாஸ்தாவும் உளவு பார்த்து வருகிறார்கள்!

மீசைக்காரரும் வக்கீல் குமாஸ்தாவும் எங்களிடம் வந்தே இந்த வாலிபனைத் தெரியுமா என்று கேட்கிறார்கள். இவனோடு என்றைக்காவது ஒரு கல்லூரி மாணவி வந்தாளா என்றும் கேட்கிறார்கள்! எங்களுக்குத் தெரியாது என்றதும் அவர்கள் போய் விடுகிறார்கள்.

இளைஞனைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் அதிகரிக்கிறது. ஒரு நாள் சித்திர மடலும் கையுமாகச் சென்று அவனைச் சிநேகம் பிடிக்கிறோம். சித்திர மடலைப் பார்த்ததும் அவனுடைய கண் கலங்குகிறது. சிங்கம்புத்தூர் வட்டார மனிதர்கள் உளவு பார்க்கும் செய்தியை அவனிடம் கூறுகிறோம். தனது முகத்தை அப்படியே பெயர்த்து எழுதியது போல் சித்திரத்திலே காணப்படும் அந்தச் சுந்தரியின் வரலாற்றையும், அதற்குக் காரணமாக அமைந்த காதல் நிகழ்ச்சியையும், சொல்லத் தொடங்குகிறான் அந்த இளைஞன்:

சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரத புவனபதிக்கு ஒரே மகள் தாமரைச் செல்வி! அவளுடைய அத்தை மகன் பொன்னுத்துரை! இளமையில் ஒன்றாகவே வளர்கிற இந்த இருவருக்கும் திருமணம் செய்து வைக்க எண்ணுகிறார் ஜமீந்தார். ஆனால் இருவருடைய மனப்போக்கும் வெவ்வேறு விதமாக இருப்பதை அறிந்து சொல்லுகிறாள் ஜமீந்தாரிணி. எனவே அனவரதர் அந்த உத்தேசத்தைக் கைவிடுகிறார். கலைக்கல்வியில் மகளுக்கு ஆர்வம் உண்டாகும்படி வாய்ப்புக்கள் வழங்க எண்ணுகிறார்.

ஜமீந்தாருக்குச் சொந்தமான செண்பக நாயகி கோவில் என்ற கானகக் கோவிலில் பழைய சுவர்ஓவியங்கள் இருக்கின்றன. இவற்றைப் புதுப்பிப்பதோடு, தமது மகளுக்கும் சித்திரம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறார் ஜமீந்தார். சென்னைக்கு வந்து, ஓவிய ஆசிரியர் சிவகாமிநாதன் என்ற கிழவரைச் சிங்கம்புத்தூருக்கு அழைக்கிறார். இந்த வயதில் இவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்க முடியாது என்கிறார் கிழவர். ஜமீந்தார் கட்டாயப் படுத்துகிறார். அப்போது கிழவர் தமது மகன் வில்வநாதனைச் சிங்கம்புத்தூருக்கு அனுப்ப இசைவதாக வாக்குறுதி கொடுக்கிறார். ஆனால் அந்த வாக்குறுதியின் போது ஏதோ ஒரு பெரிய வாழ்க்கை இரகசியத்தை ஜமீந்தாரிடம் சொல்ல ஆரம்பித்தவர், மனத்துக்குள் அடக்கித் தடுமாறுகிறார். உயிர் போய் விடுகிறது.

சிங்கம்புத்தூர் வந்து சேர்ந்த வில்வநாதன் தாமரைச் செல்விக்கு ஓவியம் கற்பிக்கிறான். அவளுக்கு இந்த ஓவிய இளைஞனிடம் காதல் அரும்புகிறது. வில்வநாதன் குழம்புகிறான்.

பொன்னுத்துரையின் நெருங்கிய உறவினரும், சிங்கம்புத்தூர் ஜமீனின் முக்கிய நிர்வாகிகளில் ஒருவருமான வல்லாள வேலர் வில்வநாதனை ஒழித்துக் கட்டுவதற்குத் திட்டம் இடுகிறார். இதற்கு மத்தியில் வேணுலிங்கம், கடலையாண்டி என்ற இரண்டு கொள்ளைக்காரர்கள் வல்லாள வேலரிடமிருந்த கைத்துப்பாக்கிகளைக் கொண்டு போய் விடுகிறார்கள். வக்கீல் திவான்பகதூர் செந்தில் நாயகமோ இந்தக் கொள்ளைக்காரர்களிடம் ஜாக்கிரதையாக இருக்கும்படி வல்லாளவேலருக்கு எச்சரிக்கிறார்.

தாமரைச் செல்வி ஓரளவு ஓவியக் கலை கற்றபோது, எதிர்பாராத காதற் குழப்பத்தில் சிக்கித் தவித்த வில்வநாதன் செண்பக வனத்துக்கு வந்து கானகக் கோவிலின் ஓவியப் பணியைத் தொடங்குகிறான். இனி, செண்பக வனத்திலே வில்வநாதனைச் சந்திக்கிறோம்.

# நந்தவனம்

சோமு

## 14. நீலமயில் வாகனன்!

செண்பக வனத்தின் அழகான சூழ்நிலை வில்வநாதனுடைய உள்ளத்துக்கு இன்பம் தந்தது. கோவிலும் அதைச் சுற்றி நின்ற நந்தவனமும், அதை வளைத்துக் கொண்டு ஓடிய சிற்றோடையும், அந்தச் செண்பகக் காட்டிலே 'திண் திண்' என்று நடனமாடிக் கொண்டிருந்த அருவிகளும், மான்களின் கூட்டமும், பறவைகளின் பாட்டும், தோகை மயில்களின் ஆனந்தக் கூத்தும் அந்த ஒவிய இளைஞனுடைய இதயத்தில் இன்ப அமுதத்தைக் கொட்டின.

செண்பக நாயகி கோவிலுக்கும் குகைக்கும் நடுவே யாத்திரிகர்களுக்காகக் கட்டப்பட்டிருந்த ஒரு சிறு சத்திரத்தின் சின்னஞ்சிறு அறையில் இருந்து கொண்டு,சித்திரக் கற்பனைகளிலே மனத்தை ஓடவிட்டான் வில்வநாதன். அந்த ஓட்டத்தை அடிக்கடி வந்து தடை செய்தது சிங்கம் புத்தூர் நினைவு!



சிங்கம்புத்தூர் மாளிகைக்கு வந்து சேர்ந்ததும், அங்கே தாமரைச் செல்விக்கு ஒவியக் கலை கற்பிக்க ஆரம்பித்ததும், பிறகு அந்தக் கல்வியினிடையே வந்து பின்னிய எதிர்பாராத இதய நெகிழ்ச்சியும், எல்லாம் சேர்ந்து இப்பொழுது அவனுடைய மனத்தில் ஒரு வித அச்சத்தையே கொடுத்தன!

'என்ன விபரீதமான காரியம்! மனிதன் தனது நிலையிலிருந்து தவறுவதற்கு எத்தனை விநாடி வேண்டும்! மலையுச்சியிலே ஏறி நிற்பவன் தான் மிக எளிதாகக் கால் தவறிக் கீழே அதல பாதாளத்தில் விழுகிறான்! அப்படித் தானே மனித வாழ்க்கையும்!' என்று எண்ணிப் பார்த்தான் வில்வநாதன். அப்படியே உடம்பெல்லாம் ஆடியது.

'அந்தச் சூழ்நிலையிலிருந்து விடுபட்டு இங்கே இந்தக் கானகத்துக்கு வந்ததே நல்லதாய்ப் போயிற்று! தாமரைச்செல்வியின் முந்தானையைத் தொட்டு அவளுடைய கண்களைத் துடைத்த போது செல்வியின் உடம்பு சிலிர்த்ததே! அப்பொழுது தானே ஜமீந்தார் அங்கு வந்தார்!'

இவ்வாறு நினைத்த போது வில்வநாதனுக்கு இதயம் படபடத்தது.

'ஜமீந்தார் அப்படி வந்திரா விட்டால்?' என்று நினைத்துப் பார்த்தான் அந்த இளைஞன். அந்த நினைவை நினைத்துப் பார்க்கவே அவனுக்குப் பயமாக இருந்தது!

வில்வநாதன் சிந்தனை செய்தான்: தாமரைச் செல்விக்குத் தன்னிடம் ஏற்பட்ட அந்த அளவற்ற காதல்! அந்தக் காதலுக்குத் தனது உள்ளம் மறுமொழி கூறுகிறதா?

அவனுடைய உணர்ச்சி மிகுந்த இதயத்தின் அழைப்புக்குத் தனது உள்ளம் செவி சாய்க்கிறதா? தாமரைச் செல்விக்கு அவனிடம் ஏற்பட்ட காதலைப்போல அவனுக்குச் செல்வியிடம் காதல் உண்டாகியிருக்கிறதா?

யோசித்து யோசித்துப் பார்த்தான் வில்வநாதன். அவனுடைய சித்தம் குழம்பியது. அவனுடைய அறிவு குமைந்தது.

படருவதற்கு ஒரு கொழுகொம்பை நாடி நிற்கிற பூங்கொடி அவள்! சிங்கம் புத்தூர் என்ற உல்லாச வனத்தில் கவலையின்றி, செல்வச் செழிப்பிலே வளர்ந்து மலர்ந்து, தாவிச் சுற்றுவதற்காகக் காற்றிலே அசைகிற ஒரு மலர்க் கொடி அவள்! ஆனால் நான் யார்? தனது நிலைமை என்ன? தனது உள்ளத்தின் இலட்சியம் எது? தன்னுடைய தந்தையின் கனவுகள் என்ன? சிவகாமிநாதன் என்ற ஓர் ஏழை ஓவியனின் ஏழை மகன், கலைக்காகவே பிறந்து கலைக்காகவே வாழ்ந்து கலையிலேயே தன்னை மாய்த்துக் கொண்ட ஒரு சிந்தனைச் சிற்பியின் மகன் அல்லவா தான்! செல்வியோ?

வில்வநாதனுடைய அறிவுக்கு முன்னால் அவனுடைய இதயமானது குற்றவாளியைப் போன்று விலங்கு பூட்டி நின்றது. அவனுடைய அறிவே அவனுடைய இதய உணர்ச்சிகளை விசாரணை செய்தது:

'தவறு செய்யாதே! கலை என்ற மலையுச்சியிலிருந்து கால் இடறிக் கீழே விழுந்து விடாதே' என்று எச்சரிக்கை செய்தது அந்த இளம் ஓவியனுடைய சித்திரச் சிந்தனை!

'நான் சித்திரக்காரன்! இந்த உலகிலுள்ள அழகுப் பொருள்கள் யாவும் என்னுடைய கற்பனைக்கு எண்ணம் வழங்குகிற சிந்தனைக் களஞ்சியங்கள். இந்தக் களஞ்சியங்கள் எனக்குச் சொந்தமில்லை. இவை வழங்குகிற கற்பனைகள் மட்டுமே எனக்குரிய உடைமைச் செல்வங்கள்!'

இவ்வாறு எண்ணியவனாகக் குகைக்குள்ளே சென்று தனது சித்திரப் பணியைத் தொடங்கினான் வில்வநாதன்!

செண்பகநாயகி கோவிலின் பூஜையைக் கவனித்துக்கொண்டு நிர்வாகத்தையும் நடத்தி வந்தவர் சுந்தரேசப் பட்டர்! மலையடிவாரத்திலே வீடு! அறுபது வயதுக்கு மேல் ஆனபோதிலும் நோய்நொடி எதுவும் எட்டிப் பார்க்காத அந்தக் காலத்து உடம்பு அவருக்கு! மிடுக்கும் துடுக்கும் நிறைந்த இந்த முதியவர் ஓவியன் வில்வநாதனுக்கு அறிமுகமானார்!

சுந்தரேசப் பட்டரைத் தவிர அந்தச் செண்பகநாயகி கோவிலைச் சுற்றியிருந்த வன தேவதைகளின் பீடங்களுக்கு வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில், பூஜை போடுவதற்காக மலையடிவாரத்திலிருந்து ஒரு பூஜாரி வருவார். அவருடைய புதிய நட்பும் வில்வநாதனுக்குக் கிட்டியது!

நாட்டுப்புறத்துக் கோவிலின் அமைப்பு முறைகள், வன தேவதைகளின் வழிபாட்டு முறைகள், சிற்ப அமைதிகள் முதலியவற்றை நன்கு கற்றிருந்த ஒரு பரம்பரைப் பூஜாரி அவர். அந்த வட்டாரத்தில் ''உவச்சர்'' என்று அழைக்கப்பட்ட ஒரு பரம்பரையைச் சேர்ந்தவர் அவர்! சுந்தரேசப் பட்டர் அந்தப் பூஜாரியைக் 'கம்பர்' என்றே அழைத்தார். அந்தப் பூஜாரி மரபைச் சேர்ந்தவர்களையெல்லாம் கம்பர் என்றே அழைப்பது வழக்கம் என்றும், அவர்கள் எல்லாரும் தெய்வச் சிற்பங்கள் செய்வதிலும், சித்திரங்கள் வரைவதிலும், நாகஸ்வரம் வாசிப்பதிலும் மிகவும் தேர்ந்த கலைஞர்கள் என்றும் வில்வநாதன் தெரிந்து கொண்டான். இந்த இருவருடைய நட்புக்கும் காரணமாக அமைந்த அந்தக் கோவிலும், அந்தக் கோவிலின் அமைப்பிலே பரம்பரை பரம்பரையாக வழங்கி வந்த கலைகளும், தமிழ் நாட்டின் தொன்மையான ஆசாரத்துக்கும், பண்பாட்டுக்கும் சான்றுகளாக நின்றன, அந்த ஓவியனுடைய கண்களுக்கு முன்னால்! தன்னுடைய சித்திரப் பணி பூர்த்தியான பிறகு, அந்தக் குகையின் தாழ்வாரச் சுவர்களிலே இந்த இரண்டு அதிசய நண்பர்களின் ஓவியங்களையும் வரைந்து நிறுத்த வேண்டும் என்று கூட ஒரு விசித்திர ஆசை, அந்த ஓவிய இளைஞனுடைய உள்ளத்திலே இப்பொழுது புதிதாக அரும்பிற்று!

ரிஷ்யசிருங்கர், அவரை மயக்கிய மோகனக் கணிகை, தாமரையிலே தைத்த விபரீதமுள் ஆகிய படங்கள் மறைந்து, பட்டரின் உபசாரமான அன்பும், கம்பரின் தொன்மையான கலைப் பண்பும் ஒரு புதிய சூழ்நிலையை வழங்கின! கானக வாழ்க்கையைத் தொடங்கும் போது ஏற்படுகிற மனக் குழப்பமும், அச்சமும் மறைந்து இப்பொழுது சித்திரக் கற்பனைக்கு வேண்டிய சரியான ''சீதோஷ்ண நிலை'' வில்வநாதனுடைய உள்ளத்தைச் சூழ்ந்தது! அவனுடைய இறகு எழுந்து பேசத் தொடங்கிற்று!

பட்டர் வருவார், 'பிரமாதம்' என்பார்! கம்பர் வருவார். 'அற்புதம்' என்பார்! அப்போதெல்லாம் வில்வநாத

னுடைய இதயத்துக்குள், மறைந்த தந்தையின் குரல் கேட்கும். 'நன்று மகனே! நன்று!' என்று தன்னை நோக்கித் தனது தந்தை பேசுவது போல ஒரு பிரமை தோன்றும்! அடுத்த கணம் அந்த வனமும், அவனைச் சுற்றி நின்ற மலர்க் கொடிகளும், எதிரேயிருந்த சுவரும் எல்லாம் மறைந்து விடும்! புறக்கண்ணின் பார்வைக்கு அப்பாற்பட்ட ஒரு சிந்தனை உலகிலே சென்று நிற்கும் மனம்! இறகும் வர்ணங்களும் அந்த அக உலகத்தின் கனவுகளை வாங்கி அப்படியே ஓவியங்களாக மொழிபெயர்த்து நிறுத்தும்! எத்தனை மணி நேரம் இப்படிச் செல்லுமோ, அவனுக்கே தெரியாது! சுந்தரேசர் வந்து அவனை இந்த உலகுக்கு மீட்டுக் கொண்டு வந்து உணவு உண்ணும்படி சொல்லுவார்! அப்போதுதான் வில்வநாதன் கனவு கலைந்து சுயநினைவுக்கு வருவான்!

செண்பகநாயகி கோவிலையடுத்த குகையிலே இப்படி இரவும் பகலும் சித்திர வேலை தொடர்ந்து நடந்து வந்தது! இரண்டு வாரங்கழித்து ஒரு நாள் ஜமீந்தார் அனவரதர் வந்தார். எல்லையற்ற பரவசத்திலே கூத்தாடினார்!

''வில்வநாதா! நான் எதிர்பார்த்ததை விட வேகமாக வேலை முடிந்து விட்டது! இதே போல இதே வேகத்தோடு சென்றால், இன்னும் இரண்டே வாரங்களில் கோவிலின் சுற்றுச் சுவர்களையும் புதுப்பித்து விடுவாய் என்று தோன்றுகிறது!''



இவ்வாறு சொன்னார் அனவரதர்!

''அண்ணலே! இந்தக் குகை ஓவியங்களில் எனக்கு அதிகமான வேலை கிடையாது. அதனால் தான் இத்தனை சீக்கிரமாக முடித்து விட்டேன். ஆனால் அந்தச் சுவர்கள் அப்படியில்லை!'' என்றான் வில்வநாதன்.

''அதென்ன அப்படிச் சொல்லுகிறாய்?'' என்று ஆவல் மிகுந்தவராகக் கேட்டார் ஜமீந்தார்.

''குகைச் சித்திரங்களில் பெரும்பாலானவை, ஆசு மறையாமல் நின்றன. எனவே அவற்றைப் புதுப்பிக்க அத்தனை சிரமம் இருக்கவில்லை. ஆனால் கோவிற் சுவர்கள் அப்படியில்லை. அந்தச் சித்திரங்கள் எல்லாம் முழுதும் அழிந்து கிடக்கின்றன! ஆகையால் பெரும்பாலும் எனது சொந்தக் கற்பனையைக் கொண்டுதான் புதிதாகவே வரைய வேண்டும்!'' என்றான் வில்வநாதன்.

ஜமீந்தார் குகையின் பல பாகங்களையும் கூர்ந்து பார்த்தார். பல காட்சிகளுக்கு மத்தியிலே ஓர் ஓரத்தில் மட்டும் குகையின் சுவர் புதுப்பிக்கப்படாமல் மங்கியபடியே காட்சி தந்தது. அந்த இடத்தை மட்டும் வில்வநாதன் பழைய நிலையிலேயே விட்டிருந்தான்.

''தம்பி! அது என்ன? அந்த ஓரத்தில் மட்டும் உன்னுடைய இறகு படவே இல்லை போலிருக்கிறதே!'' என்று திகைப்போடு கேட்டார் அனவரதர்.

''ஆமாம்: அந்தப் பக்கமே போகவில்லை நான்! பாரதத்தில் அது ஒரு சிறிய உப கதை!''

வில்வநாதன் இப்படிச் சொன்னதும் ஜமீந்தார் அந்த ஓரத்துக்குச் சென்று பார்த்தார். அது ரிஷ்யசிருங்கரின் கதை!

''தம்பி! இந்தச் சித்திரத்தை அப்படியே மங்கலாகவே விட்டு வைத்திருக்கிறாயே! ஆகா! எத்தனை மங்கியிருந்த போதிலும், அந்த முனிகுமாரனுடைய முகத்தில் பிரகாசமாக ஒளி வீசுகிற தவச் சுடர் எத்தனை அற்புதமாக இருக்கிறது! உனக்கு ஏன் இந்தச் சித்திரத்தில் இத்தனை அசிரத்தை! ஏன் இதை நீ புதுப்பிக்கவில்லை?'' இவ்வாறு கேட்டார் ஜமீந்தார் அனவரதர்.

''அண்ணலே, அசிரத்தை இல்லை. ஒரு வித அச்சம்! இந்தக் குகையிலுள்ள இத்தனை ஓவியங்களிலும் இது ஒன்றுதான் என்னை மிகவும் குழப்புகிறது. என்ன வர்ணங்களை எப்படிக் குழைத்து இந்தத் தவக் கோலத்தைப் புதுப்பிப்பது என்று புரியவில்லை எனக்கு. அநேகமாகச் சுற்றுச் சுவரின் சித்திரங்களையெல்லாம் வரைந்து முடித்து விட்டுப் பிறகுதான் கடைசியாக இதைத் தொடலாம் என்று எண்ணியிருக்கிறேன்!''

இப்படி வில்வநாதன் சொல்லும்போது அவனுடைய உடம்பு நடுங்கிற்று. பக்கத்தில் நின்று

கொண்டிருந்த சுந்தரேசப் பட்டர் இதைக் கவனித்துக் கொண்டே ஜமீந்தாரிடம் சொன்னார்:

''உண்மைதான்! முனிவர்களுடைய சித்திரங்களை வரைவது என்றால், அதற்காக அந்தக் காலத்தில் பல நாட்கள் தொடர்ந்து விரதம் காத்து, நோன்பு இருப்பார்களாம் சித்திரக்காரர்கள்! நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன்! தெய்வத்தின் பக்கத்தில் போவதை விடப் பக்தர்களின் பக்கத்தில் போவது அத்தனை பெரிய சாதனை! தேவதைகளை உருவாக்கி நிறுத்துவதை விட, மகான்களை உருவாக்குவது பெரிய தவம்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே சுந்தரேசப் பட்டர் ஒரு பரவசத்திலே கண்கலங்கி நின்றார்!

குகையிலிருந்து வெளியே வரும்போது ஜமீந்தார் சொன்னார்:

''தம்பி! நீ சொல்கிறபடியே செய். ரிஷியசிருங்கரின் சித்திரம் கடைசிச் சித்திரமாகவே இருக்கட்டும். சுற்றுச் சுவர்களையெல்லாம் முடித்துக் கொண்டு மறுபடியும் இங்கே வந்து கொள்ளலாம் நீ! புதிதாக நீயே கற்பனை செய்து எழுத வேண்டிய சுவர்ச் சித்திரங்களைப்பற்றி இனிமேல் சிந்தனை செய்யத் தொடங்கு தம்பி! அடுத்த முறை நான் இங்கே வருவதற்குள் அந்தப் பணி....''

ஜமீந்தார் பேச்சை முடிப்பதற்குள் சுந்தரேசப் பட்டர் குறுக்கிட்டார்:

''ஜமீந்தார் அவர்களே! இடைமறித்துப் பேசுவதற்காக மன்னிக்க வேண்டும். அந்தச் சுற்றுச் சுவரிலே, கிழக்குப் பக்கத்தில், நீலமயில் வாகனன் எழுந்தருளி நின்றால் பிரமாதமாக இருக்கும். நீங்கள் அங்கிகாரம் கொடுத்தால் கந்தபுராணக் கதைகளை எழுதும்படி தம்பிக்குச் சொல்ல வேண்டும். அதற்கு வேண்டிய வரலாற்று நுட்பங்களையும் ஒவியச் செய்திகளையும் நான் கொடுக்கிறேன்!''

சுந்தரேசப் பட்டர் இவ்வாறு சொல்லி முடித்தாரோ இல்லையோ, ஜமீந்தார் ஒரு குழந்தையைப் போலத் துள்ளினார்.

''பேஷான யோசனை! அந்தக் காலத்தில் என்னுடைய தகப்பனருக்கு மிகவும் பிடித்த பாட்டு ஒன்று உண்டு; 'நீல மயில் வாகனனே' என்று ஆரம்பிக்கிற பாட்டு! அப்பாவே அந்தப் பாட்டை அடிக்கடி பாடுவார்கள்! நீலாம்பரி ராகத்தில் பாடுவார்கள்!''

இப்படிப் பேசத் தொடங்கிய ஜமீந்தார், அவருடைய தகப்பனாரைப் பற்றியும், அவருடைய சங்கீத மோகம் பற்றியும் பேசிக் கொண்டே, அந்தப் பாட்டையும் வாய்க்குள் மெதுவாக முனகினார். அப்போதுதான் வில்வநாதனுக்கு ஜமீந்தாருடைய சங்கீத ஆர்வம் புரிந்தது.

ஜமீந்தார் அன்று செண்பகவனத்திலிருந்து புறப்பட்டுச் சென்ற பிறகு, வில்வநாதனிடம் சுந்தரேசப் பட்டர் கந்தபுராணக் கதையை வரைவதற்கான பல பல யோசனைகளை வர்ணித்தார்!

அன்றிரவு முழுதும் வில்வநாதன் சரியாகத் தூங்கவில்லை. கந்தபுராணக் கற்பனைகளிலேயே அவனுடைய உள்ளம் சுழன்று கொண்டிருந்தது. இடையிடையே ரிஷிய சிருங்கர் ஒவியத்தைப் பற்றி ஜமீந்தார் கேட்ட கேள்வியும், தான் சொன்ன பதிலும், அப்போது தனக்கு ஏற்பட்ட நடுக்கமும், அந்த நடுக்கத்திற்கு மத்தியில் சுந்தரேசப்பட்டர் 'தடுத்தாட்கொண்டு' சொன்ன விளக்கமும் — எல்லாம் சேர்ந்து சிந்தனையைச் சிதறச் செய்தன!



'மறைந்திருந்த சிங்கம்புத்தூர் நினைவுகளையெல்லாம் மீண்டும் கிளறி விட்டாரே ஜமீந்தார்! என்ன விபரீதம் இது! இனியும் இத்தகைய குழப்பங்களுக்கு இடம் கொடுக்கலாமா!' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள முயன்றான் வில்வநாதன்.

ஜமீந்தார் கிளறி விட்ட நினைவுகள் மீண்டும் மீண்டும் மனத்தைக் குழப்பின! நீல மயிலும், முருகப் பெருமானுமாக ஓவிய உள்ளத்திலே எழுந்தருள வேண்டிய கந்தபுராணக் கதையைத் தாமரைச் செல்வியும் அவளுடைய ஓவியமும் வந்து நின்று மறைத்தன! ஓவியக் குறிப்புப் புத்தகத்தில் ஏதேதோ கோடுகளை வரைந்து பார்க்க முயன்றான். ஆனாலும் ஒன்றும் சீராக வரவில்லை!

தோகை மயிலை வரைவான்! தாமரை மயில் வந்து அதை மறைத்தது! ஆறு முகங்களைக் கற்பனை செய்வான்! அந்த ஒரு முகம் வந்து ஆறு முகத்தையும் மறைத்தது. சரவணப் பொய்கையைச் சித்திரம் தீட்ட முயன்றால், அவனுடைய மனப் பொய்கையிலே குழப்ப அலைகள் எழுந்து பொங்கின! நீண்ட நேரம் இப்படியே கலங்கிக் கலங்கி அந்தக் கானக விடுதியான ஏகாந்தச் சத்திரத்திலே உட்கார்ந் திருந்தான் வில்வநாதன்! கம்பர் வந்து பார்த்தார். அவருக்கு நிலைமை புரியவில்லை.

''தம்பி! நான் பூஜைகளை முடித்துக் கொண்டு பிரசாதத்தோடு திரும்பு கிறேன். அதுவரை நீங்கள் இந்தச் சித்திரக் குறிப்புக்களையெல்லாம் மறந்து விட்டுக் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்! உங்கள் கண்கள் எப்படியோ சிவந்திருக்கின்றன. மனசில் ஏதோ குழப்பம் தெரிகிறது!''

இவ்வாறு கவலையோடு சொல்லிவிட்டுச் சென்றார் சங்கரநமச்சிவாயக் கம்பர் என்ற அந்தப் பூஜாரி.

சத்திரத்தின் வெளிக் கதவைப் பூட்டி விட்டு உள்க் கூடத்துக்கு அருகிலேயுள்ள ஒரு சிறு திண்ணையிலே சாய்ந்தவாறு, மறுபடியும் குழம்பிக் கொண்டிருந்தான் வில்வநாதன்!

மாலை மயங்கிக் கொண்டு வருகிற நேரம்! மேற்கு வானத்தில் சூரியன், கிறங்கிச் சரிந்து கொண்டிருந்தான். தொலைவிலே கம்பர் மணியடிக்கும் ஓசை கேட்டது. தெற்கிலிருந்து வீசிய காற்று, அருவியின் ஓசையோடு அதன் குளிர்ச்சியையும் சுமந்துகொண்டு சத்திரத்தின் பலகணி வழியாக உள்ளே நுழைந்தது. அந்தத் தண்மையான காற்றிலே இதயத்தைக் கொள்ளைகொள்ளுகிறஇனிமையோடு ஒரு பெண் குரல் தவழ்ந்தது! நெற்றியைப் பிசைந்து கொண்டே குழம்பிக் கொண்டிருந்த வில்வநாதன் நிமிர்ந்து உட்கார்ந்தான். பாடல் இன்னும் சற்று அருகிலே கேட்டது. வார்த்தைகள் இப்பொழுது தெளிவாகத் துலங்கின.

நீல மயில் வாக னனே!
வெற்றி வே லாயுதனே!
கோலம் நிறைந்த கோழிக்
கொடி படைத்த சேவகனே!
ஆறிரண்டு தோளா னே
ஆறு முகத் தானே!
திரு மறை கொஞ்சும்
சிறுசதங்கைத் தாளானே!

ஆயிமார் அறுவர்களும்
அம்பிகையும் கங்கையும் முன்
சேயே என் றேந்திச்
சிரம் மோந்து உட்குளிர்ந்த
கானகத்து வேடன்
கன்னிகைக்காய்ப் பரண்மேல்
ஞானத் தமிழ்ப் பாதம்
நண்ணிவைத்த நாயகமோ!

வில்வநாதனுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது. காற்றோடு காற்றாக வந்த ஒலிக்கு ஒரு வடிவம் உண்டா? நீல மயிலும், வடிவேலும், ஆறுமுகமும்,— ஆறிரு தோளும் அப்படியே வில்வநாதனுடைய கண் முன் வந்து நின்றன! சரவணப் பொய்கையிலே ஆறு அன்னையர்களும், ஒரு சேர அந்தத் தெய்வக் குழந்தையை அள்ளி அணைத்துச் சிரம் மோந்து நிற்கும் காட்சி தெரிந்தது! வேதங்கள் கொஞ்சுகிற பாதச் சலங்கையின் ஒலி கேட்டது! கானகத்திலே நம்பி ராஜனுடைய கன்னி பரணிலே ஏறி நிற்பதும், முருகப் பெருமானுடைய ஞானத் தமிழ்ப் பாதங்கள் அங்கே அடியெடுத்து வைப்பதும், எல்லாம் வண்ண வண்ண ஓவியங்களாக, வில்வநாதனுடைய கண் முன்னே தெரிந்தன!

''என்ன மாயம் இது! இசைக்கும் இசையோடு குழைந்த சொற்களுக்கும் இத்தனை சக்தி உண்டா? கண்ணை மறைத்த குழப்பங்களை யெல்லாம் அகற்றி, இப்பொழுது என் கண்முன்னே முருகனைக் கொண்டு நிறுத்துகிறதே இந்தக் குரல்? இந்தப் பெண் யார்? என்ன அதிசயமான இனிமை! என்ன தெய்விகமான பாடல் இது! எத்தனை இன்பமான குரல் இது! பெண்மைக்கு இப்படி ஒரு தெய்விக ஆற்றலும் இருக்கிறதா!''

இவ்வாறு சொல்லிக்கொண்டே எழுந்து நின்று பலகணி வழியாக நந்தவனத்திற்குள்ளே பார்த்தான் ஓவியன் வில்வநாதன்! (தொடரும்)




**டாக்டர் டி. பட்டாபிராமன்**
சென்னை ராஜ்யக் கால்நடைத் துறை அதிகாரி

இவ்வருடம் சென்னை மாநிலக் கால் நடைக் கண்காட்சி 22-3-62லிருந்து திருச்சியில் நடைபெற்று வருகிறது. இந்தச் சமயத்தில் தமிழ் நாட்டில் கால்நடைச் செல்வங்களின் வளர்ச்சி பற்றிப் பொதுமக்கள் சிறிதேனும் சிரத்தை கொள்வார்களானால், தமிழகத்தின் பொதுவளம் உயர்வுக்குப் பெரிதும் பயன்படக் கூடும்.

தமிழ் நாட்டில் கால்நடைகள் வளர்ப்புக்கு அளவற்ற வாய்ப்பு இருக்கிறது. தமிழ்நாட்டின் வெட்ப தட்ப நிலைக்கு ஏற்ற முறையில் ஆவினங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை நல்ல முறையில் வளர்த்து வருவோமானால் பால் பஞ்சம் தீரும்; காளைகளின் உழைப்பும் நமக்குப் பயன்படும். விவசாயமும் செழிப்புறும். பின் கூறப்படும் மாடுகளைத் தமிழ் மக்கள் தங்கள் தங்கள் சக்திக்குத் தகுந்தவாறு வளர்த்துப் பயன் பெறலாம்.

## காங்கேயம் மாடுகள்

இது தமிழ் நாட்டில் பிரபலமான இனங்களில் ஒன்று. கோவை மாவட்டத்தில் தாராபுரத்தைச் சேர்ந்த காங்கேயம் பகுதியில் இந்த மாடுகள் நெடுங்காலமாக வளர்க்கப்பட்டு வருவதால், இதற்குக் காங்கேயம் மாடுகள் என்ற பெயரும் நிலைத்து விட்டது. இங்குள்ள குடியானவர்கள் தங்கள் பண்ணைகளில் இம்மாடுகளை ஆர்வமாக வளர்த்து வருகிறார்கள். இவற்றில் உயர்ந்த ரகப் பசுக்களும் காளைகளும், பழையகோட்டைப் பட்டக்காரர் அவர்களின் பண்ணையில் புகழத்தக்க விதத்தில் வளர்த்து மக்களுக்கு அளித்து வருகிறார்கள். திருப்பூர், அவினாசி, கண்ணபுரம் மதுரைச் சந்தைகளில் இம்மாடுகள் கிடைக்கும்.



முர்ரா எருமை

பசுக்களில் உயர்ந்த ரகங்கள் 1000 பவுண்டுகள் வரை ஒரு ஈத்துக்குப் பால் கொடுக்கின்றன. நாலு பவுண்டு பால் என்பது ஒரு பட்டணம் படி பாலுக்குச் சமம் என்று கூறலாம். பசுக்களின் பயனைவிடக் காளைகளின் பயனே விவசாயிகளுக்குப் பெரிதும் முக்கிய

தர்பார்க்கர் பசு





சிந்திக் காளை

மாக விளங்கி வருகிறது. சளைக்காமல் கடினமாக உழைக்கும் வளமை பெற்றவை காங்கேயம் காளைகள்.

### உம்பளாச்சேரி

இவ்வினம், தஞ்சை மாவட்டத்தில் திருத்துறைப் பூண்டி பகுதிகளைத் தாயகமாகக் கொண்டு வளர்ந்து வருகின்றன. இம்மாடுகளுக்குச் 'சாதி மாடு', 'தெற்கத்தி மாடு', 'மொட்டை மாடு' என்றும் பெயர்கள் உண்டு. இவை உருவத்தில் சிறிதே போன்று காணப்பட்டாலும் உறுதியானவை. காளைகள் நன்றாக உழைக்கின்றன. சிறிது அளவே தீவனத்தில் கூட வளர்க்கக் கூடிய இயல்புடையவை. எனவே பராமரிப்புச் செலவு இந்த இனத்துக்குக் குறைவு என்று கூறலாம். மிக ஏழை விவசாயிகள் கூட இம்மாடுகளை யெல்லாம் வைத்துக் காப்பாற்றிப் பயன் பெறலாம்.

இவ்வினத்தின் பசுக்கள் அதிகம் பால் கொடுப்பதில்லை என்பது உண்மை. ஒரு நாளைக்கு ஒன்று முதல் நான்கு பவுண்டு அளவே கொடுக்கின்றன என்றாலும், பசுக்களின் பராமரிப்புச் செலவு மிகக் குறைவு என்பதை மறந்துவிடக் கூடாது. மொத்தத்தில் இம்மாடுகள் விவசாயத்துக்கும் சிறு குடித்தனக்காரர்களுக்கும் சுலபமாகப் பயன் தரும் இனமாகும்.

காங்கேயம் காளை



### ஆலம்பாடி

சேலம் ஜில்லா காவேரிக் கரையில் உள்ள ஆலம்பாடி என்னும் கிராமத்தின் பெயராலேயே இவ்வினம் 'ஆலம்பாடி மாடுகள்' என்று பெயர் பெற்றுவிட்டன. இந்தக் கிராமப் பகுதியிலேயே இம்மாடுகள் நெடுங் காலமாக உற்பத்தியாகி வருகின்றன. அருகிலுள்ள காடுகளில் இம்



முர்ரா எருமைக்கடா

மாடுகள் தன்னிச்சையாக உலவி மேய்ந்து வரச் சுலபமாக இருப்பதால் மலைக் காடுகளில் உள்ள புல்லும், தரிசு நிலங்களில் வளரும் புல்லும் இவற்றுக்கு இயற்கை உணவாக அமைந்திருக்கின்றன. கோடையில் தண்ணீர் பருக இம்மாடுகளுக்குக் காவேரி நதியும் சிற்றாறுகளும் உதவுகின்றன. வருடத்தில் பெரும் பகுதி நாட்களில், குறிப்பாக ஜூலை முதல் ஜனவரி மாதம் வரை இம்மாடுகள் காடுகளிலேயே வாழ்கின்றன. அறுவடைச் சமயத்தில் குடியானவர்கள் இம்மாடுகளை யெல்லாம் வயல்களுக்கு ஓட்டி வருவார்கள். இங்கு விவசாய வேலை முடிந்ததும் திரும்பவும் மேய்ச்சலுக்குக் காடுகளுக்கு ஓட்டி விடுவார்கள்.

பசுக்கள் குறைந்த அளவில்தான் பால் கொடுக்கின்றன. ஆனால் காளைகள் வண்டி இழுக்கவும், உழவு செய்யவும் பெரிதும் பயன்படுகின்றன. காளைகள் பருமனாகவும் பலமுள்ளவையாகவும் விளங்கும். சிரமம் இல்லாமல் பராமரிக்கக் கூடிய இனங்களில் ஆலம்பாடி மாடுகள் வகையும் ஒன்று.

### பர்கூர்

இவ்வினமும் கோவை மாவட்டத்தைச் சேர்ந்ததே. பவானி தாலூகாவில் உள்ள பர்கூர் மலைகளைச் சுற்றிலுமுள்ள பகுதிகளில், அங்குள்ள 'லம்பாடி'கள் என்ற மக்களால்



ஆலம்பாடிப் பசு

நன்கு வளர்த்து வரப்படுகின்றன. பொதுவாக இம்மாடுகள் உருவத்தில் சிறிதாகவும், பார்க்க வனப்பாகவும் தோற்றம் அளிக்கும். காளைகள் சற்று மூர்க்க குணம் வாய்ந்தவைதான்! ஆனால் பழக்கி விட்டால் நன்றாக உழைக்கின்றன. ஓட்ட சக்தியும் காளைகளுக்கு அதிகம். இங்குள்ள மலைவாசிகள், மற்றும் கிராமவாசிகள் விவசாயமெல்லாம் புஞ்சைப் பயிர்த் தொழில்தான். ராகி போன்ற தானியங்களே இங்கு பயிரிடப்படுகின்றன. இதற்கு இம்மாடுகள் உரத்துக்காகவும் வளர்க்கப்படுகின்றன. இங்குள்ள குடியானவர்கள் சாதாரணமாக ஒவ்வொருவரும் பதினைந்து முதல் இரு நூறு மாடுகள் வரை வளர்த்து வருகிறார்கள். வருடத்தில் பெரும் பகுதி நாட்களை இம்மாடுகள் மலைக்காடுகளிலே கழிக்கின்றன. காளைகள் சந்தைகளில் விற்கப்படுகின்றன. பசுக்கள் கறப்பது சிறிது அளவுதான். கன்றுகளுக்கே அவை விட்டு விடப்படு கின்றன. ஆனால் காளைகளால் விவசாயத்தில் நல்ல பலன்



காங்கேயம் பசு

உண்டு. வாடம் கட்டாமலே காளைகள் வண்டி இழுக்கும் விதத்தில் கால்கள் வலிவு பெற்றிருக்கின்றன. குளம்புகள் கனமாக அமைந்துள்ளன.

## புலிக்குளம்

தமிழ் நாட்டின் பிரபல 'ஜல்லிக்கட்டு மாடுகள்' என்று இதன் காளைகள் பெயர் பெற்றிருக்கின்றன. மதுரை ராமநாதபுரம் மாவட்டத்தில் இம்மாடுகள் பிரசித்தமாக இருந்து வந்து இப்போது இவ்வின வளர்ச்சி குறைந்து வருகின்றன. 'ஏறு தழுவுதல்' என்ற தமிழ் நாட்டு வீர விளையாட்டு இக்காளைகளைப் பற்றித்தான் குறிப்பிடுவார்கள். விரோதிகளைக் கண்டால், இந்தக் காளைகள் கூட்டமாக ஒன்று சேர்ந்து தாக்கி வீழ்த்தும் குணம் உடையவை.

வெளித் தோற்றத்துக்கு இவை காங்கேயம் இனம் போலவே தோன்றினாலும் குணத்தில் வேறானவை. குறைந்த தீவனத்தில் வளரக் கூடிய மாடுகளில் இவ்வகையும் ஒன்று. காளைகள் நன்றாகப் பளு இழுக்கும். உழவுக்குச் சிறந்தவை. முக்கியமாகப் புஞ்சை உழவுக்கு இவை நல்ல இனம் என்று கூற வேண்டும். பசுக்கள் பால் கொடுக்கும் அளவு குறைவு தான். ஆனால் பார்வைக்கு நல்ல தோற்றம் உடையவை. உடலில் பழுப்பான வட்டங்கள் இப்பசுக்களுக்கே உரிய தனிச் சிறப்பாகக் காட்சி தரும். தீவனச் செலவு குறைவானதால் இவ்வினத்தைச் சேர்ந்த மாடுகளும் விவசாயிகளுக்கு நன்கு பயன்படக் கூடும். இந்த இனத்தைச் சேர்ந்த மாடுகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து வருவது ஒரு துர்ப்பாக்கியமான விஷயமாகும். இவை அடியோடு மறைந்து விடாமல் இருக்கத் தமிழ் மக்கள் ஆதரவு காட்ட வேண்டும்.

## சிந்தி

இந்தியாவின் சிறந்த பால் இன மாடுகளில் சிந்தியும் ஒன்று. நம் நாட்டின் எந்த விதமான சீதோஷ்ண நிலைமைக்கும் ஏற்ற வகையில் அநுசரித்து வளரக்கூடிய மாடுகள் இவற்றின் தனிச் சிறப்பாகும். பெரிதும் பாலுக்

அலிகார்க் காளை



காகவே பசுக்கள் வளர்க்கப்பட்டு வருகின்றன. இந்த இனத்துப் பசுக்களின் பாலுக்கு ஆசைப் பட்டு இவற்றைப் பர்மா, மலாயா போன்ற நாடுகளில் உள்ளவர்களும், வாங்கிச் சென்று வளர்த்து வருகிறார்கள். குறைந்தது நாள் ஒன்றுக்குப் பதினாறு படி பால் கொடுக்கின்றன இப் பசுக்கள். வருடத்தில் பத்து மாதங்கள் தட்டில்லாமல் கறக்கின்றன. அதிக அளவு நாள் ஒன்றுக்குச் சில பசுக்கள் ஐம்பத்து நான்கு பவுண்டுகள் (பதின்மூன்று படிவரை) பால் அளித்து வருகின்றன.

காளைகளும் நன்றாக உழைக்கின்றன. வயல்களில் வேலை செய்யவும் வண்டிகளை இழுக்கவும் சிந்திக் காளைகள் சளைப்பதில்லை. கம்பீரமான தோற்றம் உடையவை. நம் ராஜ்யத்தில் ஓசூர் கால்நடைப் பண்ணையில் இவ்வினம் மிகவும் கருத்துடன் வளர்க்கப்பட்டு வருகின்றது. இங்கு கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாகச் சிந்திப் பசு வளர்ச்சி சிறப்பாக நடைபெற்று வருகிறது. நமது தேசத்திலேயே மற்ற இடங்களை விடத் தமிழ்நாட்டில் வளரும் சிந்திப் பசுதான் மிக அதிகமாக — ஒரு ஈத்துக்கு 5000 பவுண்டு பால் கொடுத்து வருகிறது. இந்த இனப் பசுக்கள் இன்னும் நிறைய அபிவிருத்தியானல் தமிழகத்தில் பால் பஞ்சம் தீர்ந்துபோகும்.

## கிர்

இவ்வினத்தின் தாயகம் சௌராஷ்டிரப் பிரதேசமாகும். ஆனல் இந்த இனத்து மாடுகள் வட பம்பாய், பரோடா, மேற்கு ராஜபுதனம் பகுதிகளிலும் காணப்படுகின்றன. பால் இனத்தைச் சேர்ந்த மாடுகள்தான் இவை. ஆனல் காளைகள் உழவு முதலிய வேலைகளுக்கும் பயன்படுகின்றன. பார்ப்பதற்கு அழகான இனம் இது. மிகவும் சாந்தமான குணச் சிறப்பு கொண்டவை. காதுகள் நீண்டு பொதுவான வெண்மை நிற உடலமைப்பு கொண்டவை. காளைகள் நன்றாக உழைக்கும் என்ற போதிலும் சற்றுச் சுறுசுறுப்பு குறைவுதான். எனவே ஊக்கப்படுத்தி உற்சாகம் ஊட்டினல் சுறுசுறுப்பு பெற்று விடும். இவ்வினப் பசுக்களில் ஓர் ஈத்துக்கு 11,000 பவுண்டு பால் கொடுக்கும் பசுக்களும் இருந்து வருகின்றன. ஓசூர் பண்ணையில், இந்த இனப் பசுக்களும், காளைகளும் வளர்க்கப்பட்டு வருகின்றன. இவற்றில் அழகான சிவப்பு நிற மாடுகளும் உண்டு. இந்த நிறத்து மாடுகளையும் நமது கால்நடைத் துறையினர் கருத்துடன் பெருக்கி வருகிறார்கள். உடலில் இம் மாடுகளுக்கென்றே தனியாக அமைந்தது போல் ஒருவித மச்சம் உண்டு. இதன் காளைக் கன்றுகளைப் பால் கறக்க ஓராண்டிலேயே காயடித்து விட்டால் அவை வளரும் போது நல்ல வலிவுள்ளதாக விளங்கும். வீடுகளில் அன்பாக வளர்க்க இப்பசுக்கள் மிகவும் சிறந்தவை. சீற்றம் கொள்ளாத சாதுவான பசுக்கள் வகையில் கிர் பசுவும் ஒன்று. தினசரி பத்துப் படி பால் வீதம் கறக்கின்றன.

## சாகிவால்

பால் இனத்திலேயே இது நம் தேசத்தில் தலைசிறந்த இனம் என்று பெயர் பெற்றவையாகும். இதன் தாயகம் பஞ்சாப் ராஜ்யத்தில் உள்ள மாண்ட்கோமரி என்ற மாவட்டமாகும். இதற்கு லோலா என்று மற்றொரு பெயரும் உண்டு. சிறந்த பால் இனத்தைச் சேர்ந்த ஒரு பசுவுக்குள்ள உடல் இயல்புகள் யாவும் இதனிடம் அமைந்திருக்கின்றன. இதுவும் மிக சாதாரணமாகவே 10,000 பவுண்டுகள் வரை ஒரு ஈத்து காலத்தில் பால் அளிக்கின்றது. காளைகள் பொதுவான வேலைகளுக்குப் பயன்படுகின்றன. உயர்ந்த இனக் கால் நடைச் செல்வ அபிவிருத்திக்காக, சாகிவால் பொலிகாளைகள் தமிழகத்தின் பல்வேறு பண்ணைகளிலும் பராமரிக்கப்பட்டு வருகின்றன. காளைக் கன்றுகள் நான்காம் வயதிலிருந்து பதினன்கு வயது வரையில் விவசாயம் முதலிய துறைகளில் உழைக்கின்றன.

## தர்பார்க்கர்

இதுவும் பால் இனத்தைச் சேர்ந்ததுதான். இதன் பூர்வீகம் சிந்துப் பிரதேசமானலும், கட்ச், ஜோதிபுரி, ஜெய்சால்மர் ஆகிய பகுதிகளில் மிகுதியாக வளர்க்கப்படுகிறது. பார்க்க அழகிய மாடுகள் இவை. மிகவும் சாதுவான சுபாவம் கொண்டவை. காளைகள் விவசாயம் முதலிய தொழில்களுக்கு நன்றாக உபயோகமாகி வருகின்றன. வெண்மை கலந்த மயிலை நிறம் கொண்டவை. இதுவும் ஏறத்தாழ 305 நாட்கள் கொண்ட ஓர் ஈத்துக்கு 9655 பவுண்டு வரை பால் கொடுக்கும் பசுக்களும் இவற்றில் உண்டு.

## முர்ரா எருமைகள்

'எருமைகள்' என்பதால் இவற்றை நாம் இளக்காரம் செய்ய வேண்டியதில்லை. எருமையும் முக்கியமான கால் நடைச் செல்வங்களில் ஒன்றாகும். மேற்சொன்ன முர்ரா ரக எருமைகள் ஏராளமாகப் பால் கொடுப்பதோடு இதன் பாலில் ஏழு சதவிகிதம் வெள்ளைச் சத்தும் இருக்கிறது. தினசரி ஐந்து படிக்குக் குறையாமலும் இதற்கு மேலும் தட்டாமல் பால் கொடுக்கும் இந்த இன எருமைகள். நெய் உற்பத்தியில் இதன் பால் முதல் ஸ்தானம் வகித்து வருகிறது. முர்ரா ரக எருமைகள் வட இந்தியாவில் உள்ள கூர்கான், ரோதக், கர்நால் போன்ற இடங்களில் அதிகம். எனினும் இவை நாடெங்கும் பரவலாக வளர்க்கப்பட்டு வருகின்றன. தமிழகத்திலும் இவை சிறப்பாக வளர்ந்து வருகின்றன. அநேகம் பண்ணைகளில் முர்ரா பொலிகாளைகள் வளர்க்கப்பட்டு வருகின்றன. இங்கு நல்ல ரக எருமைகளின் சந்ததிப் பெருக்குக்கு இது மிகவும் பயன்பட்டு வருகிறது. இந்த எருமைகளின் வளர்ச்சிக்காக ஓசூர், செட்டிநாடு, ஒரத்த நாடு ஆகிய இடங்களில் உள்ள பண்ணைகளில் தகுந்த முறையில் பணியாற்றி வருகிறார்கள்.

தமிழ் நாட்டில் கால்நடைகள் விழாக் கொண்டாடப்படும் இந்தச் சமயத்தில் நமது கால் நடைச் செல்வ வளர்ச்சியில் மக்கள் அதிகக் கருத்து செலவிட வேண்டும். அதிக ஆர்வம் செலுத்த வேண்டும் என்பதே எனது பணிவான வேண்டுகோளாகும்.





# சாரதா

சாந்தன்



அவளும் காதலித்தாள்; அவனும் காதலித்தான். ஆனல் அவள் தந்தைக்கு இதில் துளிகூட விருப்பமில்லே. மகளின் பிடிவாதம் காரணமாக மணம் முடித்து வைக்கிருர். ஒரு விபத்தில் அவன் இதயத்தில் அடிபட்டு, இல்லற இன்பத்துக்குத் தகுதியற்றவனுகி விடவே, விவாகரத்தின் மூலம் மனைவிக்கு மறுமண வாய்ப்பை அளிக்கிருன். ஆனல் அவள் இறந்துவிடுகிருள்.

திரைக் கதையில் அவலச் சுவை தலைதூக்கி நிற்கிறது. பழைமையில் ஊறினவர்கள் ஏற்றுக் கொள்ளத் தயங்கும் கருத்து; புதுமையை வரவேற்கும் முற்போக்குவாதிகள் கண்டு வருந்தும் முடிவு. இதுதான் ''சாரதா''வின் திரைக் கதை. வெளிப்படையாகச் சொல்லி விளக்க முடியாத நாசுக்கான கதையின் அடிப்படையை எல்லாரும் ரஸிப்பார்களா என்பது சிந்திக்க வேண்டிய விஷயம். கதையைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய இன்னும் சில உண்மைகளும் உள்ளன.

பிரசித்திபெற்ற எழுத்தாளர் அகிலன் அவர்களின் 'சிநேகிதி' என்ற நாவலின் கதையும் இதே அடிப்படையைக் கொண்டதுதான். கார் விபத்தில் ஆண்மையை இழந்துவிட்ட கணவன், இன்னெரு வாலிபனேடு சேர்ந்து வாழத் தன் மனைவிக்கு மனப்பூர்வமாகச் சம்மதம் தருகிருன்.

'நெஞ்சில் ஓர் ஆலய'மும் இதே கருத்தைத்தான் கூறுகிறது.

படம் பார்க்கும்போது இந்த நினைப்பெல்லாம் வராமல் இருந்தால் திரைக்கதையின் புதுமையான போக்கை மனம் விட்டுப் பாராட்ட முடிந்திருக்கும்.

எஸ். வி. ரங்காராவ் நடிப்பில்முதல் பரிசைத் தட்டிக் கொண்டு போய் விடுகிருர். பெற்ற பாசம், அந்தஸ்தின் மீது உள்ள மோகம், போலிக் கௌவம் காரணமாக எழுந்த பிடிவாதம் ஆகிய குணுதிசயங்களை அற்புதமாக வெளியிடுகிருர்.

விஜயகுமாரிதான் ''சாரதா''. சற்றுச் சிரமமான பாகம். காதலில் துள்ளி, வேதனையில் வெந்து கடைசியில் உயிர் துறக்க வேண்டும். திறமையாகச் செய்திருக்கிருர்.

எஸ். எஸ். ராஜேந்திரனின் நடிப்பு நன்முயிருக்கிறது. ஆனல் சோகக் கட்டங்களில் முகத்தில் கொடூரம் காட்டாமல் இருக்கலாம்.

எம். ஆர். ராதா இல்லாமல் இருந்தால், படத்தின் நீளம் குறைந்திருக்கும். அவர் கத்தலைக் கேட்ட காது வலிக்காமல் இருந்திருக்கும். நடிப்பாஅது? என்ன தலைவேதனை!

சாரதாவின் அத்தை மகளுக வரும் அசோகவிடம் சோகம் இருக்கிறது; நடிப்பில் வேகமும் இருக்கிறது. எம். வி. ராஜம்மாவுக்குப் பொருத்தமான பாகம் தரப்பட்டிருக்கிறது.

ராமாராவ், புஷ்பலதா இருவருக்கும் அதிக சந்தர்ப்பம் இல்லை. ராமாராவின் ஹாஸ்யம் எடுபடவில்லை. புஷ்பலதா எடுப்பான எழிலோடு வந்து போகிருர்.

பாடல்களைப் பற்றி என்னத்தைச் சொல்ல?

படம் ஓடிவிடாமலிருந்தால், 'சாரதா'வை ஒருமுறை பார்த்துக் கண்ணீர் விடலாம்.

குமரன் தன் நீலமணிக் கண்களை உயர்த்தித் தன் தாயையே விழுங்கி விடுபவன் போல் பார்த்தான். விழிக் கிடங்குக்குள் தவங் கிடக்கும் அந்த நீலவிழிகள் அவளிடம் எதை யாசித்து இப்படி ஊடுருவித் துளைக்கின்றன? வெயிலில் கருகிய மலர் போன்ற அந்தத் தளிர் முகத்தைக் கண்டதுமே பவானியின் கண்களில் பனி படர்ந்தது. அதை மறக்க முயலுபவள் போல் சட்டென்று அலமாரியைத் திறந்து தட்டில் பிஸ்கட்டும், பழமும் எடுத்துவந்தாள்.

சிறுவன் எதிரே தட்டை வைத்துப் பழத்தை உரித்து வாயருகே கொண்டு சென்று, இன்னும் படி வற்புறுத்தினாள்.

குழந்தை மனத்தின் துடிப்பும், ஆர்வமும் அவன் செயலில் சிறிதும் பிரதிபலிக்கவில்லை. அவற்றை விலக்கித் தள்ளும் எதிரொளி கூடச் சலனத்தில் இல்லை. "அம்மா, சந்துருமாமா வர மாட்டாரா?" என்றான் ஏக்கம் நிறைந்த குரலில். தண்ணீரினின்றும் கொப்புளித்து வருவன போல் சொற்கள் தேய்ந்து ஒலித்தன.

கேள்வியின் தவிப்பு பவானியின் இதய அடிவாரம் வரை சென்று மோதியது. அவளது மெல்லிய உதடுகள் துயரத்தால் துடித்தன. கண்ணீர் பொங்கிப் பெருகவே, எழுந்து ஜன்னல் வழியே பார்வையைப் படர விட்டாள். நீண்டு கிடந்த தெரு அந்திக் கருக்கலுக்குள் உடலைச் சுருட்டிக் கொள்ளத் தயாராக இருந்தது. உயர்ந்த மிதியடிகள் அணிந்து விரைந்து சென்ற பாதசாரிகளது நடையின் இறுக்கமும், வேகமும் அவளது உள்ளத்தை அழுத்தின. நீர் நிரம்பிய கண்களுடன் அவள் திரும்பிய பொழுது குமரன் முகத்தைக் கைகளில் ஊன்றியபடி வாசற்புறம் நோக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள்.

"குமரா! இந்தப் பழங்களையாவது சாப்பிடடா கண்ணே!" என்றாள் அன்பு இழையோட. அவன் கவனம் வேறு நினைவுகளிலே நீந்திக் கொண்டிருந்தது.

"அம்மா, சந்துரு மாமாவுக்குச் சனிக் கிழமை அரை நாள் லீவு உண்டே, இரண்டு வாரமாகக் காணோமே. வர மாட்டாரா?" என்றான். உடம்பிலுள்ள உயிர் சக்தி அனைத்தும்கண்களில் ஆசைக் கனலாக மின்னியது.

பவானி மேசையின் மேல் இருந்த விளையாட்டுப் பொம்மைகளை எடுத்துவந்து அவன் முன்னே வைத்தாள். "குமரா! இதை வைத்துக் கொண்டு விளையாடு. நான் வேலையை முடித்து விட்டு வருகிறேன்" என்றவாறு அப்பால் செல்ல முயன்ற தாயின் கண்டத்தை இறுகப் பற்றிக் கொண்டான்.

"அம்மா! மாமா என்னை பீச்சுக்கு அழைத்துப் போக வருவார். எனக்கு ஒன்றும் பொம்மை வேண்டாம் போ. போன சனிக்கிழமை மாமா ஏன் வரவில்லை? இந்தவாரமும் வரமாட்டாரா?" என்றான் ஆவலோடு. இம்முறை குழந்தையை ஏமாற்ற விரும்பவில்லை பவானி.

'பதிலைக் கேட்டு உண்மையை உணர்ந்தால் அந்தப் பிஞ்சு மனம் எப்படித் துடிக்கும்? அந்த அவல விடை இல்லாமலே போகட்டும்! அந்தத் தளிரை வாட்டும் கதிர்களாக அவள் சொற்கள் ஏன் அமைய வேண்டும்? அந்தப் பிரிவின் துயரம் அவனை அணு அணுவாகச் சிதைத்து வருவது போதாதா? அந்த மலர் மனம் வாடவே கூடாது!' — புரண்டெழுந்த உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் இறுக மூடிய உதடுகளுக்குள் தேக்கிக் கொண்டாள்.

"குமரா! நான் இப்பொழுது கடைத் தெருவுக்குப் போய்விட்டு வருவதற்குள் சந்துரு மாமா வந்து விடுவார் பாரேன்" என்றாள் வலிய வரவழைத்த புன்னகையை ஓடவிட்டபடி. சிறுவனின் பிஞ்சுக் கரங்கள் தாயின் கழுத்தைச் சுற்றி வளைந்து இறுகின. மகிழ்ச்சிப் பெருக்கை முத்துப் பற்களிடையே அணை கட்டிக் குனிந்து தாயின் நெற்றியின் மீது ஓர் அன்பு முத்திரையைப் பதித்தான். சோர்ந்து கிடந்த உள்ளத்தை அந்தப் பதிலுக்குள் கிடந்த மென்மை தட்டி எழுப்பி விட்டதோ?

"அப்படியானால் நான் மாமாவோடு பீச்சுக்குப் போவேன்!" என்று கூவியபடி வாசற்புறம் ஓடினான்.

பவானி மனச்சுமையை உதறுபவள் போல ஸ்வாமி படத்தருகே குனிந்து நமஸ்கரித்தாள். கண்கள் வழியே பாய்ந்த வர்ஷிப்பில் மனத்தின் ஆதங்கம் சற்றுக் கரைந்தது.

"பவானி!" தயங்கியவாறு சுந்தரேசன், உள்ள



முருகி நின்றான். ஆனால் அவனது கவலை படர்ந்த பார்வை வாசற்பக்கம் மகனின் பின்னேயே லயித்திருந்தது. சிலிர்த்துக் கிடந்த அவள் கேசத்தை வருடியபடி, ''பவானி! அந்தக் கல்நெஞ்சக்காரன் போய் விட்டான். ஆயுளெல்லாம் நைந்து உருக வேண்டிய துயரச் சுமையை இரு வாரங்களில் அழித்து விட முடியாது. உன் நலம் பாதிக்கப் பட்டால் குமரனின் நிலைமையைச் சிந்தித்துப் பார்க்க வேண்டாமா?'' என்றான்.

''என் துயரம் எனக்குப் பெரிதல்ல. ஆனால் குழந்தை மனம் அந்தச் செய்தியை எப்படி ஏற்கும்? மாமா வருவார், வருவாரென்ற அந்த நம்பிக்கையை எப்படிச் சிதைப்பது? அந்த மழலை நெஞ்சை நோகச் செய்ய அவன் என்ன பாவம் செய்தான்?'' பவானி குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

''பவானி! சந்துருவின் மரணத்தை மறைத்து வைப்பதனால் குழந்தையின் நம்பிக்கையும், ஆசையும் வளர்ந்து முடிவில் பெருத்த ஏமாற்றமும், அதிர்ச்சியுந்தான் ஏற்படும். இதைவிட உண்மையை உணர்த்திப் பட்டுப் போன உணர்ச்சிகளை நீக்கி, முளையிலேயே வேறு பற்றுக் கொம்பு வழியே ஆசைக் கொடியைத் துளிர்க்கச் செய்வதுதான் நல்லது'' என்றான் சுந்தரேசன்.

இருண்ட பாதையிலே ஒளி பாய்ந்தாற் போல ஓர் உணர்வு கணநேரம் அவளைத் தன் வயப்படுத்தியது. அடுத்த கணம் முள்ளில் தடுமாறி விழுந்தாற் போல் வேதனை ஐம்புலன்களைச் சாடியது.

''வேண்டாம்!'' சந்துருவின் ஸ்தூல உணர்வு மறைந்து விட்டாலும் அவனது நினைவின் நிழலிலேயாவது குழந்தை களிப்பாறட்டும். அதை நான் ஏன் தடுக்க வேண்டும்? பவானி மேலே விவாதிக்க விரும்பாதவள் போல விருட்டென்று எழுந்து பேசாமல் உள்ளே சென்றாள்.

சிறிது நேரங்கழித்துக் கறிகாய் வாங்குவதற்குப் பையையும் சில்லறையையும் [எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். ''பொழுது விடிந்தால் வயிற்றுப் பொறியும் இயந்திர வாழ்க்கையும் ......! அப்பா! முடிவே இல்லை! இறப்பவர் இருப்பவரின் வயிற்றைக்கொண்டு போவதில்லை.'' நினைவின் உயிர்ப்பு பெருமூச்சாகச் சிதறப் பவானி குமரனை நோக்கினாள். குமரன் அவளைக் கவனிக்கவில்லை. சந்துருவின் தியானத்தில் லயித்திருந்த அவன் மனமும், கண்களும், தெருக்கோடியை ஊடுருவி ஆராய்ந்து கொண்டிருந்தன.

வீட்டுக்குத் திரும்பும்போது அவள் நடை தளர்ந்தாள். கால்கள் தயங்கிப் பின்வாங்கின. மீண்டும் குமரனின் கேள்விகளுக்குப் பதில்சொல்லியாக வேண்டுமே !

அவள் வீட்டை அடைந்த பொழுது சிறுவன் வாசலில்



# எப்போ வருவானோ?

கோமதி நாகராஜன்

இல்லை. வீடு திறந்து கிடந்தது. குமரன் விளையாடச் சென்றிருப்பான் என்ற நினைவு தாயுள்ளத்தைச் சிறிது மகிழச் செய்தது.

மெல்லிய காலடி ஓசை கேட்டுத் திரும்பினாள். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கக் குமரன் நின்றுகொண்டிருந்தான். அவன் முகத்தில் இது வரை இல்லாத புன்னகை மலர்ந்திருந்தது.

''குமரா! எங்கே போய் வந்தாய்?'' நெற்றியின் மீது படிந்த வியர்வைத் துளிகளை அழுத்தித் துடைத்தாள். சிறுவனின் இமை வட்டங்களில் மகிழ்ச்சி கொப்புளித்தது.

சாப்பிட்டுப் படுக்கும் வரைகூட நெஞ்சை வாட்டிய அக் கேள்விகளை எழுப்பாதது எத்தனை ஆறுதலான அனுபவம்? சில நிமிடங்களில் இமைத்து விரிந்த நீலமணிகள் உறக்கத்தில் சிறைப்பட்டு விட்டன. குழந்தையின் கலைந்திருந்த போர்வையை இழுத்துப் போர்த்தி விட்டு அணைத்தபடி படுத்துக் கொண்டாள். எதிரே காற்றிலே படபடத்த காலண்டரின் தேதி மனத்திரையில் பூத உருவாக விரிந்தது. 'பாவி மறைந்து மூன்று வாரங்களாகி விட்டன! தோளோட்டி வளர்ந்த கதையைக் கனவாக்கி விட்டு எப்படியடா எங்களை விட்டுச் செல்ல மனம் வந்தது?'

**ப**வானியின் தாயார் இறந்து சந்துரு அவள் ஆதரவில் வந்தபொழுது அவனுக்கு மூன்று வயது. தம்பியின் மீது அவள் பற்றை வளர்க்கத்தானோ பதின்மூன்று வருடங்கள் அவள் வயிறு திறக்கவே யில்லை! வயிற்றிலே இடம் பெறாது மடியிலும், தோளிலும், அந்த ஸ்தானத்தை முற்றிலும் ஸ்வீகரித்துக் கொண்ட தம்பி நிழற்படம் போல் மறைந்து விட்டானே!

பதினாறு வருடங்களுக்குப் பின் அக்குடும்பத்தில் குமரன் பிறந்தான். சந்துருதான் எப்படிக் களிக் கூத்தாடினான்? அவன் அவள் மகனோடு ஐக்கியமாகி விட்டான். வீட்டைத் தின்பண்டங்களாலும், விளையாட்டுச் சாமான்களாலும் நிரப்பினான். குழந்தையின் வளர்ப்பில் அவள் பவானிக்கு ஒரு சிரமமும் அளித்தது கிடையாது. தோளில் சுமந்து அவனைச் சிறுவனாக்கினான். குழந்தை மாமாவின் மேல் உயிரையே வைத்திருந்தான். ஆனால் எதிர்பாராத அந்த இடி....சந்துருவின் மரணம்......ஆ.......நினைப்பின் உயிர்ப்பிலேயே உடலிலுள்ள அணுக்கள் யாவும் குப்பென்று கொழுந்து விட்டெரிந்தன. போர்வைக் கடியே துயரத்தால் தோள்கள் துடித்தன.

கண்ணீரால் நனைந்த தலையணைக்குள் முகத்தைப் புதைத்துப் பவானி விம்மல் ஒலியை அடக்கிக் கொண்டாள். அலைபோலப் புரண்டு கிடந்த கூந்தல் கற்றைக்குள், சிப்பி போன்ற பிஞ்சுக் கரங்களின் ஸ்பரிசத்தில் சிலிர்த்துத் திரும்பினாள். திடீர் விழிப்பினால் சிறுவனின் இமைகள் வண்ணாத்திப் பூச்சியின் இறகுகள் போல் துடித்தன. விழிக்கடையில் ஒளி முத்துக்கள் பிரிவின் தாபத்தில் மின்னின. அந்தப் பிரிவு அவளை எப்படி வாட்டினாலும் குழந்தை மனத்தில் இதைப் பதியவிடக் கூடாது! கூடவே...கூடாது! பவானி குமரனை வாரி மார்புக்குள் புதைத்துக் கொண்டாள்.

அடுத்த சனிக்கிழமையும் வந்தது. குமரனின் மௌனம் அவளை வியப்பிலாழ்த்தியது. அவன் ஒரு முறை கூட வாய் திறந்து ''மாமா வர மாட்டாரா?'' என்ற கேள்வியை எழுப்பவில்லை. மாலை நெருங்கவும் சிறுவன் தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டான்.

''சறுக்....சறுக்....'' சந்துருவின் கம்பீர நடையில் நசுங்குண்டிருக்கும் பாதரட்சைகளின் ஒலியேதான்! பவானி திடுக்கிட்டாள். ஜன்னல் வழியாக வீதியை நோக்கினாள். ஊர்ந்து கொண்டிருந்த ஜனத்திரள் இயந்திர கதியில் இயங்கிக் கொண்டிருந்தது. உள்ளே திரும்பினாள். குமரனைக் காணவில்லை. புதிர் போன்ற அவனது நடத்தையை எண்ணித் தனக்குள் புன்னகை செய்து கொண்டாள்.

அவள் வழக்கம் போல் காய்கறி வாங்கிக் கொண்டு திரும்பிய பொழுது குமரன் ஓடி வந்து அவளை அணைத்துக் கொண்டான்.

பல சனிக்கிழமைகள் வந்து போயின. சிறுவனின் துயரமற்ற நடத்தை அவள் நெஞ்சிலே நீர் வார்த்தது.

ஒரு வாரமாகப் பொருட்காட்சி விமரிசை ஊரெங்கும் அமர்க்களப்பட்டது. பவானியின் மனம் அதைக் கண்டு களிக்கக்கூடிய நிலையில் இல்லை. எனினும் சிறுவனின் எண்ணங்களை மடை மாற்றிவிட இதை ஒரு சந்தர்ப்பமாகப் பயன்படுத்தக் கூடாதா?''

''குமரா! இன்று பொருட்காட்சிக்குப் போகலாமா?'' என்று ஆவலோடு அவன் கண்களை நோக்கினாள்.

''ஓ, நான் எல்லாம் பார்த்துவிட்டேனே!'' என்றான் சிரித்தவாறு.

''என்ன? பார்த்தாகி விட்டதா? நாங்கள் அழைத்துப் போகாமல் நீயாகப் பார்த்து விட்டாயோ? போக்கிரி. பொய் சொல்கிறாயே?''

சிறுவன் கம்பீரமாகத் திரும்பினான். ''அம்மா. சந்துரு மாமா என்னை அழைத்துப் போய் எல்லாவற்றையும் காட்டினார். குடைராட்டினத்தில் ஏறிச் சுற்றினேன். மரணக் கிடங்கு.... ஒரே பயங்கரம்....'' குமரன் அடுக்கிக் கொண்டே போனான். பவானியின் மனத்திலே நீறுகிக் கிடந்த நெருப்பு கனலாகியது. காதுக்குள் ஆர்த்த அலைகள் தீப்பிழம்பைச் சாடின. புரண்டெழுந்த வேதனை கண்டத்தை அடைக்க உணர்ச்சிக் கொத்துக்கள் கண்கள் வழியே நழுவின. குழந்தை உள்ளத்தில் வேரூன்றிக் கிடந்த நம்பிக்கையோடு அவள் எத்தனை பயங்கரமாக விளையாடி விட்டாள்? இனி அந்நம்பிக்கை சிதைவுறப் போகும் அந்த விநாடி எத்துணை அதிர்ச்சி பயக்கும்?

'சறுக்'....'சறுக்' சந்துருவின் கம்பீர நடையின் எதிரொலி!

''குமரா!''.....''குமரா!''. சந்துருவின் அழைப்பேதான்! பவானி துடித்து எழுந்தாள்.

வாசல்திரை காற்றிலே அலை பாய்ந்தது. அதன் பின்னே குனிந்து பாதரட்சைகளை விலக்கும் நெடிய உருவம்! அசாதாரண பதற்றம் பார்வைக்குத் திரையிட, வெடுக்கென்று திரையைப் பிரித்தாள்.

நிமிர்ந்த அந்த இளைஞன் கரங்களை இணைத்து வணக்கம் தெரிவித்தான். வலது காதோரத்தில் அந்த மச்சம்; சற்று விரிந்த உதடுகளிடையே அகன்ற வாய்! உம். தோற்

றத்தில் சந்துருவின் நிழலாடினுலும், அந்தப் பாவியின் அழகின் முன்னே....''

பவானி தன் நினைவற்ற நிலையில் பதில் வணக்கம் தெரிவித்தாள்.

''நீங்கள் யார்? தெரியவில்லையே!''

புன்னகை காதளவோடியது. ''குமரனைக் கூப்பிடுங்கள். 'நான் யார்' என்று அவனையே சொல்ல வைக்கிறேன்'' என்ருன்.

''குமரா!'' பவானியின் விளிப்பைத் தொடர்ந்து சிறுவன் உள்ளே ஓடி வந்தான். ''மாமா....'' என்று மகிழ்ச்சியோடு கூவிய படி அவன் மடிமீது உரிமையோடு உட்கார்ந்து கொண்டான்.

பவானி திராணியற்றவளாக ஜன்னல் கம்பியை இறுகப் பற்றிக் கொண்டாள். குமரன் முன்னேயே சிக்கலைப் பிரிக்கத் தயங்கியது தாய் மனம்.

''நாங்கள் ஒரு அன்பு தெய்வத்தை இழந்து தவித்துக் கொண்டிருக்கிரும். குமரன் அதை அறியமாட்டான். உங்களுக்கு எப்படி அவனது நட்பு ஏற்பட்டதென்றே எனக்குத் தெரிய வில்லை'' என்ருள் பவானி ஆங்கிலத்தில்.

''விபத்தும், சந்துருவின் மரணமும் எனக் குத் தெரியும். சந்துருவின் தொழிற்சாலையில் தான் நானும் வேலை செய்து வருகிறேன். சந்துரு மறைந்த சில வாரங்களுக்குப் பின் அடிக்கடி தொழிற்சாலை வாசலில் ஒரு சிறு வன் ஆவலோடு எல்லோருடைய முகத்தையும் ஊடுருவிப் பார்ப்பதையும் ஏமாந்து திரும்பிப் போவதையும் நான் கண்டேன். குழந்தை யுடன் சில நிமிடங்கள், உறவாடியதில் அவ னது நம்பிக்கையும் பிரிவின் தாபமும் தெளிவாகப் புலப்பட்டன. என் நடை உடை பழக்கங்களைத் தவிர சிறுவனெடு பழகியதிலும் சந்துரு மாமாவாக நடித்தேன். குழந்தையைப் பொறுத்த வரை என் நடிப்புக்கு வெற்றி தான். ஆனல் அந்த ஸ்தானத்தைப் பூரண மாக்க உங்களால் தான் முடியும்....'' இளை ஞனின் குரல் கரகரத்துத் தேய்ந்தது.

பவானியின் தலை குனிந்து கண்ணீர்ப்பொட் டுக்களை உதிர்த்தது. ''சில நாட்களாகக் குழந் தையின் துயரமற்ற மலர்ச்சியின் காரணம் இப்பொழுதுதான் எனக்குப் புரிகிறது. குமரன் பாக்கியசாலி. சந்துருவின் பற்று உள்ளத்தை உங்களிடம் காண்பதால் ஏற்படும் நன்றியை என்னல் எப்படித் தெரிவிக்க முடியும்?''' என்ருள் கண்ணீருடன்.

பளிரென்று பற்கள் துலங்கச் சிரித்தான். ''சிறுவன் முன்னே உங்கள் துயரை அற்ப மாக்கி மறக்க முயல வேண்டும். அதுதான் என் வேண்டுகோள்'' என்றவாறு குமரனை அருகே இழுத்து ''குமரு, உன் மோதிரத்தைத் எங்கே போட்டாய்?'' என்று வினவினன்.

குமரன் விழித்தான். ''கடற்கரையிலே விளையாடும்பொழுது என் பைக்குள் போட்டு விட்டு மறந்து விட்டாயே? இந்தா விரலில் போட்டுக் கொள்'' என்று மோதிரத்தை அணிவித்தான். சிறுவன் அவனது கேசச் சுருள் களைப் பிரித்து விளையாடிக் கொண்டிருப்ப தைப் பவானி மகிழ்ச்சியோடு ரசித்தாள்.

''நேரமாகி விட்டதே. நான் வருகிறேன். குமரு சந்துரு மாமாவுக்கு டாடா சொல்லு'' என்ருன் எழுந்தவாறு.

சிறுவனின் நுதலில் குறும்பு கூத்தாடியது. விழிகள் சிரித்தன. ''இல்லை. நீங்கள் சந்துரு மாமா இல்லை'' என்ற சொற்கள் அழுத்தமாக ஒலித்தன.

எதிர்பாராத பதிலால் இருவரும் திடுக் குற்று நிமிர்ந்தனர். ''குமரா...! நீ மாமாவை என்ன சொல்கிருய்?'' என்று கடுந்தொனியில் கேட்டாள் பவானி.

சிறுவன் வாலிபனின் பர்ஸிலிருந்து ஒரு புகைப் படத்தைத் தன் பைக்குள் பத்திரப் படுத்திக் கொண்டு அலட்சியமாகத் திரும் பினன். ''அம்மா ..... இவர் ..... சந்துரு மாமா....இல்லை....'' என்ருன் உறுதியாக.

''ஏன் குமரா? நான் மாமாவைப் போல் பிரியமாக இல்லையா?'' என்ருன் வாலிபன் வேதனையோடு.

''நிறையப் பிரியமாக இருந்தே! ஆனலும் நீ மாமா இல்லே.''

''எப்படித் தெரியும்?''

''உம்! எனக்குத் தெரியும். சந்துரு மாமாவுக்கு என்மேல் நிறையப் பிரியமிருந் தாலும் தப்புக் காரியம் செய்தால் உடனே கண்டிப்பார். நான் சிகரெட்டை வாயிலே வைத்து ஊதியபொழுது கூட நீங்க கண்டிக்க வில்லை....சந்துரு மாமா போல் பட்டுனு கன்னத்திலே அடிக்கலே....அன்னிக்கே எனக் குத் தெரிந்து போச்சு....மாமா இல்லேன்னு'' என்றவாறு வேகமாக வெளியே ஓடினன்.

திடீரென்று ஏற்பட்ட ஏமாற்றத்தைப் புன்னகைக்குள் மறைத்தபடி வாலிபன் ''என் அதிகப் பிரீதியே என்னைக் காட்டிக் கொடுத்து விட்டது. பரவாயில்லை. இனி எப்படியும் குழந்தை மனத்தைத் தேற்றி விடலாம்—'' என்ருன்.

''இல்லை. இத்தனை நாட்களாக உங்களுள் மாமாவைக் கண்டிருந்ததால் ஏக்கமடைய வில்லை. இப்பொழுது உண்மையை உணர்ந்த பின் மீண்டும் 'மாமா வர மாட்டாரா?' என்ற அவனது கேள்விகளுக்கு எப்படி நான் பதில் கூறுவேன்.''

வேதனையின் வடிவாக நின்ற தாயை வெறித்து நோக்கியபடி வாசற்பக்கம் நடந் தான் அந்த இளைஞன்.

''பவானி. இங்கே மறைந்து நின்று உன் மகனது செயலைச் சற்றுப் பாரேன்'' என்று அவள் கணவன் கரகரவென்று ஜன்னலருகே இழுத்துச் சென்ருர். கதவை மெள்ளத் திறந்து உள்ளே நோக்கினள் பவானி. இதென்ன? அவள் இதயமே விசுவரூப மெடுத்து அடைக்கிறதோ?

கூடத்து மேசையின் மீது சந்துருவின் புகைப் படம் வைக்கப் பட்டிருந்தது. தோட்டத்து மலர்களுக்கிடையே சந்துருவின் புன்னகை மாருத முகம்! அதன் எதிரே குமரன் பரவசத் தோடு கரம் குவித்து, ''சந்துரு மாமா....நீ தெய்வமாயிட்டே....இனித் திரும்பி வர மாட்டேனு ஆறு'' அத்தை சொல்ரு. நீ சாமி யான பின் வர மாட்டேன்னு எனக்குத் தெரியும். நீ வருவேன்னு அம்மா நம்பரு. பாவம்....அம்மாவைக் காப்பாற்று'' என்று கூறிக் கொண்டிருந்தான். இதைக் கேட்டுப் பவானி மெய் சிலிர்த்து நின்ருள்.

# ஸர் வி. பாஷ்யம் அய்யங்கார்

சென்னை உயர்நீதி மன்றத்துப் பூங்காவில், கட்டடத்தின் பிரதான வாயிலை நோக்கியவாறு இவருடைய உருவச் சிலை பொலிவுடன் தோற்றம் அளிப்பதைக் காணலாம்.

திரு பாஷ்யமய்யங்கார் அவர்களின் முன்னோர்கள் செங்கற்பட்டு ஜில்லாவில் வெண்பாக்கம் கிராமத்தைச் சேர்ந்தவர்கள். தங்களுடைய பெயருக்கு முன்னால், தங்கள் பிறந்த ஊரின் பெயரைச் சேர்த்துக் கொள்வது ஒருவித மரபு. இதை யொட்டி 'வெண்பாக்க மய்யங்கார்' என்ற பெயரும் இவருக்கு நிலைத்து விட்டது.

திரு பாஷ்யமய்யங்கார் அவர்கள் 1843-ம் ஆண்டு ஏப்ரம் 10-ந் தேதி சென்னையில் தமது மாமன் வீட்டில் பிறந்தார். இவரது தகப்பனாரும், குடும்பத்தில் மற்றப் பெரியவர்களும் பரம்பரையாகவே மதப் பற்றும் கல்விப் பற்றும் மிகுந்தவர்கள். இவர்களில் சிலர் அரசாங்க நிர்வாகத்திலும் மேன்மையுடன் விளங்கினார்கள். அவர்களில் திரு பாஷ்யமய்யங்கார் அவர்களின் பாட்டனார் முறை கொண்ட ராகவாச்சாரியார் என்பவர், சென்னையில் முதல் இந்தியப் பிரதம மாகாண மாஜிஸ்திரேட் பதவி வகித்தார். மாஜிஸ்திரேட் கோர்ட்டுகளைப் போலீஸ் கோர்ட்டுகள் என்று கூறுவதும் சென்னையில் வழக்கம். இதன்படி திரு ராகவாச்சாரியாருக்குப் 'போலீஸ் ராகவாச்சாரியார்' என்ற பெயர் ஏற்பட்டிருந்தது. திரு ராகவாச்சாரியார் சிறந்த முறையில் பொதுச் சேவை பலவற்றில் ஈடுபட்டு உழைத்து வந்தார். அவற்றில் ஒன்று, பச்சையப்பன் தர்மஸ்தாபன போர்டின் முதல் தலைவர் பதவி வகித்து, பச்சையப்பன் பள்ளிக்கூடம் வளர்ச்சி பெறத் தொண்டாற்றியதைக் குறிப்பிட வேண்டும். தகுந்த வயதுவந்தவுடன் சிறுவன் பாஷ்யத்தை அவன் தந்தையார் பச்சையப்பன் பள்ளியில் சேர்த்தார்.




தமிழகத்தின் சிறந்த சான்றோர்களில் ஒருவரைப் பயிற்றுவித்த பெருமை இன்றும் அந்தக் கல்வி ஸ்தாபனத்துக்கு நீடித்து வருகிறது.

இளைஞர் பாஷ்யம் பிறகு ராஜதானிக் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். அங்கு இவருடைய கல்வியின் ஆர்வம் இன்னும் அதிகமாக ஒளிவிடலாயிற்று. தமது இருபத்தோராம் வயதில் பி. ஏ. பட்டப் பரீட்சையில் கணிதம், தத்துவப் பிரிவுகளில் மாகாணத்தின் முதன் மாணவன் என்ற முறையில் தேர்வு பெற்றார்! எனினும், இத்துடன் இவரது கல்விச் சிறப்பு நின்றுவிட வில்லை. அரசாங்க உத்தியோகம் வகித்தபடியே சட்டக் கலாசாலை மாலை நேர வகுப்புக் களில் சேர்ந்து படித்தார். சட்டக்

கல்லூரி என்பது அப்போது மாலை வேளைகளில்தான் ஆரம்பமாகி நடந்து வந்தது. இந்தக் கலையில் 'பிறவிமேதை' என்று புகழ்பெற்ற ஸர் டி. முத்துசாமி அய்யரும் பயின்று கொண்டிருந்தார். பரீட்சையில், திரு பாஷ்யமய்யங்கார் 'மாகாணத்தின் முதல் மாணவன்' என்று பெயர் பெற்றார். திரு முத்து சாமி அய்யர் 'இரண்டாவது' ஸ்தானத்தையே அடைய முடிந்தது.

திரு ஓ. சல்லிவன் என்றொரு ஐரிஷ் நாட்டுக்காரர் அப்போது சென்னையில் 'அட்வொகேட் ஜெனரல்' என்ற தலைமை வழக்கறிஞர் பதவி வகித்து வந்தார். திரு பாஷ்யமய்யங்கார் அவரிடம் 'ஜூனியராக'ச் சேர்ந்து விட்டார். ஜூனியரின் திறமை திரு சல்லிவனின் மனத்தை ஆரம்பத்திலேயே கவர்ந்து விட்டது. "விரைவிலேயே நீயும் ஒருதலைமை வழக்கறிஞனாக வருவாய், சந்தேகமில்லை" என்றாராம்.

திரு சல்லிவன் கூறியது பின்னாட்களில் உண்மையாயிற்று. முதன் முதலில் அந்தப் பதவியைச் சென்னையில் ஏற்ற இந்தியர் திரு பாஷ்யம் அய்யங்கார் அவர்கள்தான். அட்வொகேட் ஜெனரல் பதவிக்கு அதுவரையில் இங்கிலாந்திலிருந்தே ஆங்கில வழக்கறிஞர்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

இந்திய உயர்நீதி மன்றங்களில் ,அப்போது வக்கீல்களை விட, இங்கிலாந்தில் படித்து வந்த பாரிஸ்டர்களே நீடித்து உயர்நீதி மன்றங்களில் எல்லாத் துறைகளிலும் செல்வாக்குடன் காணப்பட்டனர். வழக்கறிஞர்கள் இப்போது நீதிமன்றங்களில் தரித்துக்கொள்ளும் நீதிச் சட்டை (கறுப்பு நிற கவுன்) தரிக்கும் உரிமை கூட வக்கீல்களுக்குக் கிடையாது. பாரிஸ்டர்கள்தான் 'ஒரிஜினல்' வழக்குகளில் வாதிக்கலாம் என்ற நிலைமையும் நீடித்திருந்து வந்தது. 'ஒரிஜினல்' வழக்குகள் என்பதை முதன் முதலில் உயர்நீதி மன்றத்தில் 'அரங்கேற்றமாகும்' பெரிய வழக்குகள் என்று கூறலாம். அரங்கேற்றமாகும் போதே சேர்க்க வேண்டிய சான்றுகள், கூற வேண்டிய வாதங்கள் எல்லாவற்றையும் இந்தக் கட்டத்தில் பூரணமாக நிறைவேற்றிவிட வேண்டும்.

எனவே இந்தக் காரியங்களுக்கு மிகவும் திறமை வேண்டுமென்றும், அதற்கு சீமையில் படித்து விட்டு வரும் பாரிஸ்டர்களே தகுந்தவர்கள் என்றும் கருதி வக்கீல்கள் இவ்வித அரங்கேற்ற வழக்குகளில் ஈடுபடக் கூடாதென்று விதி செய்திருந்தார்கள். இவ்வித வித்தியாச முறைகளை யெல்லாம் நீக்க வேண்டுமென்று, பிரபல வக்கீல்கள் பலர் பாடுபட்டு வந்தார்கள். இந்தக் கோஷ்டியில் திரு பாஷ்யமய்யங்கார் அவர்களும் முக்கியமாகவிளங்கிவந்தார். பாரிஸ்டர்களை விட, வக்கீல்கள் எந்த விதத்திலும் தாழ்ந்தவர்களல்ல என்பது நீண்ட காலத்துக்குப் பின் ஒப்புக் கொள்ளப்பட்டது!

திரு பாஷ்யமய்யங்கார் அவர்கள் தனியாகத் தொழில் நடத்திய காலமே அதிகமாகும். அப்போது அவர், வழக்குகளில் கடைப்பிடித்து வந்த விவாத முறை எங்கும் பிரசித்தமாயிருந்தது.

ஆயிரம் பக்கங்களுக்கு மேலுள்ள வழக்கு விவரங்களைக்கூடத் தமது ஞாபக சக்தியாலேயே எடுத்துரைக்கும் அதிசயச் சிறப்பு அவரிடம் அமைந்திருந்தது. ஒரு சிறு குறிப்பு கூட எழுதிக் கொள்ளாமல், எல்லா விவரங்களையும் தாம் படித்த நினைவிலிருந்தே நீதிபதி முன் எடுத்துரைத்து விடுவார். சட்ட ஞானத்தில் இவருக்கிருந்த புகழ் அமெரிக்க நீதி மன்றங்கள் வரையில் பரவியிருந்தது. திரு பாஷ்யமய்யங்கார் அவர்கள், சென்னை சட்ட மன்றத்தின் பிரதிநிதியாகவும், சென்னை சர்வகலாசாலைக் குழு அங்கத்தினராகவும் நிறைவேற்றிய சேவைகளும் அற்ப சொற்பமல்ல. நீதிபதி பதவியும் இவர் சிறிது காலம் வகித்து வந்தார்கள். இந்தப் பதவிக்கு வேண்டிய வயது எல்லை விதியை அநுசரித்து அதிலிருந்து விலகிய பின் மீண்டும் வழக்கறிஞர் தொழிலை அவர் எண்ணற்ற நண்பர்களின் தூண்டுதலினால் ஏற்றார். அப்படி ஏற்றுச் சிறிது காலம் தொழில் நடத்திக் கொண்டிருந்த போது, நீதிமன்றத்தில் ஒரு பெரிய வழக்கில் பேசிக் கொண்டிருக்கும்போதே மூர்ச்சையடைந்து விட்டார்கள். அதன் பிறகு அவர் அதிலிருந்து தெளிவு பெறவில்லை. 1908 நவம்பர் 18-ந் தேதியன்று காலமானார்கள்.

திரு பாஷ்யமய்யங்கார் அவர்களுடைய மாப்பிள்ளையவர்களைப் பற்றி அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும். காங்கிரஸின் புகழ் பெற்ற தலைவராக விளங்கி நாடு சுதந்திரம் பெறத் தமது சொத்து, சுதந்திரம், நலனையெல்லாம் அர்ப்பணம் செய்துவிட்ட தலைவர், காலஞ்சென்ற ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் அவர்கள் ஆவார். இவ்வாறாக, திரு வி. பாஷ்யமய்யங்கார் அவர்களின் சரித்திரம், சான்றோர் சரித்திரங்களுடன் தொடர்பு கொண்டதாகும். பெரியவர்களின் வாழ்க்கை வரலாறுகளில் இது தானே சிறப்பு அம்சமாகும். —'கதிர்.'

---

**புகைப்படம்: சென்னை கனம் உயர்நீதி மன்றத்தாரின் அனுமதியுடன் வெளியிடப்படுகிறது.**

மார்ச்

30உ

முதல்

சென்னை

சாந்தி

(ஏர்கண்டிஷண்ட்)

ஸ்ரீ கிருஷ்ணா

உமா

மதுரை

சிந்தாமணி

மற்றும் தென்னடெங்கும்

தனலக்ஷ்மி பிலிம்ஸ் அளிக்கும்

பத்மா பிலிம்ஸ்

# வளர் பிறை

டைரக்ஷன்

D. யோகானந்த்





# புது வெள்ளம்

## பூர்வ கதை

“வெள்ளையனே வெளியேற்று” என்ற மகாத்மாவின் கட்டளையைச் சிரமேற்கொண்டு ரகசியமாய்ச் சந்தித்துத் திட்டங்கள் வகுத்த மாணவர் கூட்டத்தில் முருகையனும் ஒருவன். ‘செய்து முடிப்போம்; அல்லது செத்து மடிவோம்’ என்ற அவர்கள் முழக்கத்தை ஸி. ஐ. டி. ஒருவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். கல்லூரித் தலைவரின் அன்பினாலும் சமயோசிதத்தாலும் முருகையன் அப்போது போலீசில் அகப்படாமல் தப்புகிறான். கிராமத்துக்குத் திரும்புகிறான். அங்கே அத்தானைப் பார்க்க வந்திருந்த சித்திராவுடன் சந்தோஷமாகப் பேசி உறவாடுகிறான். அந்த மகிழ்ச்சி அதிக காலம் நீடிக்கவில்லை. இரவில் நடந்த அரசியல் வன்முறைச் செயல்களில் முருகையனுக்குச் சம்பந்தமில்லாது போனாலும் அவன் மீது சந்தேகம் கொண்டிருந்த போலீஸார் விலங்கிட்டு அவனை அழைத்துப் போகின்றனர். மூன்று ஆண்டுகள் சிறையில் சிரமப்பட்டு விட்டுத் திரும்பிய முருகையன் தகப்பனார் சிவப்பிரகாசம் உருக்குலைந்து கிடப்பதையும் அவர் சொத்துக்களெல்லாம் குமரவேலின் சூழ்ச்சிகளுக்குப் பலியாகிப் பறிபோய் விட்டதையும் கண்டு மனம் புழுங்குகிறான். பின்னர் அப்பாவின் யோசனையின்படி பட்டணத்துக்குப் போய் அங்கே சித்திராவின் வீட்டில் இருந்து கொண்டு வேலை தேடுவது என்று தீர்மானிக்கிறான். தான் இப்போது பரம ஏழை என்று தெரியாத காரணத்தினால்தான் சித்திராவின் வீட்டிலே தனக்குத் தடபுடலாக உபசாரம் நடக்கிறது என்பதை முருகையன் உணருகிறான். அந்தச் சமயத்தில் சித்திரா அங்கில்லை. பெங்களூர்போயிருக்கிறாள். இந்தச் சூழலில் மேலும் தங்குவது தவறு என்று படவே வெளியேறிச் சென்று நண்பன் சுந்தரத்தின் குடியிருப்பை அடைகிறான்.

அந்த வீட்டில் பல குடித்தனங்கள். சுந்தரமும் தன்னை வைத்து ஆதரிக்கும் அளவுக்குச் செல்வம் படைத்தவனல்ல என்பது முருகையனுக்கு விளங்குகிறது. அதே வீட்டில் வேறு இரு அறைகளில் தங்கையுடனும் தாயாருடனும் குடியிருக்கும் சாந்தா முருகையனுக்கு வியாபாரம் செய்ய உதவுகிறாள். கடற்கரையில் சுண்டல், வறுவல், முந்திரிப் பருப்பு விற்பது அவனுடைய தொழிலாகிறது. அலைகளுக்கு அருகில் சித்திராவையும் பல தடவைகளில் சந்திக்கிறான் முருகையன். அன்பு வளர்கிறது.

சுந்தரத்துக்கு ஹைதராபாத் சமஸ்தானத்தில் ஒரு நிலக்கரிச் சுரங்கத்தில் நல்ல வேலை கிடைக்கவே குடும்பம் இடம் பெயர்கிறது. ஒரு நாள் கடற்கரை, வியாபாரத்தின் போது மழை பிடித்துக் கொள்ளவே சொட்டச் சொட்ட நனைந்து திரும்பும் முருகையனுக்கு ஜுரம் வந்து விடுகிறது. சாந்தா அவனைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்கிறாள். அவனோ சித்திரா இப்போது இங்கே இருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? என்று எண்ணிக் கொண்டிருந்தான்.

சாந்தாவின் உள்ளத்தை அவன் புரிந்துகொள்ளாத இந்நிலையில் அந்த வீட்டில் குடியிருந்தோரில் ஒருத்தி அவனுக்கும் சாந்தாவுக்கும் முடிச்சுப் போட்டுக் கேவலமாகப் பேசுகிறாள். இதைக் கேட்கச் சகியாமல் முருகையன் அங்கிருந்து கிளம்பி விடுகிறான். ரிக்ஷாக்காரன் முனியாண்டியின் குடும்பத்துக்கு உதவியாக அவன் ரிக்ஷா இழுக்கத் துணிந்த சமயத்தில் அவன் தகப்பனார்



அகிலன்

சிவப்பிரகாசம் மகனைக் காணச் சென்னைக்கு வருகிறார். தலையில் தொப்பியைக் கவிழ்த்துக் கொண்டு தன்னை ரயிலடியில் வருந்தி அழைத்து ரிக்ஷாவில் ஏறச் செய்த மனிதனை அவர் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. முருகையனும் அவரைச் சரியாகக் கவனிக்கவில்லை. ரிக்ஷா விரைகையில் எதிரே சித்திரா வேகமாகக் காரோட்டி வருகிறாள். அதன் காரணமாய் விபத்து நேருகிறது. கீழே நிலை விழுந்துகிடந்த ரிக்ஷாக்காரனைத் தூக்கிய சிவப்பிரகாசம் அவன் முகத்தைச் சரியாகப் பார்க்கிறார். 'முருகையா!' என்றுஅலறியவர் அந்த அதிர்ச்சியிலிருந்து மீளவேயில்லை.

சித்திரா முருகையனை வற்புறுத்தி வீட்டுக்கு அழைத்து வருகிறாள். 'அண்ணா ரொம்பவும் மாறி விட்டார். நீங்கள் பெரிய தியாகியாம். முதலாளியாக்கப் போகிறார் உங்களை' என்றெல்லாம் சொல்கிறாள்.

முதலில்லாமல் முதலாளியான முருகையன் வியாபாரத்தில் ஈடுபட்டுக் கணக்கெழுதப் பழகிக் கொள்கிறான். ஆனால் கள்ளச் சந்தையின் நுணுக்கங்களை அறியாதவனாகவே காலத்தை ஓட்டுகிறான். தன் மகன் செல்வரத்தினம் சித்திராவை மணக்க வேண்டும் என்று எண்ணியுள்ள குமரவேல் மீண்டும் சதி செய்கிறார். அதனால் விசாரணை என்று வந்து முருகையன் அதிகாரியின் எதிரே வந்து நிற்க வேண்டியதாகிறது.

அப்போதுதான் தனக்குள்ள தியாகி, தேசபக்தன் என்ற நற்பெயர்களைப் பணம் திரட்டுவதற்குச் சாதகமாகச் சித்திராவின் அண்ணன் பயன்படுத்திக் கொண்டிருப்பது தெரிய வருகிறது முருகையனுக்கு. சத்தியம் செத்து விட்டதோ என்று எண்ணும் அவனுக்கு, காந்தியடிகள் மறைந்து விட்ட செய்தி எட்டுகிறது.

மேலே கதையைப் படிக்கலாம்.



## அத்தியாயம் முப்பத்து மூன்று

# ஒளிச்சுடரில் ஒருவன்

முருகையனின் கதறல் ஓயவில்லை; கண்ணீர் நிற்கவில்லை.

ஆனால் படத்திலிருந்த காந்தியடிகளோ அவருக்கு எதுவுமே நடக்காதது போல், தமது பொக்கை வாய்ப் பல் தெரியப் புன்னகை பூத்துக் கொண்டிருந்தார். படத்திலிருந்த அவரது முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் முருகையன். மூக்குக் கண்ணாடி வழியே ஊடுருவிய அவருடைய கூர்மையான விழிகள் முருகையனின் இருதய ஆழத்துக்கே சென்று விட்டன. அந்த முகத்துக்குள்தான் எங்கிருந்து இவ்வளவு ஒளி வந்ததோ? அந்த விழிகளுக்குத்தான் எங்கிருந்து இவ்வளவு கூர்மை சேர்ந்ததோ.....?

கருணையும், அன்பும், அருளும் கனிய அவர் சிரித்த சிரிப்பு முருகையனை மேன்மேலும் வாய் விட்டுக் கதறச் செய்தது. மண்ணிலே புழுவாக நெளிந்த அடிமைக் கூட்டத்தை மனிதர்களாகத் தலை நிமிர்ந்து எழச் செய்த மகாத்மாவுக்கு இதுதானா பரிசு?... மனிதன் இன்னும் மாறவில்லையா? இயேசுநாதரைச் சிலுவையில் அறைந்தான்; சாக்ரடீஸுக்கு விஷம் கொடுத்தான்; இப்போது, புத்தர் பிறந்த நாட்டிலே காந்தியடிகளைச் சுட்டுக் கொன்றிருக்கிறான்...

முருகையனால் காந்தியடிகளின் உடலைத் துப்பாக்கிக் குண்டுகளால் துளைக்க முடியும் என்று நம்பக்கூட முடியவில்லை. வெள்ளையர்களே செய்யத் துணியாத செயலை ஒரு சொந்த நாட்டுக்காரன் எப்படிச் செய்தான்?

முருகையனின் தோள்மீது சித்திராவின் மென்கரம் பதிந்தது. பிறகு அவனைப் பற்றி மெல்ல உலுக்கியது. திரும்பிப் பார்த்தான் முருகையன். சித்திராவின் கண்களும் கலங்கிப்போயிருந்தன.

அதைக் கண்டவுடன் மறுபடியும் அவள் கரங்களில் முகம் புதைத்துக் கொண்டு குழந்தை போல் தேம்பத் தொடங்கி விட்டான். ''சித்திரா! என்னால் இதை நம்பவே முடியவில்லை, சித்திரா! ... சத்தியத்துக்கும் சாவு உண்டா சித்திரா?''

சோக உணர்ச்சிப் பெருக்கில் முற்றிலும் குழந்தையாக மாறி விட்ட முருகையனை எப்படித் தேற்றுவதென்றே சித்திராவுக்குப் புரியவில்லை. அன்போடு அவன் கண்களைத் துடைத்து விட்டாள். ஆதரவுடன் அவனைப் பற்றி இழுத்துச் சென்று கட்டிலில் கிடத்தினாள். என்னென்னவோ ஆறுதல் மொழிகளெல்லாம் கூறினாள்.

துன்பம் நிறைந்த இந்த நேரத்தில் முருகையன் உருகித் துடித்த துடிப்பு சித்திராவுக்குப் புதிய அனுபவமாக இருந்தது. ஆர்வமும் அதிசயமும் நிறைந்த விழிகளோடு அவனுடைய மாறுதலைக் கவனித்தாள். 'முரட்டுத்தனம் நிறைந்த இளைஞரான அதே அத்தான்தானா இவர்? நான் எவ்வளவு பாக்கியம் செய்தவள்!'

உடனே அவளுக்குத் திடீரென்று வருத்தமும் ஏற்பட்டது. இதற்குள் திருமணம் நடைபெற்றிருந்தால் இரவெல்லாம் அவர் அருகில் இருந்து தேற்றிக் கொண்டிருக்கலாமே....

''அத்தான்! எதற்காக அவர் பிறந்தாரோ அந்தக் காரியம் முடிந்து விட்டது. கடமை தீர்ந்தவுடன் அவருக்கு முடிவும் வந்திருக்கிறது. கவலைப்படாதீர்கள், அத்தான்!''

கட்டிலில் கிடந்த முருகையன் 'சட்' டென்று எழுந்து உட்கார்ந்தான். கடைக்குள்ளே இருளில் பதுங்கிக் கிடந்த சிமெண்டு மூட்டைகள் அவன் கண்ணெதிரில் வந்தன. அவை நியாயமான விலைக்குக் கிடைக்காததால் ஒரு மனிதர் தவித்த தவிப்பும் அவனது நினைவுக்கு வந்தது.

''சித்திரா! அவருடைய வேலை இன்னும் முடியவில்லை. ஒரு பாதியைத்தான் அவர் முடித்திருக்கிறார். மறு பாதி அப்படியே இருக்கிறது. நம்மவர்களின் தன்னலச் சுரண்டலுக்கு எதிராக அறப்போர் தொடங்கக் கூடியவர் அவர் ஒருவர்தாம்.''

புரியாமல் விழித்தாள் சித்திரா. முருகையன் மளமளவென்று அன்றைக்கு நடந்ததையெல்லாம் அவளிடம் கொட்டித் தீர்த்தான். அவனுடைய பெயரால் நடந்த வியாபார ஊழல்களைக் கூறியபோது அவனுக்கே அது அருவருப்பாக இருந்தது.

''சித்திரா! இதற்காகவா நீ என்னை முதலாளியாக்கினாய்? மனிதர்களின் பழிபாவங்களைச் சுமப்பதற்காகவா நீ எனக்கு அந்தப் பதவியைக் கொடுத்தாய்? பணத்தையும் பணத்தால் கிடைக்கும் வசதிகளையும் ஒரு சிலரே தேடிக் குவித்துக் கொண்டால் மற்றவர்களின் கதி என்ன ஆவது? என் பெயரால் இப்போது திருட்டை விடக் கேவலமான தொழில் நடக்கிறது சித்திரா! இனியும்

நான் அதற்கு உடந்தையாக இருக்க வேண்டுமா?''

சித்திரா திடுக்கிட்டாள். அவளுடைய அண்ணன் அவளிடம் தொழில் விஷயங்களைப் பற்றிப் பேசுவது வழக்கமென்றாலும், இது போன்ற விஷயங்களை யெல்லாம் அவர் வெளியிடுவதில்லை. அவளுக்கே முருகையன் கூறிய செய்தி அதிர்ச்சியைத் தந்தது.

''கவலைப்படாதீர்கள். அண்ணா ஊரிலிருந்து வந்தவுடன் அவரிடம் பேசி ஒரு நல்ல முடிவுக்கு வருகிறேன். இனிமேல் இப்படி யெல்லாம் நடக்காமல் பார்த்துக் கொள்வோம். என்னை மீறி அவர் எதுவும் செய்துவிட மாட்டார்.''

சித்திராவின் பேச்சு அவனுக்கு ஆறுதலைத் தந்தது. அவள் மிகச் சாதாரணமாகவே அப்படிக் கூறினாள் என்றாலும், அந்த நேரத்தில் அது அவனுக்கு அருமருந்தாகத் தோன்றியது. யார் என்ன செய்தால் என்ன? சித்திரா மட்டிலும் பக்கத் துணையாக இருந்தால் போதும்.

''சித்திரா! என்னை நீ இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளும் காலம் வரவில்லை. என்றாலும் ஒன்றை மட்டும் நான் உன்னிடம் சொல்ல விரும்புகிறேன். என்னைப் பொறுத்த மட்டில் இன்னும் என்னுடைய நெஞ்சில் காந்தியடிகள் உயிருடன் இருக்கிறார். என்னால் முடிந்த வரையில் அவரும் வள்ளுவரும் காட்டும் வழியில் வாழ விரும்புகிறேன்.

''அத்தான்! நீங்கள் அவர்கள் காட்டும் வழியில் தாராளமாக வாழுங்கள். அவர்களைப் பற்றி யெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. நான் நீங்கள் சொல்கிறபடி வாழ்கிறேன்.''

''சித்திரா!''-அப்படியே சித்திராவை வாரியெடுத்துக் கொண்டு வானத்தில் பறக்க வேண்டும் போலிருந்தது முருகையனுக்கு. உலகமே அவன் போக்கை எதிர்த்தாலும் அவள் ஒருத்தியின் அன்பைக் கொண்டு அவன் உலகையே அன்பால் ஆள முடியும் என்று நம்பினான்.

காந்தியடிகளின் சத்திய சோதனைகள் நிறைந்த வாழ்க்கையையும் அதில் அன்னை கஸ்தூரிபா பங்கு கொண்டு கடுமையாக உழைத்ததையும் அவளிடம் கதைபோல் கூறினான். சித்திராவும் ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டாள்.

நாழிகையாயிற்று. சித்திராவுக்குப் பசி எடுத்தது.

''வாருங்கள், சாப்பிடப் போவோம்'' என்று மெல்ல அழைத்தாள்.

''என்ன! சாப்பாடா?''

''ஏன், உங்களுக்குப் பசிக்கவில்லையா?'' என்று கேட்டாள் சித்திரா.



''சித்திரா! இவ்வளவு நேரம் கதை கேட்டாயே, கேட்டு விட்டுமா சாப்பிடச் சொல்கிறாய்?''

சித்திரா காரணம் தெரியாமல் விழித்தாள்.

''இந்த நாட்டில் உள்ள கோடானகோடிப் பேருக்கும் சாப்பாடு கிடைக்க வேண்டுமென்பதற்காகப் பலநாள் சாப்பிடாமல் உண்ணாவிரதமிருந்து உடலை வருத்திக் கொண்ட உத்தமன் இறந்து போன தினம் இது! நம் வீட்டுத்தலைவர் இறந்து கிடக்கும் போது அவரைப் பார்த்துக் கொண்டு நமக்குச் சாப்பிட மனம் வருமா?... எனக்குப் பசிக்கவில்லை; தாகமுமில்லை. நீ வேண்டுமானால் போய்ச் சாப்பிடு.''

சித்திராவுக்கு இப்போது சுருக்கென்று தைத்தது. அதுவரையில் அவளுக்கிருந்த உற்சாகம் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. ஏதோ ஒரு நூதனமான பிராணியிடம் அகப்பட்டுக் கொண்டது போல் அவள் விழித்தாள்.

பிறகு, ''சரி, எனக்கும் பசிக்கவில்லை'' என்று சொல்லி விட்டு அங்கிருந்து கிளம்பினாள்.

''இதோ பார், எனக்காக நீ பட்டினி கிடக்க வேண்டாம்'' என்றான் முருகையன். ஆனால் சித்திரா அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இரவு முழுதும் பசி அவளை வாட்டி எடுத்தது.

அதோடு முருகையனுடைய விசித்திரமான பேச்சுக்களையும் அவள் நினைவு படுத்திக் கொண்டாள். முருகையனோ பசி, தாகம், உறக்கம் முதலியவற்றை அறவே மறந்து விட்டு, காந்தியடிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை யெல்லாம் திரும்பத் திரும்ப அசை போட்டுக் கொண்டிருந்தான்.

மறுநாள் பொழுதுவிடிந்தது. சென்னை நகரம் முழுவதுமே அன்றைக்குத் துக்கம் கொண்டாடியது. கடல் அலைகளின் ஓலத்தில் கூடச் சோகம் ஒலித்தது. உலகத்தில் பிறந்து மறைந்த எந்த ஒரு தனி மனிதருமே பெறாத பெரும் பேற்றைக் காந்தியடிகள் பெற்றிருந்தார் என்பது, அவருடைய இறுதிக் கடன் அன்று வெளியாகியது. கன்னியாகுமரியிலிருந்து இமயம் வரையிலுள்ள கோடானு கோடி மக்கள் அன்று அவருக்காகக் கண்ணீர் வடித்தார்கள்.

நாட்கள் சென்றன. ஒவ்வொரு நாளும் முருகையனே நேரில் சென்று கடையைக் கவனித்தான். ஒவ்வொருவருடைய செயலையும் மேற்பார்வை செய்தான். அவன் சென்றதிலிருந்து எல்லாமே ஒழுங்காகத்தான் நடைபெற்றன. ஆனால் அதற்கு முன்பு நடந்து முடிந்திருந்த ஊழல்களெல்லாம் அவ்வளவு சுலபமாக அழிந்து விடக் கூடியதாக இல்லை.

## அத்தியாயம் முப்பத்திநாலு

# திருமணத் திட்டம்

வெளியூரிலிருந்து திரும்பி வந்த மாணிக்கம் முருகையனே கடையிலிருந்து கொண்டு நேரடியாக வியாபாரத்தைக் கவனிப்பது கண்டு சலசலத்துப் போனார். அவனிடம் எந்த விஷயத்தையும் அவர் நேரில் கேட்கவில்லை. கடைக் கணக்கரிடம் தனியாகக் கேட்டுத் தெரிந்து கொண்டார். அவருக்கு முருகையன் மீது சிறிதளவும் கோபம் ஏற்படவில்லை. அடிப்படைக் காரணமே குமரவேல்தான் என்ற எண்ணம் அவருக்கு. குமரவேலின் தூண்டுதலால் முருகையன் விழித்துக் கொண்டு, தன் விருப்பப்படி மாறுதல்களைச் செய்திருப்பதாக நம்பினார்.

கடையில் இருந்தவர்களாலும் முருகையன் மீது எவ்விதக் குற்றமும் சொல்ல முடியவில்லை. அவன் எல்லோரிடமும் அன்புடனும் மனிதத்தன்மையோடும் நடந்து கொண்டான். அதே சமயம் வேலையில் கண்டிப்பாகவும் நாணயமாகவும் இருந்தான். ஆகவே தான் கடைக் கணக்கர் எல்லாக் குற்றங்களையும் குமரவேலின் மீது சுமத்தினார்.

மாணிக்கம் யாரிடமும் கோபம் கொள்ளவில்லை. முருகையனிடம் கோபித்துக் கொண்டால் பல எதிர்காலத் திட்டங்கள் வீணாகி விடும் என்ற பயம் அவருக்கு. அதே போல் குமரவேலைப் பகைத்துக் கொண்டாலும் பல தொல்லைகள் வரக் கூடும். குமரவேல் தம்மைவிட வியாபாரத் தந்திரங்களில் வல்லவர் என்று மாணிக்கம் ஏற்கனவே எடை போட்டு வைத்திருந்தார்.

அதனால் நிதானமாக யோசனை செய்து ஒரு மறைமுகமான ஏற்பாட்டைச் செய்து முடிக்க விரும்பினார். வீட்டில் இது பற்றி அவர் முதன் முதலில் சித்திராவிடம் தனியாகப் பேச வேண்டியிருந்தது. சித்திராவும் தன் அண்ணனின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததால் இருவரும் தங்களுடைய எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டனர்.

முதலில் சித்திரா முருகையன் கூறிய செய்திகளை வைத்துக் கொண்டு அவன் சார்பில் வாதாடினாள். "அண்ணா! அவருக்கு ஏதும் அவமானம் நேர்ந்து விட்டால் அந்த அவமானத்தில் நமக்கும்தானே பங்கு உண்டு? நாளைக்கு அவரைச் சட்டப்படி குற்றவாளிக் கூண்டில் ஏற்றி அபராதம் போட்டால் அது நமக்குக் கேவலம் இல்லையா, அண்ணா?"

"ஓ! முருகையன் இப்படி யெல்லாம் நினைத்துப் பயந்து விட்டானா?" என்று கூறிச் சிரித்தார் மாணிக்கம். "அந்தப் பயத்தினால்தான் பிள்ளை இப்போது சுறுசுறுப்பாக வேலை செய்கிறான் போலிருக்கிறது!"

"பயம் அவருக்கு இல்லை; எனக்குத்தான்." முருகையன் சட்டத்தைவிட நியாயத்துக்கும் தர்மத்துக்கும் அதிகமாகக் கட்டுப்பட்டு நடக்க விரும்பினான் என்று அவளுக்குச் சொல்லத் தெரியவில்லை. முருகையன் அவளிடம் பேசிய போது, "நான் ஏற்கனவே சிறைக்குப் போனவன்தான்; பல கஷ்டங்களை அநுபவித்தவன்தான்; ஆனால் உயர்ந்த நோக்கத்துக்காக அப்படிச் செய்தேன்; இந்த விஷயம் அப்படியில்லை" என்றான்.

அதனால் சித்திராவுக்கு இப்போது பயம் ஏற்பட்டிருந்தது. பயத்தின்

காரணமாகத்தான் அவள் தன் அண்ணனிடம் வாதாட வந்தாள்.

''சித்திரா!'' என்று அன்போடு அழைத்தார் மாணிக்கம். ''உனக்காகத்தான் நான் அவனுக்கு இவ்வளவு வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறேன். அவனுக்கு ஒரு கெடுதல் வந்தால் நான் அதைப் பார்த்துக் கொண்டிருப்பேனா? நான் ஊரில் இருந்திருந்தால் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்து எதையும் சரிக்கட்டியிருப்பேன். முருகையனுக்கு அநுபவம் இல்லை; பயப்படுகிறான்.''

''எனக்கு நீங்கள் பேசுவது ஒன்றுமே புரியவில்லை, அண்ணா!'' என்று சிணுங்கினாள் சித்திரா.

''இன்னுமா புரியவில்லை? நம்மிடம் பணம் இருக்கிறது சித்திரா, பணம் இருக்கிறது! எவ்வளவுக்கு எவ்வளவு இது வந்து குவிகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு நம்மை யாரும் அசைக்க முடியாது. ஐம்பது ரூபாய் தண்டனை போடுவார்கள் என்று தெரிந்தால் அதற்காக ஐயாயிரம் ரூபாய் வக்கீலுக்குக் கொடுத்து வாதாடச் செய்வேன். இன்னும் அப்பீலுக்கு மேல் அப்பீலுக்குப் போவேன். பணம் செலவு செய்யத் துணிந்து விட்டால் ஆயிரம் வழி உண்டு நியாயம் பேசுகிறவனைக் குற்றவாளி ஆக்குவதற்கு! வேண்டியது பணம் ஒன்றுதான்.''

''இவ்வளவு கஷ்டம் நமக்கு எதற்கு அண்ணா? அத்தான் சொல்கிறபடியே நடந்து கொண்டால் என்ன?''

''அவன் ஒரு முட்டாள்; நீ ஒரு முட்டாள்!'' என்று கூறிச் சிரித்தார் மாணிக்கம். ''அவன் சொல்கிறபடி கேட்டால் அந்தக் கடையில் மாதம் ஐந்நூறுகூட மிஞ்சாது; நான் செய்கிறபடி செய்த போது மாதம் மூவாயிரம் வந்து கொண்டிருந்தது. பணத்தை மூட்டை கட்டி வைத்திருப்பவன் அதிகமாகக் கொடுத்து வாங்கத் தயாராக இருக்கும் போது அது இல்லாதவனிடம் நமக்கு என்ன வேலை? ஏழைகள் வாழ முடியவில்லையென்றால் செத்துத் தொலைக்கட்டுமே! யாருக்கு என்ன நஷ்டம்?''

''பாவம் அண்ணா, பாவம்!'' என்றாள் சித்திரா.

''பாவமாவது, புண்ணியமாவது! இதையெல்லாம் பார்த்திருந்தால் நம் அப்பா நமக்குப் பத்து லட்சம் சேர்த்து வைத்திருக்க முடியுமா? சமஸ்தான உத்தியோகத்தில் இருந்தபோது இரு கைகளாலும் முடிந்த மட்டும் லஞ்சம்

வாங்கினார். இந்த வீடு அவர் கட்டிய வீடுதான். நூறு பேர்கள் குடியிருக்கக் கூடிய இடத்தில் நாம் ஐந்து பேர்கள் மட்டும் இருக்கிறோம். குடும்பச் செலவோ மாதம் ஐயாயிரம் வரும் போலிருக்கிறது. அப்படியிருந்தும் நமக்கு வசதி போதவில்லை.... நீ நினைத்தபோதெல்லாம் ஐந்நூறு ஆயிரம் எடுத்துக் கொண்டு பாரிஸ் மூனைக்குப் போய்ச் சாமான் வாங்க வேண்டும் என்கிறாய். இப்படியெல்லாம் நடக்கும்போது நாம் பொய் சொல்லாமல், திருடாமல், ஏமாற்றாமல் இருக்க முடியுமா?''

சித்திரா யோசனை செய்தாள். அவளால் செட்டும் சிக்கனமுமாக மாத்திரம் இருக்க முடியாது. புடவையாகட்டும், வேறு எதுவாகட்டும், நாகரிகப் புதுமையின் முதல் சின்னம் அவளுடையதாக இருக்க வேண்டும்!

''இதோ, பார்! இந்தச் சென்னைப் பட்டணம் இருக்கிறதே, இது சாதாரணச் சுண்டைக்காய்ப் பட்டணம்! நமக்கு முதலில் பம்பாய் 'மலபார் ஹில்'லில் ஒரு பங்களா வேண்டும். இன்னும் கொடைக்கானல், ஊட்டி, குற்றாலம் இங்கெல்லாம் ஒவ்வொரு பங்களா இருந்தால் என்ன கெட்டுப் போகுமாம்? இருந்தால் நீயும் அவனும்தானே உல்லாசமாகச் சுற்றிவரப் போகிறீர்கள்?''

சித்திராவுக்கு அவளுடைய அண்ணனின் பேச்சுத் தேனாக இனித்தது. அண்ணா! எவ்வளவு அருமையான அண்ணா! தங்கையின் மேல்தான் அவருக்கு எத்தனை அன்பு! இதெல்லாம் அந்த அத்தானுக்கு ஒன்றுமே தெரிய மாட்டேன் என்கிறதே!.....

''சித்திரா! இப்போதைக்கு அவனிடம் நீ ஒன்றும் கேட்க வேண்டாம். அவனே கடையைப் பார்த்துக் கொண்டிருக்கட்டும். நாளாவட்டத்தில் என்னோடு நெருங்கிப் பழகும்போது அவனே ஒரு வழிக்கு வந்துவிடுவான். துள்ளுகிற காளைக்கு மூக்குக் கயிறு போடுவது போல், உன்னை அவனுக்குக் கட்டி வைத்து விட்டால் எல்லாம் சரியாகி விடும். சீக்கிரம் நாள் பார்த்து முடித்து விடுகிறேன். பிறகு உன் சாமர்த்தியம்.''

''போங்கள், அண்ணா!'' என்று வெட்கத்தோடு சொல்லி விட்டு, ஆனந்தமாகக் குதித்துக் கொண்டு வேகமாக ஓடினாள் சித்திரா.

மாணிக்கம் அன்றைக்கு இரவே தன் தாயாரையும் மனைவியையும் வைத்துக் கொண்டு சித்திராவின் கல்யாணத்தைப் பற்றி அந்தரங்கமாக ஆலோசனைகள் நடத்தலானார். தாயாருக்கு இந்த விஷயத்தில் தடை ஒன்றுமில்லை. மாணிக்கத்தின் மனைவிதான் கூடியவரையில் பேச்சைத் தட்டிவிடப் பார்த்தாள். அவளுக்கு ஏனோ முருகையனைப் பிடிக்கவில்லை. அவனுடைய ஏழைமையைச் சுட்டிக்காட்டினாள்; முரட்டுத்தனத்தைக் காரணம் சொன்னாள்: தங்களுடைய கௌரவத்துக்கும் அந்தஸ்துக்கும் தகாத சம்பந்தம் என்றாள்.

''ஏன், அந்தக் குமரவேலுடைய பிள்ளை செல்வரத்தினம் வந்தானே, அவனுக்குக் கொடுத்தால் என்னவாம்? இவனைவிட அதிகம் படித்திருக்கிறான்? உத்தியோகமும் பெரிய உத்தியோகம். நமக்குச் சமமான இடமாகவும் இருக்கிறது'' என்றாள் அவள்.

''நமக்கு இப்போது வீட்டுக்கு மாப்பிள்ளையாக வரக் கூடியவன்தானே வேண்டும்? நம்முடைய சொல்லைக் கேட்டு அடங்கி ஒடுங்கி நடக்கக் கூடியவன்தான் தேவை. முருகையனென்றால் சித்திராவின் சொல்படி நடந்து கொள்வான். அவளுக்கும் அவனைப் பிடித்திருக்கிறது. முருகையனால் நமக்கு லாபத்துக்கு வழியுண்டு; செல்வரத்தினம் என்றால் அப்படிச் சொல்ல முடியாது.''

''ஏன் முடியாது?''

''குமரவேல் அவனைத் தூண்டி முன்னாய்ப் போட்டு நம்முடைய சொத்தில் பாதியைக் கறந்து விடுவார். உத்தியோகத்தில் அதிகாரம் செய்து பழக்கப்பட்டவன் நம் வீட்டுப் பெண்ணை அதிகாரம் செய்தாலும் செய்வான். சித்திராவும் இதற்கு ஏற்றுக் கொள்ள மாட்டாள்.''

''சரி, சரி! வீட்டில் இருக்கிற பிள்ளைக்குச் செய்வதுதான் நல்லது'' என்று முருகையனுக்குப் பரிந்து பேசினாள் தாயார். ''பெண்ணும் பிள்ளையும் கூடவே இருந்தால் நமக்கும் சௌகரியமாக இருக்கும். இது தான் நல்ல ஏற்பாடு....''

வரப் போகும் தை மாதத்தில் சித்திராவுக்கும் முருகையனுக்கும் சிறப்பான முறையில் திருமணத்தை நடத்திவிடவேண்டும் என்று முடிவு செய்தார்கள் அவர்கள். இந்த விஷயத்தில் தன்னைத் தவிர மற்ற எல்லோரும் ஒரே முடிவாக இருந்ததால், மாணிக்கத்தின் மனைவியும் கடைசியில் அவர்களோடு ஒன்றுசேர்ந்து விட்டாள்.

தாயார் பொன்னம்மாள் எப்படியெல்லாம் அந்தக் கல்யாணத்தைச் சீரும் சிறப்புமாகச் செய்ய வேண்டும் என்பதைப் பற்றி ஆவலோடு விவரித்துக் கொண்டு போனாள். (தொடரும்)

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆல் மோல்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையையும்விட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண தன்மையை அடக்கி, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதன்மை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மின்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!







CTPA-G-10 TAM.

இதோ மீண்டும் ஒரு * விஷுப் பண்டிகை நாள் வந்து விட்டது.

கிழக்கு வெளுக்கும் வேளையில் குளிர்ச்சி நிறைந்த வான் வெளியை நடுங்கச் செய்வது போலப் பக்கத்து வீடுகளிலிருந்து சீனப் பட்டாசுகள் வெடிக்கின்றன. பீடியைப் புகைத்த படி இந்த சுவிசேரில் இப்படிச் சோம்பி முடங்கிக் கிடந்து நான் யோசனைகளில் ஆழ்ந்திருக்கிறேன். கடைசியாக எந்த வருஷம் விஷுப் பண்டிகைக்கு நான் கிராமத்துக்குப் போனேன் என்பதைப் பற்றி யோசிக்கிறேன்.

கடைசியாகப் போய் மூன்று நான்கு வருஷங்கள் இருக்கும். இப்போதும் எனக்கு விடுமுறைதான். ஆனாலும் நான் போகவில்லை. முன்னெல்லாம் நான் பிறந்து வளர்ந்த அந்தக் கிராமம் எனக்குப் பிடித்திருந்தது. இன்று, அங்கே போவதென்றால் எனக்கு ஒரே வெறுப்பு. பழைய பாரம்பரியத்தின் ஜீவனற்ற நினைவுகள் போல் நிற்கும் அந்த வீட்டுக்குள் அடியெடுத்து வைக்கவே ஒரு தயக்கம். சூன்யமான அவ்வீட்டுச் சூழல் என்னை வேதனையிலாழ்த்துகிறது. நான் வருவேன் என்று எதிர்நோக்கி எனக்காக யாரும் அங்கே காத்துக் கொண்டிருக்கவுமில்லை.

மண்ணடைந்து போன என் அருமைத் தாயைப் பற்றிய நினைவு வருகிறது. பாம்புக் காவின் பின்புறமுள்ள மயான பூமியில் அவள் இன்று நிரந்தரமாக ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாள். அந்த மண்ணிலேதான் எத்தனை தலைமுறைகள் இலயித்துக் கிடக்கின்றன! புல்லும் பூண்டும் மூடிக்கிடக்கும் அந்த இடத்தைப் பார்க்கும்போது எனக்கு அச்சம் தோன்றும்.

மயானத்தின் பக்கத்தில்தான் அந்தக் கொன்னை மரம்.

குழந்தைகள் யாரும் அந்த மரத்தில் ஏறக் கூடாது. பக்கத்தில் கடுகாடல்லவா? அம்மாவின் கண்டிப்பான உத்தரவு இது. பண்டிகைக் 'கணி'யில் வைப்பதற்குத் தேவைப்படும்—, கொன்னைப் பூக்களை முன்தினம் சந்தியாவேளையிலேயே ஐயப்பன் பறித்துக் கொண்டு வந்து வைத்து விடுவான்.

ஓ. இன்றும் விஷுப் பண்டிகை அல்லவா!

இன்று காலையில் 'கணி' என்ன கண்டேன்? என் அறையைப் பெருக்கிச் சுத்தம் செய்ய வந்த தங்கப்பனைத்தான் பார்த்தேன் போல் இருக்கிறது. இல்லை, அதற்கு முன்பே வாசல் கதவைத் தள்ளித் திறந்து கொண்டு யாரோ தலை நீட்டினார்களே...அப்போது தான் நான் கண்ணைத் திறந்து பார்த்தேன். ரோஸி. சனியன்! (ரோஸி என்பது பக்கத்து வீட்டுக் காரனின் அசிங்கம் பிடித்த நாய்.)

சென்ற வருஷம் என்ன 'கணி' கண்டேன்? கண்ட கணியின் பலன் அந்த வருஷம் இருந்ததா என்று தெரிந்து கொள்ளும் எண்ணம் எனக்கு. நினைவுக்கு வரவில்லை..... பார்ப்போம்.... நினைவு வருகிறது. வெள்ளை அப்பம் கொண்டு வந்து வாசல் கதவைத் தட்டிக் கூப்பிட்ட மக்கடைப் பையனைத்தான் அன்று பார்த்தேன்.

''ஸார்!''

யாரோ அழைத்தார்கள். என்னைத்தான். பார்த்தால் பாலகிருஷ்ணன் நின்று கொண்டிருக்கிறான். பாலகிருஷ்ணன் என்னுடைய புதிய சிநேகிதன். எனக்கு யோசனைகள் சொல்லித் தருபவனும் கூட. எட்டே வயசான ஓர் அறிஞன் அவன். கூலி வேலைக்குச் செல்லும் அவனுடைய அம்மா திரும்பிவரும் வரையில் ஊர் சுற்றுவது தான் அவனுடைய வேலை.

''என்னப்பா?''

''நாலணா வேணும் ஸார்.''

சாதாரணமாக அரை அணாவுக்கு மேல் அவன் கேட்பதில்லை. இன்று ஒரு பெரிய தொகை அல்லவா தேவைப்பட்டிருக்கிறது?

* சித்திரை மாதத்தின் முதல் நாள் மலையாள மக்களின் விஷுப் பண்டிகை நாள். ஒவ்வொரு இல்லத்திலும் கொத்தோடு மாங்காயும், குலையோடு தேங்காயும், அரிசியும் பருப்பும், கொன்னைப் பூவும், முகம் பார்க்கும் கண்ணாடியும் வைத்து, அதிகாலையில் விழித்ததும் முதலில் அதைப் பார்ப்பார்கள். இதுவே கணிகாணுதல். அன்று வீட்டுப் பெரியவர்கள் குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் தம் தம் சக்திக்கு ஏற்பப் பணம் வழங்குவதுண்டு. 'கைநேட்டம்' என்று சொல்லப்படுவது இதுதான்.



''எதுக்கு நாலணா?''

''தேவை இருக்கு ஸார்.''

''என்ன தேவை?''

''ஒரு சாமான் வாங்கணும்.''

''என்ன சாமான்?''

''பதினாறு ஓலை வெடி, ஒரு கம்பி மத்தாப்பு, ஒரு மத்தாப்பு. நாலணா வேணும்.''

என்னிடம் நாலணா இருக்கிறதா என்று நான் யோசித்துப் பார்த்தேன்.

''மூணணா தந்தாலும் போதும் ஸார்.''

''அதென்னடா?''

''ஓரணா எங்கிட்டே இருக்கு'' என்று சொல்லிக் கொண்டே இரண்டு காதுகளுக்குள்ளிருந்தும் இரண்டு அரை அணா நாணயங்களை வெளியே எடுத்தான் அவன்.

''இது எங்கிருந்து கெடச்சது?''

''அம்மா பெட்டியிலிருந்து அவளுக்குத் தெரியாமெ எடுத்தேன்.''

''கெட்டிக்காரன்!''

நான் பர்ஸ், அலமாரி, சட்டைப் பை எல்லாவற்றையும் தேடித் துலக்கி நாலணா தயார் பண்ணினேன்.

நாலணா கிடைத்ததும் அவன் மகிழ்ச்சி அடைந்தான். அந்த ஓரணாவை அம்மாவின் பெட்டிக்குள் திருப்பிக் கொண்டு போய் வைத்து விடுமாறு அவனைச் சத்தியம் பண்ணச் செய்த பிறகுதான் ஆளை விட்டேன். அவனுக்குச் சத்தியத்தில் அபார நம்பிக்கை.

நாலணாவுக்கு அந்தக் காலத்தில் தாராளமாகவே பட்டாசு வாங்க முடியும். சீனப் பட்டாசு விஷுவுக்கு மறுதினமும் கடைகளில் விற்பனைக்கு மீந்திருக்கும். ஆனால் அன்று நாலணா கிடைப்பது தான் சிரமம். இந்தப் பண்டிகை நாளில் குழந்தைகள் திருடுகிறார்கள் என்றால் அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இன்று பாலகிருஷ்ணன் திருடியது ஓரணாத்தான். ஆனால் நானோ?.....

அந்தத் திருட்டின் வரலாற்றை நினைத்துப் பார்க்க ரஸமாக இருந்தது. நான் கால்ரூபாய் திருடினேன். என் வாழ்வில் வெகு நாட்களுக்கு முன்னால் அது நடந்தது. அரையில் இழுத்து முறுக்கிக் கட்டிய சிவந்த நிஜாருடனும், முந்திரிக் கொட்டைப் பால் பட்டுப் பொத்துப் போன மார்புடனும், மூக்கை உறிஞ்சி உறிஞ்சிக் கொண்டு நான் திரிந்த காலத்தில் நடந்த திருட்டு அது.

பாலகிருஷ்ணன் திருடியது அவன் தாயின்காக. அவன் தாய்க்கு நிரந்தரமான ஒரு வேலை இல்லை. ரஸ்தாவில் தார் போட்டுக் கொண்டிருந்த இடத்தில் இப்போது அவளுக்கு வேலை. உருகிக் கொண்டிருக்கும் தார் நினைவுக்கு வருகிறது. மூக்கைக் குத்துகிற வாசனை. ஒரு


மலையாளக் கதை:
எம். டி. வாசுதேவன் நாயர்
தமிழாக்கம்: கிருஷ்ணன் நம்பி









நான் வேலைக் கூலி பன்னிரண்டணா இருக்கும். அதிலிருந்து அவன் மிச்சம் பிடித்து வைத்திருந்த காசைத் தான் பாலகிருஷ்ணன் திருடியிருப்பான். ஆனால் திருட்டுத் தொழிலே, மிகுந்த துணிச்சலோடும், முறையான யோசனையோடும் செய்தவன் நான்தான். தேவி பகவதியின் காசையே நான் அபகரித்தேன்!

அடுத்த வீட்டுக் குட்டனுக்குப் பட்டாசுகள் நிறையக் கிடைக்கும். விஷுப் பண்டிகை நெருங்கி விட்டால் அவனுடைய அண்ணா லீவில் வருவார். வரும் போது கோழிக் கோட்டுச் சந்தையில் கிடைக்கிற முதல்தரமான வெடிகளையெல்லாம் வாங்கி வருவார். விஷு வந்து விட்டால் குட்டனைக் கையில் பிடிக்க முடியாது. அவன் பீத்திக் கொள்வதைப் பார்க்க வேண்டுமே.

தெற்கு வீட்டு அப்புவுக்கு அவனுடைய அப்பா பட்டாசு வாங்கக் காசு கொடுப்பார். அப்பாவுக்கு அவன் ஒற்றைக் கொரு பிள்ளையாதலால் தான் அவனிடம் அத்தனை பிரியம் அவனுடைய அப்பாவுக்கு.

மற்றப் பையன்களுக்கெல்லாம் குறைந்த பட்சம் விஷு அன்றாவது பட்டாசு வாங்க முடியும். அதிகாலையில் கண்ணைத் திறந்து கணி கண்டவுடன் பெரியவர்கள் கொடுக்கும் 'கைநேட்டப்' பணம்தான் அவர்களுக்குப் பட்டாசு வாங்கப் பயன்படும் சமய சஞ்சீவி.

எனக்குக் கோழிக்கோட்டில் உத்தியோகம் பார்க்கிற அண்ணன் இல்லை. நான் அப்பாவின் ஒரே பிள்ளையும் அல்ல. 'கைநேட்டப்' பணமும் எனக்குக் கிடைக்கப் போவதில்லை.

அப்பாவோ அல்லது மாமாவோ விஷு 'கைநேட்டம்' கொடுக்க வேண்டும். விஷு சமயத்தில் அப்பா ஊரில் இருக்க மாட்டார். மாமன்மார்களுடைய சங்கதியோ? இரண்டு மாமன்மார்கள் எனக்கு உண்டு. ஆனால் அவர்கள் இம்மாதிரி கெட்ட பழக்கங்களைத் தம் மருமகன்மாருக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை. போதாததற்குச் சொந்தக் குழந்தைகளே மாமன்மார்களுக்கு அமோகம்.

விஷுப் பண்டிகையன்று அவர்கள் யாராவது வருவதாயிருந்தால்! ஒரு முறையாவது 'கைநேட்டப்' பணம் வாங்கமுடியுமானால்...! இப்படி ஒவ்வொரு வருஷமும் விஷுப் பண்டிகை நாள் நெருங்குகையில் நான் ஆசைப் பட்டு மாய்வேன்.

இருபத்தைந்து விஷு பண்டிகைகளை இன்று வரை நான் பார்த்துத் தீர்த்தாகி விட்டது. ஒருவரிடமிருந்தும் கைநேட்டப் பணம் வாங்கியவனல்ல நான். இன்று அதுபற்றி எனக்கு வருத்தம் எதுவும் இல்லை. நினைத்துப் பார்க்கும் போது, அப்படி வாங்காமல் இருந்ததே ஒரு பெருமை என்றுகூடத் தோன்றுகிறது.

என் தோழர்களெல்லாம் பட்டாசு கொளுத்தித் தள்ளும் போது நான் மட்டும் வீட்டினகத்தே அடைந்து கிடப்பேன். பொறாமையும் துயரமும் பொங்கி அடைந்து வரும். அவர் முன்னால் போய் நிற்கவே வெட்கமாக இருக்கும். நான் இத்தனை கேவலமாகப் போய் விட்டேனே!

அம்மாவிடம் கேட்டால் காசு கிடைக்காது. ரொம்பவும் வற்புறுத்திப் போனால் பிறகு என் முதுகிலேயே பட்டாசு வெடிக்கத் தொடங்கி விடும். ''இந்த அம்மாவுக்கு என்னிடம் கொஞ்சம் கூடப் பிரியம் கிடையாது'' என்று வேதனையுடன் மனசுக்குள் நூறு தரம் சொல்லுவேன்.

ஒரு விஷுப் பண்டிகையின் போது காசு செலவு இல்லாமலே பட்டாசு வெடிக்கும் வழியை நான் கண்டு பிடித்தேன். அப்ரான் தான் அந்த வழியை எனக்குக் கற்றுக் கொடுத்தவன். எங்கள் வீட்டுப் பசுக்களைக் கவனித்துக் கொள்ளும் வேலை அவனுக்கு. அவன்தான் அந்தநாளில் என் ஆத்ம நண்பன். அப்புவிடமும், குட்டனிடமும் சிநேகமாகவே தான் இருந்தேன். என்றாலும், மனசுக்குள் அவர்களிடமெல்லாம் எனக்குவிரோதம்தான்.

ஒரு பழைய திறவுகோலும், நீளமான ஒரு ஆணியும், அடுக்களையிலிருந்து தேடியெடுத்த தோணி மார்க் தீப்பெட்டியும் கொண்டு போய்க் கொடுத்தேன். உடனே அப்ரான் பட்டாசு வெடித்துக் காட்டினான். அவனுடைய 'டெக்னிக்'கைச் சுலபமாக நான் தெரிந்து கொண்டு விட்டேன். மாட்டுத் தொழுவத்தின் பின் பக்கத்தில் வைத்து நான் முதல் வெடி வெடித்த போது வேலியின் மறு புறத்திலிருந்து பலர் சேர்ந்து சிரித்த ஒலி என் காதில் ஒலித்தது. பார்த்தேன். சிரித்தவர்கள் அண்டை வீட்டுப் பிள்ளைகள். ஆனைப் பட்டாசு, சீனப் பட்டாசு எல்லாம் கைவசம் வைத்துக் கொண்டிருக்கும் பெரிய மனிதர்களின் சிரிப்பு அது! என்னால் பொறுக்க முடியவில்லை. கையில் ஒரு வெட்டரிவாள் இல்லாமல் போய் விட்டதே! அப்புவை– நோக்கிப் பரிசாக என் பழைய திறவுகோலை வீசி விட்டு – வேதனையோடு வீட்டுக்குள் போய்ச் சரண் புகுந்தேன்.

ஒரு பெட்டி நிறையப் பட்டாசு கிடைத்தால்! மறு வருஷம் விஷுப் பண்டிகை வந்த போது என் ஆசை இப்படிப் பெரிசாகப் பொங்கிப் பெருகிற்று.

இம்முறை பட்டாசு இல்லாமல் நான் அடங்கப் போவதில்லை!

அப்பா விஷுக்கு வந்தால் பிழைத்தேன். ஆனால் தாம் வரப்போவதாகத் தம் கடிதங்கள் எதிலும் அவர் குறிப்பிடவில்லையே. ஊருக்கு வர வேண்டும் என்கிற புத்தி அவருக்கு வரட்டும்! தேவி பகவதியை மனமுருகிப் பிரார்த்தித்தேன். அப்பா வருகிற வழியாய் இல்லை. ஒரு வேளை குழந்தைகளின் பிரார்த்தனைக்குத் தேவி செவி சாய்க்க மாட்டாளோ என்னவோ?

''விஷுவுக்குச் சின்ன மாமா வருவாரா அம்மா?''

''எந்தச் சின்ன மாமா?''

''போன வருஷம் இங்கே வந்தாரே, அவர்தான்!''

''எப்பவும் வரணும்னு இருக்கா?''

''பின்னே யாரு வரப் போறாங்க?''

எரித்து விடுவது போல் அம்மா என்னைப் பார்த்தாள்.

''போடா, தாண்டித் தொலைக்காதே!''

இனிமேல் ஏதாவது கேட்டால் உடம்புக்குத்தான் கேடு.

விஷு நெருங்கிக் கொண்டிருந்தது. இன்னும் நாலு நாட்கள் தான் .... நாளைக்குக்

குட்டனின் அண்ணு கோழிக்கோட்டிலிருந்து வந்து விடுவார்.

அப்புவுக்கு அவனுடைய புதிய அத்தானும் பட்டாசு வாங்கிக் கொடுக்கப் போகிறார்.

எனக்கு அத்தான் யாரும் வருகிற பாடா யில்லை.

பாப்புவின் கடையில் பட்டாசுகள் ஏராள மாக வந்திருக்கும் செய்தி காதில் விழுந்தது. குழந்தைகள் உள்ள வீடுகள்தோறும் வாணம் விடத் தொடங்கி விட்டார்கள்.

என் வீட்டிலிருந்து மட்டும்தான் ஒரு சத் தமோ சந்தடியோ எழவில்லை. இதில் அம்மா வுக்குக் கொஞ்சமாவது அவமானம் தோன்ற வில்லையா?

சந்தைக்குச் சென்று திரும்பி வந்த துப்ரன் பட்டாசுகளின் 'லாம்பின்'களை எனக்கு விளக்கிச் சொன்னான். புதுமாதிரி பட்டாசுக ளெல்லாம் ஏராளமாக வந்திருந்தன. "ஓலை வெடி, விஷ்ணுச் சக்கரம், இரண்டு ஆள் உயரம் மேலே போய் வெடிக்கும் பெரிய அவுட் வாணம்.... என்னென்ன வெல்லாம் இனுக. தெரியுமா ?"

"அதுக்கெல்லாம் நெறையக் காசு கொடுக்க வேண்டாமா துப்ரா?"

"ஆல்திலையே கொடுத்திட்டாத்தான் என்னுங்கறேன்?"

"ஓலை வெடி எப்படி?"

"என்னமா வெடிக்குது தெரியுமா? மின் னல் பட்டாசும் வந்திருக்கு. வெடிச்சாக் கண்ணைப் பறிச்சிடும்...."

"என்ன வெலெ?"

"சின்னத் தம்பிரானுக்கு அது வேணுமா? அடியேங் அப்பா! போய் வாங்கிட்டு வரு கிறேன்."

"என்ன வெலெ?"

"முக்காலணவுக்கு மூணு."

"பூவாணமோ?"

"ஒண்ணு ஒரணு. காலணவுக்கு ரெண்டும் வந்திருக்கு. அது நல்லாயில்லே சின்னத்தம்பி ரானே."

நான் யோசிக்கத் தொடங்கினேன். என் கையில் மட்டும் நாலணு இருந்தால்!

"வாங்க வேண்டாமா சின்னத் தம்பி ரானே?"

ஓர் அர்த்தமும் இல்லாமல் 'ம்' என்றேன் நான்.

"வடக்கு வீட்டுக் கொளந்தக நெறைய வாங்கியிருக்காங்க."

மீண்டும் நான் 'ம்' என்றேன்.

"எப்ப வாங்கணும் சின்னத்தம்பிரானே?"

தலை குனிந்து, என் ஆதரவற்ற நிலைமையை வெளிப்படுத்தினேன்: "எங்கிட்டே காசு இல்லே."

"தம்பிராட்டிட்டே கேக்கணும்."

"கேட்டா அம்மா தரமாட்டா."

என் கஷ்டத்தைத் துப்ரன் முழுக்க முழுக் கப் புரிந்து கொண்டான்.

"பெரிய தம்பிரான் வரமாட்டாரா?"

"வர மாட்டார்."

"நான் ஒரு காரியம் செய்யறேன்." துப்ரன் தான் அந்தத் தந்திரத்தை எனக்குச் சொல்லிக் கொடுத்தவன். அம்மா எங்கே பணம் காசு வைக்கிறள் என்று பார்த்துத் தெரிந்து



டாக்டர்: நீ மோட்டார் சைக் கிளில் சவாரி செய்யும்போதா உன் கால் எலும்பு முறிந்தது?
வந்தவர்: இல்லே... அதிலிருந்து கீழே விழுந்த பிறகுதான்!

கொள்ள வேண்டும். அப்புறம் யாரும் பாராதபடி நாலணு எடுத்துவிடவேண்டும்.

பட்டாசுக்காக இதுவும். இதற்கு மேல் என்ன வேண்டுமானாலும் நான் செய்யத் தயாரா யிருந்தேன். அம்மா பணத்தைப் பத்திரப்படுத்தி வைக்கும் இடத்தைக் கண்டு பிடித்தேன். எழுத்துப் பெட்டிதான் அந்த இடம். எழுத்துப் பெட்டியின் சாவி அம்மா இடுப்பிலே. நான் என்ன செய்வேன்?

கட்டிலுக்கு அடியே இருந்த பாத்திரங்கள், கடுகு போட்டு வைக்கிற தகர டப்பா-எல்லா வற்றிலும் தேடினேன். சில சமயங்களில் அவைகளிலிருந்து காலணு அரையணுக்கள் கண்டெடுக்க முடிந்ததுண்டு. ஆனால் எங்கு தேடியும் அன்று காசு கிடைக்கவில்லை. அம்மா வின் எழுத்துப் பெட்டி ஒரு சமயமாவது திறந்து கிடந்தால் தானே.

இரவில் உறக்கம் பிடிக்காமல், யோசித்து யோசித்து மண்டையைக் குழப்பினேன். போன வருஷத்து விஷுவைப் போல் இந்த வருஷத்து விஷுவும் பாழாகி விடக் கூடாது. அப்புவின் முன்னாலும், குட்டனின் முன்னாலும் நான் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும். உத்தி யோகம் பார்க்கும் அண்ணனைப் படைத்தவர் களின் பீத்தல் பெருமையை நான் காதில் வாங்கிக் கொள்ளப் போவதில்லை. அப்பா வுக்கு ஒரே பிள்ளையாக இருப்பவர்களைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை. எனக்கு ஓர் அத்தான் இல்லை என்பதற்காகவும் நான் சங்கடப்படப் போவதில்லை. இவை எதுவும் இல்லாமலே பட்டாசு வெடிக்க வேண்டும். நாளை எப்படி யும் நாலணுக் காசைக் கைவசப் படுத்தியே தீருவேன்.......

வீட்டுக்குள் வேறு எங்கே பணம் இருக்கும் என்று யோசித்துப் பார்த்த போதுதான், மாடியிலிருக்கும் உண்டியல் பெட்டியின் விஷ யம் நினைவுக்கு வந்தது.

மாடியில்தான் கொடிக் குன்றம் பகவதி வசித்து வருகிறாள். பல வருஷங்களுக்கு முன் னால், அதாவது என் பாட்டியின் அம்மா பட்டுச் சிற்றாடை உடுத்துத் திரிந்த காலத்

தில் தேவி பகவதி மச்சு வீட்டில் வந்து குடியேறி விட்டாள். எங்கள் குலதேவதை அவள். அந்த ஆத்தாள் எங்கள் வீட்டில் முகாமிட்ட பிறகு தான் குடும்ப நிலைமை படிப்படியாகச் சீர்ப்பட்டு வந்தது.

குளித்து விட்டுத்தான் மாடியில் யாரும் காலெடுத்து வைக்கலாம். மாடிக் கூடத்தின் முன்னால் போய் நின்று தொழுது வணங்கி விட்டுத்தான் வீட்டிலுள்ளவர்கள் வீட்டை விட்டு வெளியே கிளம்புவார்கள். மாடியில் பகவதி அம்மா இருக்கிறாள் என்பது ஒன்றரை வயசான குழந்தை நளினிக்குக் கூடத் தெரியும். அப்புக் குட்டன் பணிக்கர் வந்தால் ஏட்டைப் பரப்பித் தேவி எங்கள் வீட்டில் குடி கொண்டிருக்கும் விசேஷத்தைப் பற்றி நாலு வார்த்தை சொல்லாமல் போக மாட்டான்.

மாடிக்கூடத்தில் தேவியின் பிம்பமோ, வாளாயுதமோ கிடையாது. ஆனாலும் பக்தி சிரத்தையுடன் தான் மாடிக் கூடத்தின் முன்னால் போய் நிற்பார்கள். அங்கே தேவி பகவதியின் நிதியும், அந்த நிதியைப் பாதுகாத்து வரும் பூதத்தான்மார்களும் இருக்கிறார்கள். அந்த நிதியில் மனிதர் யாரும் கை வைக்கக் கூடாது. அவ்வளவு கண்டிப்பு.

பல வருஷங்களுக்கு முன் நடந்த அந்தச் சம்பவத்தைப் பாட்டி விவரிக்கும் போதெல்லாம் நான் மெய்சிலிர்ப்பேன். பாட்டி கேட்டுத் தெரிந்து கொண்ட சேதிதான் அது. புயலும், மழையும், இருளுமாக இருந்த ஓர் இரவில் என் பாட்டியின் பாட்டியும், அவளுடைய சின்ன மகளும் பயந்து நடுங்கிக்கொண்டிருந்தபோது யாரோ வாசல் கதவைத் தட்டினார்கள். 'யாரது' என்று கேட்டதற்குப் பயப்பட வேண்டாம்' என்று பதில் வந்தது. வாசலைத் திறந்து பார்த்தால் ஒருவரையும் காணோம்! மறு நிமிஷம் அடைத்துக் கிடந்த மாடிக் கதவு கொஞ்சம் கொஞ்சமாகத் திறந்தது. 'மகனே, பயப்பட வேண்டாம்: நான்தான்' என்ற பேச்சொலி கேட்டது. இரவில் பாட்டியின் பாட்டி சொப்பனம் கண்டாள். பட்டுடை தரித்து, கையில் வாளேந்திப் பகவதி அவளருகே நெருங்கி வந்து. தான் அவ்வீட்டு மாடியில் குடியேறி விட்ட சேதியை அறிவித்தாள்.

ஒருநாளில் ஒரு முறையேனும் இந்தக் கதையை யாரிடத்திலாவது சொல்லாமல் இருக்க மாட்டாள் பாட்டி.

மாடிக் கூடத்துக் கதவு திறக்கிற இடத்தில் தான் அந்த உண்டியல் பெட்டி வைக்கப்பட்டிருந்தது. உண்டியல் பெட்டி என்றால் வேறு ஒன்றுமல்ல, ஒரு பழைய பெருங்காய டப்பா தான். அதற்குப் பூட்டும் கிடையாது. டப்பா மூடியில் ஒரு சிறிய திறப்பு.

செவ்வாய்க்கிழமைதோறும் அதில் பாட்டி காலணா போடுவாள். தை மாதத்துச் செவ்வாய்க் கிழமைகளிலும், அது போல் வேறு விசேஷ தினங்களிலும் வீட்டிலுள்ள மற்றவர்களும் உண்டியலில் காசு போடுவார்கள். கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் 'குருதி திவஸ' விழாவன்று உண்டியல் பெட்டியைக் காலி செய்து வழிபாடு நடத்துவார்கள்.

மாடியிலிருந்து காசு எடுப்பது வெகு சுலபமான காரியம். அப்படிக் காசு எடுத்தால் தேவி பகவதி கோபிப்பாளோ என்று முதலில் சந்தேகம் வந்தது. யோசித்துப் பார்த்த போது தேவி கோபித்துக் கொள்வதில் நியாயம் எதுவும் இல்லை என்று தோன்றியது. மாடியில் பகவதியின் நிதியே இருக்கையில் இந்தச் சில்லறைக் காசுகளெல்லாம் எதற்கு? நிதி என்றால் என்ன என்பது எனக்குத் தெரியும். தங்கமும், வெள்ளியும் தான் நிதி. மாடியில் தங்கக் கட்டிகள் எவ்வளவு இருக்கிறதோ? கடுகளவு தங்கத்துக்கு நாலணா விலை இருக்கும் என்றல்லவா ராதா அன்று சொன்னாள். கடுகு எத்தனை சிறியது. தங்கக் கட்டியிலிருந்து பொடிந்து உதிரும் பொன் தூள் கிடைத்தாலும் போதுமே.

'அம்மாளின் காசைத் திருடப் போய்ப் பிடிபட்டு விட்டால் ஆபத்து. திருட்டுப் பட்டமும் கிடைக்கும். பகவதியின் துட்டைத் திருடுவதுதான் நல்லது. என்னை அடித்துத் தோலை உரிப்பதற்கென்று புளியம் மிளாறை எடுத்துக் கொண்டு வேலை மெனக்கெட்டுப் பகவதி வரப் போகிறாளா என்ன? நாலணாத்தானே? தங்கக் கட்டிகளே எனக்குச் சொந்தமாக இருப்பதால் இந்தக் காசு போனால் போகட்டும்' என்று விட்டு விடுவாள்.

பகவதியின் பணத்தை எடுத்து விடுவது என்று தீர்மானித்தேன். அதற்கு ஏற்ற வேளையையும் முன்னதாகத் தீர்மானித்தாகி விட்டது. சந்தியா வேளை. அம்மா குளத்துக்குக் குளிக்கப் போயிருக்கிறாள். பாட்டி வீட்டு முன் வாசலின் வடபுறத்தில், ஓர் ஓரத்தில் அமர்ந்து விலாஸினிக்கும், ரவிக்கும் கதை சொல்லிக் கொண்டிருக்கிறாள். சரியான சந்தர்ப்பம் அல்லவா இது.

# உங்கள் வீட்டில் இருக்கின்றதா?




ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்
குழந்தைகளின்
எல்லா வயிற்று
உபாதைகளுக்கும்.




ஸி. ஏ. க்யூ
சீதளம், ஜலதோஷம், வலிகள்
மற்றும் ஜுரங்களுக்கு.



எக்ஸ்-மா
படை, வண்ணரப்புண் மற்றும்
எல்லா சரும கோளாறுகளுக்கும்.

**ஸ்பென்ஸர் & கம்பெனி லிட்.**

ரசாயன மருந்து தயாரிப்பாளர்கள்

I/153 மவுண்டு ரோடு, சென்னை-2. இந்தியா

SC-28-3A

நான் மாடிக் கூடத்துக் கதவைத் திறந்து கைகூப்பித் தொழுது, திருநீறு தொட்டுக் கொண்டேன். பூனை போல் பதுங்கி உள்ளே நுழைந்து ஓசைப்படாமல் தகர டப்பாவைத் திறந்தேன். நீல விளக்கின் வெளிச்சத்தில் நாணயங்கள் தெரிந்தன. காலணுக்களே அதிகம். ஓரணு நாணயமும் கொஞ்சம் கிடந்தது. அந்த நாணயக் கூட்டத்தினிடையே வெள்ளென்று சிரித்துக் கொண்டு ஒரு கால் ரூபாய் நாணயம். அந்தக் குட்டிப் பயலைக் கையிலெடுத்துக் கொண்டு, பெட்டியை இருந்த இடத்தில் அப்படியே திருப்பி வைத்து விட்டுப் பக்தி சிரத்தையுடன் வெளியே வந்தேன்.

மறுநாள் பகக்களைப் பற்றிக் கொண்டு போகத் துப்ரன் வந்தான். பெருமிதத்துடன் அவனருகே சென்றேன். நிஜார்ப் பையில் இருந்த கால் ரூபாயைக் கையிலெடுத்துக் காட்டியபடி நான் சொன்னேன்:

''பாத்தியா?''

''எங்கிருந்து கிடைச்சிது சின்னத்தம்பிரானே?''

''எங்கிருந்தோ கிடைச்சிது.''

''பட்டாசு வாங்க வேண்டாமா சின்னத் தம்பிரான்?''

''ம்....ம்...''

துப்ரனுக்குத் தெளிவான திட்டங்கள் வகுத்துக் கொடுத்தேன். பட்டாசு வாங்கி யாரும் பாராதபடி என்னிடம் அவன் கொடுக்க வேண்டும். நான் அதை மாடியிலோ அல்லது வேறு எங்காவதோ மறைத்து வைத்துக் கொள்வேன். மேல் பக்கமிருக்கும் வயல் வெளிக்கு எடுத்துச் சென்று தான் பட்டாசு வெடிக்கலாம். துப்ரனும் இடையிடையே ஒவ்வொன்று வெடித்துக் கொள்ளலாம்... விஷயம் அம்மாவுக்குத் தெரிந்து விட்டால், அவளிடம் சொல்ல, ''குட்ட கொடுத்தான். அவனுக்கு நிறையப் பட்டாசு வந்திருக்கிறது'' என்று ஒரு புளுகும் தயார் செய்தாகி விட்டது!

துப்ரன் சொன்னபடியே செய்தான். ஒரு காலி எவரெடி பாட்டரிப் பெட்டி நிறையப் பட்டாசுகள். சீனப் பட்டாசும், ஓலை வெடியும் இருந்தன. இரண்டு பூவாணமும், ஒரு மத்தாப்புவும் வேறு இருந்தன.

என் வாழ்க்கையில் முதன் முறையாக ஒரு விஷுப் பண்டிகையைக் கோலாகலமாகக் கொண்டாடப் போகிறேன். அப்புவின் வீட்டில் ஒரு பட்டாசு வெடித்தால் அதற்குப் பதில் சொல்வதுபோல் இங்கே நானும் ஒன்று வெடிப்பேன். பாவம், போன வருஷம்போல் இந்த வருஷமும் தீப்பெட்டியும், பழைய திறவுகோலும் தேடிக் கொண்டு திரிவான் வாஸு என்றுதான் அவர்கள் எண்ணிக் கொண் டிருப்பார்கள்.

பட்டாசுகளைக் கண் குளிரக் கண்ட பிறகு தான் துப்ரனிடம் உண்மையைச் சொன்னேன். ''நீ யார் கிட்டேயும் சொல்ல மாட்டியே...?''

''சொல்ல மாட்டேன் சின்னத் தம்பிரானே?''

''நிச்சயமா?''

''சத்தியம் பண்ணு.''

''கண்ணு ரெண்டாணே. கழுத்தை அறுத்தாலும் சொல்ல மாட்டேன்.''



''எனக்கு 180 ரூபாய்க்கு டெலிபோன் பில் அனுப்பி யிருப்பதை நான் ஆட்சேபிக்கிறேன்!''

''தங்கள் ஆட்சேபனை என்ன என்று தெரிவிக்க முடியுமா?''

''என் வீட்டில் டெலிபோனே இல்லை என்பது என் முதல் ஆட்சேபனை!''

பிறகுதான் என் ரகசியத்தை அவனிடம் வெளியிட்டேன். நான் மாடியிலிருந்துதான் காசு எடுத்தேன். துப்ரன் நினைப்பது போல் நான் திருடிய காசு அம்மாவுடையதல்ல, பகவதியின் காசு அது.

நான் சொன்னதைக் கேட்டு என்னைப் பாராட்டிப் புகழ்வதற்குப் பதில் துப்ரன் திகைத்துப் போய் நின்றான்.

''தம்பிராட்டியின் காசை எடுக்கிறது பாவம் சின்னத் தம்பிரானே....''

''என்ன பாவம்?'' எனக்குக் கோபம் வந்துவிட்டது.

''தம்பிராட்டி காசு.....''

துப்ரனின் பேச்சில் பயமும் பீதியும் கலந்திருந்தன. நான் அரண்டு போனேன். ஏதோ கோளாறு நேர்ந்து விட்டது.

என்னைவிட உலக அனுபவம் உள்ளவன் துப்ரன் என்பது எனக்குத் தெரியும். அவன் எல்லாவற்றையும் விளக்கிச் சொன்னான். பகவதி பொல்லாத ஆங்காரக்காரி. கோபம் வந்துவிட்டால் தன் துர்த்தேவதைகளை யெல்லாம் அவள் கட்டவிழ்த்து விட்டு விடுவாள். பிறகு நாடெங்கும் வைசூரியும், கொள்ளை நோயும்தான். பகவதியின் எந்தச் சொத்தையும் தொடக் கூடாது. சாத்தான சேரியைச் சேர்ந்த பறங்கோடனுக்குப் பகவதியால் பைத்தியம் பிடித்த கதையைத் துப்ரன் கூறினான். பறங்கோடனைக் கண்டால் ஊரிலுள்ளவர்களுக்கு நடுக்கம். பகவதிக் கென்று நேர்ந்துவிடப்பட்டிருந்த கோழியைத் திருடியதால்தான் அவனுக்குப் பைத்தியம் பிடித்தது. பகவதிக்கென்று ஏற்பட்ட எந்தப் பொருளிலும், எவரும் கை வைக்கக் கூடாதாம்.

''நாலணு எடுத்தா என்ன துப்ரா?''

''நாலணுவா? நாது சல்லிக் காசுகூட எடுக்கப்படாது.''

''எடுத்தவங்களுக் கெல்லாம் பைத்தியம் பிடிக்குமா துப்ரா?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. சின்னத் தம்பிரானே....''

இதைக் கேட்டுச் செய்வதறியாமல் கலங்கினேன் நான்.

''தெரிந்திருந்தால் இதெல்லாம் நான் வாங்கிட்டு வந்திருக்கவே மாட்டேன்....''

''என்ன பண்ணுவேன் துப்ரா?''

''தம்பிராட்டிக்குக் கோபம் வந்தால் ரத்த பலி வாங்காமல் விடமாட்டா. நான் என்னத்தைச்சொல்ல? சாத்தன் மகள் குஞ்ஞுக்கி எப்படிச் செத்தா தெரியுமா....?''

எனக்கு அழுகை வந்தது. எடுத்த நாலணாவை மீண்டும் பெட்டியில் போட்டு விடவும் வழி இல்லை. நாலணா எடுத்தால் பகவதி கோபித்துக் கொள்வாள் என்பது எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் இந்தக் காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கவே மாட்டேன். இனிமேல் என்ன செய்வது?



''பாகிஸ்தானில் ராணுவ ஆட்சி நடந்திண்டு வாது பார்த்தேளா!''

''முன்னே பாக்கிஸ்தானாக இருந்தது. இப்ப துப்பாக்கிஸ்தானாக இருக்கு. அவ்வளவுதானே!''

சாப்பிடப் போய் உட்கார்ந்தபோது பசியே இருக்க வில்லை. மனசு நெருப்பாய்த் தகித்தது. சாத்தான சேரி பறங்கோடன், குஞ்ஞுக்கி ஆகியோர் உருவம் மனத்தை விட்டு அகல மறுத்தது.

எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டால் என் கதி என்னவாகும்? ரத்தம் கக்கிக் கக்கிச் சாவது எத்தனை பெரிய வேதனை! நான் பைத்தியக்காரனாகவோ, செத்துப் போகவோ மாட்டேன். பைத்தியம் பிடித்தால் கொஞ்சமும் எனக்குப் புத்தி இருக்காது. புத்தி கொஞ்சம் குறைந்து போய் விட்டதால் வரும் துன்பத்தைத்தான் குஞ்சராமன் சாரின் வகுப்பில் நான் அனுபவிக்கிறேன். பைத்தியக்காரனை எல்லாரும் அடிப்பார்கள். கல்லை வீசி எறிவார்கள். செத்துப் போய்விட்டால் இந்த உலகத்தோடு ஒருவித உறவும் இல்லாமலாகிவிடும்.

''பகவதீ! என்னைக் காப்பாற்று...''

யாருமில்லாத ஓர் இடத்தில் போய் நான் உட்கார்ந்தேன். கண்களில் நீர் நிறைந்து வழிந்தது. ஏன் இந்த ஆபத்தில் போய்க் குதித்தேன் என்று மனசுக்குள் நூறு முறை கேட்டுக் கொண்டேன். பட்டாசு எனக்கு வேண்டவே வேண்டாம் போல் இருந்தது. அப்புவும், குட்டனும் பட்டாசு வெடிக்கும்போது காதில் விரலை வைத்து அடைத்துக் கொண்டு போய் விடலாமே. சாயங்காலம் பசுக்களைப் பற்றிக் கொண்டு துப்ரன் வருவதை எதிர்பார்த்து வீட்டு வாசல் படியில் காத்து நின்றேன். துப்ரன்தான் இந்த ஆபத்திலிருந்து நான் தப்ப வழி சொல்ல வேண்டும். வேறு யாரிடமும் இந்த விஷயத்தை நான் வெளியிடமுடியாது.

''துப்ரா! நீ சொல்லேன்.''

''என்ன வேணும் சின்னத்தம்பிரானே?''

''பகவதி தேவி என்னை.....''

அழுகையை அடக்க நான் சிரமப்பட்டேன்.

''சின்னத் தம்பிரான் அழப்படாது.''

''என்ன செய்யணும் துப்ரா?''

''அழ வேண்டாம். வழி இருக்கு.''

''என்னது? என்ன வழி?''

துப்ரன் தீவிரமாக யோசித்தான்.

''பட்டாசு வெடிச்சாத்தானே பாவம். நான் அதைக் கொண்டு போய்த் தூர எறிஞ்சிடறேன்.''

''அப்படிச் செஞ்சிட்டா அப்புறம் பாவமொன்னும் இல்லியே?''

''இல்லே.''

''நிச்சயம்தானா துப்ரா?''

''நிச்சயம்தான்.''

அப்பாடா. எனக்கு நிம்மதி உண்டாயிற்று. பட்டாசுகள் வைத்திருந்த பெட்டியைத் துப்ரனிடம் ஒப்படைத்த போது என் மனப் பாரம் குறைந்து விட்டது போல் இருந்தது. ஆபத்திலிருந்து தப்பிவிட்டேன். துப்ரன் நான் கொடுத்த பட்டாசுப் பெட்டியை வாங்கிக் கொண்டான். போகும் போது அவன் சொன்னான்: ''இப்பவே கொண்டு போய் வீசி எறிஞ்சிடறேன். சின்னத் தம்பிரான் மாடிக்குப் போய்த் தப்புச் செஞ்சதுக்குப் பகவதிகிட்டே மன்னிப்புக் கேட்கணும்.''

வீட்டு மச்சு முன்னால் போய் நின்று கொண்டு மனப்பூர்வமாக நான் பிரார்த்தித்துக் கொண்டேன்.

''பகவதீ, நான் செஞ்சது தப்பு. என்னை ஒண்ணும் பண்ணாதே......''

பைத்தியமும் சாவும் என்னைப் பொறுத்த வரையில் இனிமேல் அத்தனை பெரிய பிரச்னைகள் அல்ல.

இரவில் நிலவொளி புரளும் முற்றத்தை நோக்கியபடி நான் உட்கார்ந்திருக்கிறேன். இந்தச் சம்பவத்தை மனத்திலிருந்து துடைப்பதற்கு நான் முயன்று கொண்டிருக்கையில், மேல் பக்கத்திலிருந்து சீனப் பட்டாசுகள் படபட-வென்று வெடிக்கும் ஒலி கேட்டது.

குட்டன் வீட்டிலிருந்தோ, அப்புவின் வீட்டிலிருந்தோ அல்ல. மேற்புறத்துக் குன்றின் மேல் துப்ரனுடைய குடிசை மட்டும்தான் இருக்கிறது. ஆனால் அங்கிருந்து பட்டாசுச் சத்தம் கேட்க வழியில்லை. அவனுக்கு எங்கிருந்து பட்டாசு கிடைக்கப் போகிறது?

பக்கத்து வீட்டுக் குழந்தைகளின் கோலாகலம் ஒலிக்கிறது.

இதோ மீண்டுமொரு விஷுப் பண்டிகை தான் வந்திருக்கிறது.




**பின்னியின் ஆர்ட்வின் அணியுங்கள்.**
**இப்போது அது புதிய 'மடிப்புக்கலையாத' முறையில் தயாரிக்கப்படுகிறது.**

கடினமான வேலைக்குப் பிறகு பார்த்தால், காலையில் புதிதாக அணிந்த ஸூட் கசங்கி, நலிந்து இருப்பது சகஜம். ஆனால் பின்னியின் ஆர்ட்வின் அப்படி ஆவதில்லை. தயாரிப்பில் புகுத்தப்படும் ஒரு புதுவகை கசங்கல் தவிர்க்கும் முறை அதை நாள் முழுதும் நலுங்காமல் பாதுகாத்து, புதுப் பொலிவுடன் விளங்கச் செய்கிறது.

ஆர்ட்வின் பலவகை டார்க் ஷேட்களில் கிடைக்கிறது.

ஆர்ட்வினுடன் அணிவதற்கேற்றது பின்னியின் லஸ்டவின் ஷர்ட்டிங். வெள்ளை, செக், கலர், காக்கி ரகங்களில் கிடைக்கிறது.




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற கடைகளிலிருந்து கண்ட்ரோல் விலைக்கே வாங்குங்கள்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

JWT/BC/AN—1712a

# காணாமல் போன



# கடிதங்கள்

சென்னை முதல் அமைச்சர் திரு காமராசர் அவர்களுக்கு, பால்கார மன்னரு எழுதிக் கொண்டது:

**செ**ன்னை நகரத்துக்குக் குடி தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்க நீங்கள் வெளியிட்டுவரும் யோசனையை நான் கேள்விப்பட்டு அப்படியே சந்தோஷப்பட்டுப் போனேன். ''காவேரியிலிருந்து மெள்ள ஒரு வாய்க்கால் வெட்டி அதன் மூலம் சென்னைக்குத் தண்ணீர் கொண்டு வரலாம்; இது முடியாத காரியமல்ல'' என்ற யோசனையைத்தான் கூறுகிறேன். இதை எப்படியும் நீங்கள் நிறைவேற்றினால் எனக்கு மிக மிக உதவியாக இருக்கும்.

சொட்டுச்சொட்டாக வரும் குழாய்த் தண்ணீரை நம்பி எப்படி நான் தொழில் நடத்த முடியும்? அதன் வாடையும் சகிக்க முடியவில்லை. குவளையில் உள்ள சிறு பாலின் குணத்தையும் அது மாற்றி விடுகிறது. எனவே, நல்ல காவேரித் தண்ணீர், இந்தக் குழாய்களில் வந்தாலொழிய வியாபாரம் படுத்துக் கொள்ளும் போல் இருக்கிறது. கொண்டு வருவதைச் சீக்கிரம் கொண்டு வாருங்கள் என்று சொல்லவே இதை எழுதுகிறேன்.



கைப் பாலைக் குவளையில் கொண்டு போய் வீடுகளில் கொடுக்கும் போது இப்போதே சிலர், 'என்னப்பா இது! சுத்த காவேரித் தண்ணியாக இருக்கே!' என்று கூறுகிறார்கள்: ''காவேரித் தண்ணீர் இங்கே ஏது? இன்னும் வரவில்லையே அது!'' என்று சொன்னால் நம்ப மாட்டேன் என்கிறார்கள்.

இதே சமயத்தில், பணச் செலவு பற்றி நீங்கள் வெளியிட்ட கவலையையும் கவனித்தேன். பணத்தைத் தண்ணி மாதிரி செலவு பண்ணக் கூடாதுன்னு சொல்லுவாங்க. ஆனால் நாங்களோ தண்ணியைக் கூடப் பணம் மாதிரித்தான் செட்டாச் செலவு பண்ணறோம். புதுதில்லி சர்க்கார் கடன் வாங்கியோ, வரி போட்டோ பொதுப் பணத்தைத் தண்ணீரைப் போல் வாரி இறைக்கிறார்களே! அதிலே ஒரு வாளியை எடுத்து நம்ம பக்கம் ஊத்தச் சொல்லிக் கேட்டுப் பாருங்கள்.

எப்படியும் நீங்கதான் காவேரித் தண்ணி கொண்டு வந்து எங்க வயித்துலே பால் வார்க்கணும்.

இப்படிக்கு
பால்கார மன்னரு

*

சட்ட சபையில் தூங்கி விழுந்த பஞ்சாப் மந்திரி திரு ராம்சரணுக்கு ஒரு கும்பகர்ணன் எழுதிக் கொண்டது:

**ப**ஞ்சாப் மந்திரி சபையின் பெயர் ஏற்கெனவே நாட்டில் பலவிதங்களிலும் பிரசித்தியடைந்து வருகிறது. இவை போதாது என்று நீங்களும் சமீபத்தில்

---

திரு கிருஷ்ணமூர்த்தி ராவ் அவர்களின் புதல்வி சௌ. அகிலா பாய்க்கும் திரு கே. நாகராஜனுக்கும் திருப்பதியில் திருமணம் நடைபெற்றது



திரு சீதாபதி அவர்களின் மருமான் திரு சுப்பிரமணியத்துக்கும் சௌ. சாந்தாவுக்கும் திருவனந்தபுரத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது.



ஒரு விளம்பரம் தேடிக் கொடுத்த செயலைப் பாராட்டத்தான் வேண்டும்.

சில தினங்களுக்கு முன்னால், சட்டசபையில் தாங்கள் மெய்மறந்து தூங்கிக்கொண்டிருந்தீர்களாம். இதைக் கண்ணுற்ற எதிர்க் கட்சி அங்கத்தினர் ஒருவர் தங்களுடைய நிலைமையைச் சபாநாயகருக்கு எடுத்துரைத்ததோடு, தங்கள் தோள்பட்டையைக் குலுக்கி உறக்க நிலையிலிருந்த தங்களை எழுப்பி விட்டாராம். தாங்கள் திடுக்கிட்டு எழுந்ததும் சபையில் பலத்த சிரிப்பொலி எழுந்ததாகக் கூறப்படுகிறது. இருந்தாலும், இந்த எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் பொல்லாதவர்கள்தான்! இந்தத் தடவை தேர்தலில் எல்லா ராஜ்யங்களிலுமே வந்திருக்கும் எதிர்க் கட்சிக்காரர்களைப் பார்த்தால், இலேசானவர்களாகத் தோன்றவில்லை. எப்போதுமே இனி நீங்களும் நம்மைப் போன்றவர்களும் விழிப்புடன் இருந்தால்தான் காலம் தள்ளலாம் போலிருக்கிறது! ஆனாலும் பிறருக்குத் தெரியாமல் தூங்குவதற்குப் பல வழிகள் இருக்கின்றன. ஒரு புஸ்தகத்தையோ, நியூஸ் பேப்பரையோ வைத்துக்கொண்டு படிப்பது போல் முகத்தை மூடிக் கொண்டு தூங்கலாம். இது ஒரு வழி. இன்னும் இம்மாதிரிப் பல வழிகள் இருக்கின்றன. கேவலம் நாலு பேருக்கு நடுவில் ரகசியமாகத் தூங்கக் கூடத் தெரிந்து கொள்ளாத



நீங்கள் எப்படி மந்திரிப் பதவியை நிர்வகிக்கப் போகிறீர்களோ என்பதை நினைக்கும் போது எனக்குத் தூக்கம் கூட வர மாட்டேன் என்கிறது!

குறட்டை விஷயமாகவும் ஓர் எச்சரிக்கை! நீங்கள் வெளியிட்ட குறட்டையின் சத்தம் தான் உங்களைக் காட்டிக் கொடுத்து விட்டதாகத் தெரிகிறது. குறட்டை விடுவதென்று ஆரம்பித்தால் என்ன மாயம் பண்ணினாலும் ரகசியத் தூக்கம் போட முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன், ஜாக்கிரதை!

இப்படிக்கு
ஒரு கும்பகர்ணன்

## பம்பாயில் நடிகர் திலகம்

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அயல் நாடுகளுக்குப் பிரயாணமானதையொட்டி, பம்பாயில் பாரதி கலா மன்றத்தினர் அவர் பிரயாணம் வெற்றிகரமாக அமைய வாழ்த்தி ரேடியோ கிளப்பில் உபசாரமளித்துக் கௌரவித்தனர். தமக்குக் கிடைத்த வரவேற்புக்கு திரு கணேசன் நன்றி கூறினார். மகாராஷ்டிர சமூக நல மந்திரி ஸ்ரீமதி நிர்மலா ராஜே பான்ஸ்லே இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்தார். படத்தில் பாரதி கலாமன்றத்தின் தலைவரும் இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைகளின் ஜெனரல் மானேஜருமான திரு டி. எஸ். கிருஷ்ணன் அவர்கள் அமர்ந்திருப்பதையும் காணலாம். நகரின் பிரமுகர்கள் பலரும்



வட இந்திய நட்சத்திரங்களும் விழாவுக்கு வந்திருந்தனர். ஷண்முகானந்த சபா, பாரதீய கலா மன்றம் ஸ்தாபனத்தாரும் நடிகர் திலகத்துக்கு மாலை சூட்டிக் கௌரவித்தனர். மன்றத்தின் காரியதரிசி எல்லோருக்கும் நன்றி தெரிவித்தார்.

தெலுங்குக் கதை

# கானல் நீர்

கல்யாண சுந்தரி ஜகந்நாத்

''முன்பெல்லாம் இந்தச் சத்திரத்துக்கு வருகிறவர்கள் போகிறவர்கள் ஏராளம். எப்பொழுதும் 'ஜே ஜே' என்றிருக்கும். அந்தக் காலத்திலே பயணம் என்றால் எடுத்துக் கட்டிக்கொண்டு புறப்பட வேண்டியிருக்கும். சாலை ஏது, பாதை ஏது நடைப் பயணம்தான். இல்லையானால் இரட்டை மாட்டு வண்டி கட்டிக் கொண்டு புறப்படுவார்கள். இப்போத்தான் சந்திராயி கால்வாய்க்குப் பக்கத்திலேயே பொதுச் சாலை விழுந்துவிட்டது. பயணம் போகும் சனங்கள் நினைத்த போது நினைத்த ஊருக்குப் போய்விட முடிகிறது. பஸ்ஸும் காரும் ஆட்டோவுமாகப் பறக்கின்றனவே! ஆனால் அந்தக் காலத்திலே இப்படிச் சத்திரம் சாவடியிலே தங்கித் தங்கித்தான் பயணம் போவார்கள். அதனால்தான் எப்பவும் கூட்டம் அப்படி 'ஜே, ஜே' என்றிருக்கும்.

''அந்தக் காலத்திலே கண்களுக்கெட்டிய தூரம் இந்தப் பக்கத்திலே மரமோ மட்டையோ, செடியோ கொடியோ எதுவுமே இருந்ததில்லை. இந்தக் குளங்களும் கிணறுகளும்கூட ஏதோ சமீபத்தில் ஏற்பட்டவைதான். அந்தக் காலத்திலே இந்த வட்டாரமே வறண்டு கிடந்தது. சித்திரை வைகாசியிலே அனல் பறக்கும். குடி தண்ணீர் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருந்தது. ஆடு மாடுகளுக்குத் தண்ணீர்காட்ட ஒரே ஒரு குட்டை உண்டு. அதுவும் சேற்றுக் குட்டை. கோடை காலத்திலே பாளம் பாளமாக வெடித்துவிடும். குடி தண்ணீருக்கு இரண்டு கல் நடந்து போகணும், சந்திராயி பாலத்துக்கு. அந்தக் காலத்து அனல் காற்றை நினைத்துப் பார்த்தால் இன்றைக்கு அடிக்கிற வெயிலும் ஒருவெயிலா என்று தோன்றுகிறது!

''இந்த ஊரிலே ஒரு பெரிய பணக்காரர். ரதாங்கபாணி என்று பெயர் ராமகிரிப்பாடு நகரத்திலே குடியிருந்தார். ஆள் மகா லோபி; கஞ்சமகாப் பிரபு. குடியிருந்ததோ பெரிய மாளிகை. என்ன பணம் இருந்து என்ன புண்ணியம்? சௌக்கியமாக வாழத் தெரியவில்லை. வட்டி வியாபாரம் செய்து வந்தார். பொல்லாத கண்டிப்புக்காரர். தம்பிடி விட்டுக் கொடுக்கமாட்டார். கடவுளே வந்து கெஞ்சினாலும் அவர் பிடித்த முயலுக்குமூன்று கால்தான். பின்னைகுட்டிகளைப் பட்டினி போட்டாவது வட்டியைக் கட்டியே தீர வேண்டும் என்று கெட்டிபோடுவார். தயை தாட்சிண்யம் தானம் தருமம் – ஊஹூம், எதுவுமே அவரிடம் பேச்சு மூச்சு காட்டக் கூடாது.



''தச்சு வேலை செய்யும் சலமையாவைத் தெரியுமோ, இல்லையோ? அவன் ஒரு சமயம் தெருக்கூத்து ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தான். அவரிடம் சந்தா கேட்க அவன் போன பொழுது, 'யார் பற்றிலே எழுதிக் கொண்டு தரச் சொல்கிறாய்?' என்று கேட்டாரே, பார்க்கணும்! கடைசியிலே ஆள் தம்பிடின்னு தம்பிடி தர வில்லை. சுற்றுப்புறத்திலே இருக்கிற ஏழை எளியவர்களுக்கு ரதாங்கபாணி என்றால் சிம்ம சொப்பனம், போங்களேன்!

''அந்த நாளில் நான் அவரிடம்தான் குமாஸ்தாவாக இருந்தேன். நான் இந்த ஊருக்கு வந்த புதுசிலே 'தம்பி, இந்த நாடகப் பிழைப்பு இன்றைக்கு இருக்கும், நாளைக்குப் போகும். இந்த இரண்டுங்கெட்டான் பிழைப்பை நம்பிக் கெடாதே!' என்று எனக்கு எடுத்துச் சொன்னவரே அவர்தான்.

இப்படிக் கல்நெஞ்சக்காரராக இருந்த ரதாங்கபாணியே ஒரு சமயம் மனம் உருகிப் போய் விட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன் அவரும் நானும் ஒரு நாள் வயற்பக்கம் போயிருந்தோம். அங்கே ஒரு காளைக் கன்று ஈ உபத்திரவம் தாங்காமல் அலை பாய்ந்து கொண்டிருந்தது. கழுத்துப் பட்டையிலே உட்காருகிற ஈயை வாலாலே அடித்து ஓட்ட முடியவில்லை. கொம்பாலும் தேய்க்க முடியவில்லை. அது படுகிற சங்கடத்தைப் பார்த்த ரதாங்கபாணி, 'பார்த்தாயா சுப்பண்ணா! வாயில்லாத ஜீவன் படுகிற கஷ்டத்தை! சொல்ல வாயில்லை; சொறிந்து சிக்கக் கையில்லை. இது உராய்ந்து கொள்வதற்கு ஒரு பாறை, மொட்டை மரம் ஏதாவது இருக்கக் கூடாதா?' என்றார்.

''இதைச் சொல்கிற பொழுது இன்னொரு விஷயம் நினைவுக்கு வருகிறது. அன்றைக்குத்தான் இந்த ஊருக்கு மக்குக் கல்லி வந்தாள். அவள் மக்கு –கிக்கு ஒன்றும் இல்லை. இருந்தாலும் ஏனோ அந்தப் பெயர் அவளுக்கு நிலைத்துவிட்டது. ஆறு கல்லுக்கு அப்பால் உள்ள பட்டிக்காட்டைச் சேர்ந்தவள் அவள். தாய் தகப்பன் கிடையாது; வேறு நாதியும் இல்லை. பிழைக்கவும் வழியில்லை. அதோடு அவளுக்கு இரண்டு கைகளுமே முடம். தோள் பட்டைக்குக் கீழே இரண்டு விரற்கடை நீளம்தான் கை தொங்கிக் கொண்டிருந்தது. தோள் பட்டையில் ஒரு பையைத் தொங்கவிட்டிருப்பாள். அதில் ஒரு சின்னக் கரண்டி, சாப்பிடுவதற்கு. பிச்சை யெடுத்துப் பிழைத்து வந்தாள் அவள்.

'' 'எறும்புக் கம்பத்திலே ஏன் நாயாய் அவதரிச்சே' என்று பாட ஆரம்பித்தாள். சிரிக்காதீங்க. அப்படின்னு 'இரும்புக் கம்பத்திலே ஏன் ஐயா அவதரித்தாய்?' என்று பொருள். அவளுக்குப் பாட வந்த விதம் அப்படி.

'' 'பிறப்பே இப்படியா? இல்லை. நடுவிலே வந்த விபத்தா?' என்று ரதாங்கபாணி அவளைக் கேட்டார்.

"'பிறப்பே இப்படித்தானுங்க, சாமி!' என்று கூறிய கங்கி, 'அதாவது எசமான், இது எங்க அப்பனாலேதான் வந்ததுங்களாம். எங்கப்பாரு சோற்று மூட்டையை அடிக்கடி பருந்துங்க அடிச்சிக்கிட்டுப் போயிடுமாம்.... அதனாலே எங்கப்பாருக்குப் பருந்துகளென்றாலே ஒரு காட்டம். ஒரு தரம் பருந்து ஒன்று புதர் மறைவிலே குந்தியிருந்ததாம். எங்கப்பாரு ஓசைப்படாமல் போய் 'லபக்'குன்னு அதைப் பிடிச்ச அதன் சிறகுகளைப் பின்னுக்கு இழுத்து ஒடிச்சுட்டாராம். எங்க அம்மா எத்தனையோ சண்டை பிடிச்சும் அவரு கேட்கலையாம். அப்போ நான் எங்கம்மா வயிற்றிலே இருந்தேனாம். அப்பாரு அப்படிச் சிறகை ஒடிச்சதனாலேதான் நான் இப்படி முடமாப் போயிட்டேனாம்' என்றான்.

"'அப்படின்னா நீ எப்படித்தான் பொழைக்கிறே?' என்று கேட்டாள் சேஷம்மா. சேஷம்மா ரதாங்கபாணியின் மனைவி.

"'மவராசங்க தர்மம் செய்துக்கிட்டிருக்காங்களோ, என்னைப் போல வகையில்லாதவங்க வாழ்ந்துக்கிட்டிருக்காங்களோ; என்னாலான சின்ன வேலையை நான் செய்து கொடுத்தால் சில பேரு தலை சீவி முடி கூடப் போட்டு விடறாங்க.'

"'அப்படி உன்னாலே என்னடி வேலை செய்யமுடியும்?' என்று கேட்டாள் சேஷம்மா.

"'அதென்னம்மா அப்படிக் கேட்டு விட்டீங்க? எனக்குக் கையில்லேன்னு கால்கூடவா இல்லே?' என்றான் கங்கி.

"அதற்கு அப்புறம் அவன் வேலை செய்து காட்டியிருக்கிறான், பாருங்கள்! கால் விரல்களாலேயே அரிசியை நோம்பித் தாத்திச் சுத்தம் செய்து கொடுத்தான். என்ன சுருக்கு! என்ன சாமர்த்தியம்! கால் விரல் இடுக்கிலே ஒரு குச்சியை வைச்சிண்டு நாம் கையாலே செய்கிற வேலைகளையெல்லாம் காலாலேயே செய்து காண்பித்துவிட்டான். நாங்கள் எல்லாரும் அப்படியே அசந்து போய் விட்டோம். அதற்குப் பின் சேஷம்மா தினமும் அவனுக்கு ஒரு வேளை சோறு போட்டு வந்தாள். கங்கியும் அவர்கள் வீட்டுத் திண்ணையையே தன் இருப்பிடமாக்கிக் கொண்டான். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலோ, வீடுகளிலோ, பிச்சை எடுக்கிறது. அவர்கள் வீட்டுத் திண்ணையிலே வந்து படுக்கிறது என்று வைத்துக் கொண்டான்.

"சேஷம்மா பழங்காலத்து மனுஷியா? அதனாலே நல்லதோ, கெட்டதோ அவளைப் பற்றி யாரும் எதுவும் சொல்ல மாட்டார்கள்.

"உண்மையைக் கேட்கப் போனால், சலமையாவுக்குக் கோப–தாபம் ஏற்படுவதற்கு ரதாங்கபாணியின் இந்தப் பைத்தியக்காரத் தர்மமும் ஒரு பெரிய காரணமாயிற்று. 'அக்கம் பக்கத்தில் இருக்கிற நம் வயிற்றில் அடித்து, எங்கிருந்தோ வந்த இந்த முடத்துக்குத் தானம் பண்ணுகிறார் ஐயா. தர்மம் பண்ணுகிறார்' என்று நாலு பேர்கள் நடுவிலே ஒரு நாள் சலமையா சொன்னான்.

"அப்படிப் பார்க்கப் போனால் இந்தச் சலமையா மாத்திரம் என்ன பெரிய மனிதன்? அவனும் தன்னிடம் இருக்கிறதை வட்டிக்கு விட்டுச் சம்பாதிக்கிறவன்தான். என்ன சம்பாதித்து என்ன புண்ணியம்? சீட்டு சூது, முதலிய கெட்ட பழக்கம் படிந்தது. அதில் அவன் வட்டியிலே சம்பாதித்த பணம் மட்டும் போகவில்லை; அவன் தச்சுத் தொழிலில் சம்பாதித்து வந்த வரும்படியும் அதோடு சேர்ந்து போயிற்று. அவன் சம்பாதிப்பது அவனுடைய சொந்தச் செலவுக்கே காணுவ இல்லை. ஏதோ அவன் தமையனார் பெரியவராக இருந்து குடும்பத்தைக் காப்பாற்றி வந்தாரோ பிழைத்தானோ? சலமையாவுக்கு நாடகம் நடத்துவது, சொல்லித் தருவது, வேஷம் போடுவது, இதிலே எல்லாம் ஓர் ஈடுபாடு. அது மட்டுமா? சிலம்பம்–குஸ்தியெல்லாம் வேறு தெரியும். ஓர் உடற்பயிற்சி நிலையமேற்படுத்தி இளவட்டங்களுக்குக் குஸ்தி–சிலம்பம் சொல்லிக் கொடுத்



தான். இப்படி ஓடியது அவன் வாழ்வு. சலமையாவுக்கும் பணக்கார ரதாங்கபாணிக்கும் ஜன்மப் பகையாகிவிட்டது.

''இதற்குக் காரணங்கள் இல்லாமற் போகவில்லை.

''சலமையாவின் தமையனாரை எப்போதோ ஒரு தரம் நாய் கடித்ததாம். சலமையாவின் சீடர்கள் பாணாத் தடியை எடுத்துக் கொண்டு ராஸ்ன பாலத்திலிருந்து அந்த நாயைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஊருக்குள் ஓடிய அந்த நாய் ரதாங்கபாணியின் சாவடிக்குள் நுழைந்து விட்டது. அதை எப்படி அடிக்கிறது? ரதாங்கபாணியின் சாவடி ஆயிற்றே! ரதாங்கபாணியின் சாவடி ஊர் நாய்களுக்கெல்லாம் ஒரு கோட்டை மாதிரி! நாய்களைப் பிடித்துப் போகிற முனிசிபாலிடி வண்டி இருக்கிறது. பாருங்கள்! அது கண் காணாத தூரத்தில் வருகிறது என்று எப்படித்தான் இந்த நாய்களுக்குத் தெரியுமோ! ஓடிப்போய் ரதாங்கபாணியின் சாவடிக்குள் அடைக்கலம் புகுந்துவிடும். அந்தச் சமயம் அவர் சாட்சாத் சிபிச் சக்கரவர்த்தியேதான். முனிசிபாலிடி ஆட்களை அதட்டி மிரட்டி அனுப்பி விடுவார். நல்லதோ, கெட்டதோ, இது அவர் பழக்கம். இளைஞர் படை எப்ப எப்பவோ யார் யாரையோ கடித்த நாய்களின் மீதுள்ள வஞ்சத்தை யெல்லாம் இந்த நாயின் மீது தீர்த்துக் கொள்ளப் பார்த்தது. ஆனால் அது நடக்கவில்லை. ரதாங்கபாணி மீண்டும் குற்றவாளியானார் சலமையாவின் கண்களிலே. அதனால் இளைஞர் படைக்கும் எதிரியானார்.

'அந்த வருஷம் தீபாவளி வந்தது. அன்றைக்குக் கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது தீமை தாழ்ந்து நன்மை தலை தூக்கும் என்று பெரியவர்கள் சொல்வார்கள் இல்லையா? சில சமயம் நேர்மாறாக நடப்பதும் உண்டுதான்.

''பக்கத்து வீட்டிலே மத்தாப்பு வெடியெல்லாம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று ரதாங்கபாணியின் மகனும் பிடிவாதம்பிடித்து அழத் தொடங்கி விட்டான். அதனாலே அவரும் தாமே மத்தாப்பு வெடிகள் செய்ய ஆரம்பித்தார். வேடிக்கையாகத் தம் கைகளினாலேயே அவற்றைத் தயாரித்தார். போதாத காலத்துக்குக் கைத்தடியும் கருநாகம் ஆகும் என்று ஒரு பழமொழி சொல்வார்களே, அது மெய்யாகவே ஆகிவிட்டது. வெடி மருந்து கலக்கும் பொழுது அவர் கைகளிலேயே வெடித்து விட்டது. பக்கத்தில் இருந்த அவருடைய ஒரே மகன் அதற்குப் பலியாகி விட்டான். அவரை ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

'' 'என்ன பாழாகப் போன கருமித்தனம்!' என்று உலகம் அவரைப் பழித்தது.

''ரதாங்கபாணிக்கு இரண்டு முன்னங்கைகளும் உதவாமல் போய் விட்டன. விறைத்து மரத்துப் போன கைகளோடு வீடு வந்து சேர்ந்தார் ஆஸ்பத்திரியிலிருந்து

''யோகியானாலும் போகியானாலும் அவன் அவன் செய்த கர்மப்படி வாழ்க்கைப் பயணத்தைத் தொடரத்தானே வேண்டியிருக்கிறது? மகன் செத்து, தாம் முடமானாலும் எப்படியோ இந்த உலகத்திலே அவரும் தம் வாழ்க்கையை ஓட்டித்தான் ஆகவேண்டியிருந்தது!

''அப்போது பிடித்தது அந்தக் குடும்பத்துக்குச் சனியன்! குடும்பம் க்ஷீணிக்கத் தொடங்கிற்று. வியாபாரம் அனைத்தும் மாறுமுகம் காட்டலாயிற்று. எப்படித்தான் அத்தனை சொத்தும் போச்சோ? எல்லாம் கற்பூரமாகக் கரைந்து விட்டது. திரும்பவும் குடும்பத்தைப் பழைய நிலைக்குக் கொண்டு வர ஆனைப்பட்ட பாடுபட்டார். எத்தனை பகீரதப் பிரயத்தனம் செய்து என்ன, ஒரு பயனும் ஏற்பட வில்லை. சொந்தக்காரங்களாவது கொடுத்துதவினாங்களா? ஊஹூம். யானை விழுந்தால் தானாகத்தானே எழுந்திருக்கணும் என்று பேசாமல் இருந்து விட்டார்கள். கடைசியிலே பிழைத்து நின்றது குக்கிராமத்திலே நடந்து வந்த வட்டி வியாபாரம்தான். அதுவும் சிறு சிறு கடன்கள்.

''அந்தக் கோடைக்கு வெயில் கொளுத்து கொளுத்து என்று கொளுத்தி விட்டது. கட்டாந்தரையெல்லாம் கனலைக் கக்கியது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை கானல் நீர் தான். வெயில்வேளையில் சாலையோடு போகிற சனங்கள் வெப்பம் தாளாமல் நாவறண்டு மயங்கி விழுவார்கள்

''இருந்தாற்போலிருந்து ஒரு நாள் ரதாங்கபாணி என்னிடம் வந்து, 'இரண்டு தண்ணீர்ப் பந்தல் வையுங்களேன், சுப்பண்ணா!' என்றார் சரி என்றேன்.

''என் மகனும் நானும் இரண்டு தண்ணீர்ப் பந்தலையும் பார்த்துக்கொண்டோம். நாங்கள் படுகிற சிரமத்துக்கு எங்களுக்கும் ஏதோ கட்டும்படியாக ரதாங்கபாணி வருமானத்துக்கு ஏற்பாடு பண்ணியிருந்தார். இரவு முழுவதும் இரண்டு மைல் நடந்து போய்க் காவடி கட்டி நானும் என் பிள்ளையுமாகத் தண்ணீர் கொண்டு வந்து நிரப்புவோம். பகல் முழுதும் வந்து போகிற வழிப் போக்கர்களுக்கு லோட்டாவிலே மொண்டு மொண்டு தண்ணீர் ஊற்றுவோம். கோடை முடிகிற வரை இதுதான் எங்களுக்கு வேலை.

'' சும்மா தர்மத்துக்குத் தண்ணீர் ஊற்றினோம் என்று நினைக்காதீர்கள். 'ஒரு குவளைத் தண்ணீருக்குக் காலணா வாங்கணும்' என்று சொல்லியிருந்தார் ரதாங்கபாணி.

''உயிர் போகிறாற்போல் நா வறண்டுவிட்டால், மயக்கம் போட்டு விழுகிறாற் போல நிலைமை ஏற்பட்டு விட்டால், சனங்கள் காலணாக் காசைப் பார்ப்பார்களா? காசு கொடுத்தே தண்ணீர் வாங்கினார்கள்.

''கைகால் நல்லாயிருந்த வரையில் வட்டிக்கு வட்டி வாங்கிப் பலகுடும்பங்களைப் பாழ்படுத்தினான். இப்போ உயிருக்கு மன்றாடும் மக்கள் ஒரு வாய் தண்ணீர் கேட்டால் காலணாக் கொடுக்கணுமாம். கேட்டீங்களா ஐயா அநியாயத்தை? ஆண்டவன் கையை ஒடித்தானே, அப்பொழுதாவது புத்தி வந்ததா? ஆண்டவன் அளித்த தண்ணீரை இவன் என்ன ஐயா விலைக்கு ஊத்துகிறது?" என்றான் சலமையா ஊர்ப் பெரியவர்களிடம்;

'''இந்தக் காசு தங்குமா? இந்த அநியாயம் அடுக்குமா?' என்றார்கள் ஊரிலுள்ள பெரியவர்கள்.

'''போகிற பொழுது என்னத்தைப் பெரிசாகக் கட்டிக் கொண்டு போகப் போகிறான்?' என்றார்கள் இதைக் கேட்டவர்கள்.

"சுற்றுப் புறத்து வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் இடாத சாபம் இல்லை. வாயில் வந்தபடியெல்லாம் ஓயாது தூற்றினார்கள்.

"ஆனால் ரதாங்கபாணி அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

"எத்தனையோ ஆண்டுகள் ஓடின. ஒவ்வொரு சித்திரை — வைகாசியிலேயும் எங்கள் குடி தண்ணீர் வியாபாரம் வெகு மும்முரமாக நடந்தது.

"'கொடுக்கச் சக்தியில்லாதவர்களை காக கொடுக்கும்போது கையிலே நாலு காசு இருக்கிறவர்கள் கட்டாயம் கொடுத்துத்தானே ஆக வேண்டும்? காசைக் கீழே வைத்தால்தான் அவர்களுக்குத் தண்ணீர் ஊற்றலாம்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார் ரதாங்கபாணி.



"நம் நாட்டுப் பெண்ணுக்கும் மேல் நாட்டுப் பெண்ணுக்கும் என்ன வித்தியாசம்?"

"தனக்குப் பிடிக்காத துணி ஒன்றைக் கணவன் வாங்கி வந்து விட்டால் நம் நாட்டுப் பெண் துணியை மாற்றி விடுவாள். மேல் நாட்டுப் பெண் கணவனை மாற்றி விடுவாள்!"

"அதோடு வழிப்போக்கர்கள் தங்கள் நிலைக்கேற்றவாறு ஒரு குவளைத் தண்ணீருக்கு ஓரணா இரண்டணா தரவேண்டும் என்றுகூட விதித்திருந்தார். பட்டணம் போய் நெல்லை விலைக்குப்போட்டுவிட்டு இடுப்பில் பணத்தைமுடிந்து கொண்டு வருகிறவர்களுக்குத் தண்ணீர் ஒரு விலை. கறிவேப்பிலை விற்றுவிட்டு வருகிறவர்களுக்கு வேறு விலை. இப்படியெல்லாம் ஆளை எடை போட்டுப் பணம் வாங்கும்படி எங்களுக்கு உத்தரவிட்டிருந்தார்.

"அப்படி நெல் போட்டு விட்டுத் திரும்பி வந்துகொண்டிருக்கிற நேரத்தில்தான் சலமையாவின் தமையனுக்கு அப்படியாயிற்று. அன்றைக்கு அந்த வருஷத் தண்ணீர்ப் பந்தலை நாங்கள் 'ஏறு கடைசி' செய்து கொண்டிருந்தோம். தண்ணீர்ப் பானைகளைக் கழுவிக் கவிழ்த்துக் கொண்டிருந்தோம். தண்ணீர்ப் பந்தலுக்கு வெளியே தண்ணீர் குட்டையாகத் தேங்கியிருந்தது.

"வழக்கம்போல் பட்டணத்துக்குப் போய் நெல் போட்டு விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தவர்கள் வண்டிகளை நிறுத்தினார்கள். சலமையாவின் அண்ணனும் நிறுத்தினார். தண்ணீரைக் கண்டதும் அவர் வெறி நாயைப் போல ஊளையிடத் தொடங்கிச் சிறிது நேரத்தில் பிராணனையும் விட்டார். முந்தி அவரை நாய் கடித்திருந்ததில்லையா? கடித்தது வெறி நாயாக இருந்தால், கடிபட்ட மனிதனுக்கும் வெறி பிடித்து விடுமாம். தண்ணீரைக் கண்டால் வெறி அதிகமாகி நாய் போலவே கத்துவானாம். தாகம், தாகம் என்று தண்ணீரைக் குடித்தோ கத்திக் கத்தி நாவறண்டு போயோ நாய் கடித்தவர்கள் செத்துக்கூடப் போய் விடுவது உண்டாம்! சலமையாவுக்குத் தன் அண்ணன் அப்படி இறந்தது எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போல் ஆகிவிட்டது.

"'அந்தப் பாழாய்ப் போகிற தண்ணீர்ப் பந்தல் அங்கே இருந்திராவிட்டால் எங்கள் அண்ணன் கண்ணிலே அந்தத் தண்ணீர் பட்டிருக்காதில்லையா? அந்தப் பாவி ரதாங்கபாணி எங்க அண்ணனையும் வாயிலே போட்டுக் கொண்டு விட்டான் ஐயா?' என்று சலமையா ஒப்பாரி வைத்தான்.

"அவனுடைய இந்தப் பிரசாரத்தினாலே ஊரில் பாதிக்குமேல் ஜனங்கள் சலமையாவின் பக்கம் சாய்ந்து விட்டார்கள். கொஞ்சமோ நஞ்சமோ, கடன்பட்டவர் கடன்பட்டவர்தானே? பார்க்கப் போனால் சலமையாவேகூட ரதாங்கபாணிக்குக் கடன்பட்டவன்தான். அவனுடைய வீடும் வாசலும் ரதாங்கபாணியிடம் அடமானமாக இருந்தன. அவன் நிலையிலே இன்னும் எத்தனையோ பேர்கள் இருந்தார்கள். அந்த வருஷம் கொளுத்தின வெயிலிலே பயிரும் பற்றி எரிந்தது; ஜனங்களின் வயிறும் பற்றி எரிந்தது. இப்படியெல்லாம் எரியவே, வயலில் இருந்த கோரைப் புல்லுக்கும் தீ வைத்தார்கள் ஜனங்கள். தீ தன் செந்நாக்குகளைத் நீட்டிக் கொண்டு வானளாவ உயர்ந்தது. சுற்று வட்டாரம் முழுவதும் தகித்தது. ரதாங்கபாணி தமது வீட்டு மெத்தையிலிருந்து இந்தக் காட்சியைப் பார்த்தார். உடனே கூலியாட்களை ஏவி ஜனங்களுக்கும் கால் நடைகளுக்கும் உபயோகமாக இருந்த குட்டையிலிருந்து நீர் மொண்டு அந்தத் தீயை அணைக்கச் சொன்னார்.

"கோரைக்கு நெருப்பு வைப்பது எதற்கு, தெரியுமா? நெருப்பின் சூடு தாளாமல் கோரைப் புல்லுக்குள் ஒளிந்திருக்கும் ஆமைகளையெல்லாம் வெளியே வரும். உயிர் என்றால் எந்தப் பிராணிக்குமே வெல்லம்தானே? ஆனால் அவற்றைப் பிடித்து இவர்கள் விற்பார்கள். இது ஒரு பிழைப்பு ஜனங்களுக்கு.

"ரதாங்கபாணி நெருப்பை அணைக்க ஏற்பாடு செய்யவே ஜனங்களுக்கு ஆத்திரம் குமுறிக் கொண்டு வந்தது. ஆசாமி இந்தப் பிழைப்பிலும் மண்ணைப் போடப் பார்க்கிறாரே என்று மனம் குமைந்தனர்.

"'இப்படியா ஒருவன் வயிற்றில் அடிப்பான்?'

"'உயிர் போகிறவன் வாய்க்கு ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இனி கிடைக்கப் போவதில்லை!'

"'இனி தண்ணீருக்கு ஆலாய்ப் பறக்க வேண்டியதுதான்!' இப்படியாகப் பலர் பலவிதமாகப் பேசலாயினர்.

"'குடி தண்ணீருக்குக் கூடக் காசு வாங்கும் இந்தக் கொடும்பாவியைக் கலியுகமாக இருக்கக் கொண்டுதானே இந்தப் பூமி சுமந்து கொண்டு நிற்கிறது!' என்றான் சலமையா.

"அதற்கு அடுத்த கோடையிலே அந்த வட்டாரத்தில் யாரோ ஒரு புண்ணியவான் கிணறுகள் வெட்டத் தொடங்கினார். ஒரு

பெரிய குளம் வெட்டக் கூட ஏற்பாடு செய்தார். ஒட்டர்கள் தலை வெடிக்கிற வெயிலில் நெற்றி வியர்வை நிலத்தில் சொட்டக் கிணறு வெட்டிக் கொண்டிருந்தார்கள். இந்தத் தர்ம கைங்கரியத்தை ஒட்டர்கள் தலைவன் மங்கண்ணு குத்தகை எடுத்துச் செய்து கொண்டிருந்தான்.

''மக்களுக்கெல்லாம் ஒரே சந்தோஷம்; பண்டிகை கொண்டாடுவது போலிருந்தது. 'இனி ரதாங்கபாணியின் ஆட்டபாட்டமெல்லாம் ஓய்ந்துவிடும். இத்தனை நாட்களும் அவன் வைத்ததுதானே சட்டமாக இருந்தது! எத்தனை நாளைக்குத்தான் ஒருவன் தப்பான வழியிலேயே சம்பாதித்துக் கொண்டிருக்க முடியும்? முடிந்தால் இரண்டு போகங்கள் கூட நாம் வெள்ளாமை செய்வோம். இனி மேல் இவனிடம் யார் போய்க் கை நீட்டப் போறாங்க கடன் கேட்டு?' என்று குதூகலப் பட்டுக் கொண்டார்கள்.

''அந்த மாசத்திலே சலமையா ரதாங்கபாணியிடம் வாங்கி யிருந்த கடனுக்கு 'ஈரங்கி' போட்டிருந்தார்கள் கோர்ட்டிலே.

''குளம் வெட்டுகிற புண்ணியவான், - யாரோ அந்த மகானுபாவன் — கேட்ட நேரத்துக்குத் தங்கு தடையில்லாமல் பணம் கொடுத்து வந்தான். அதனால் வேலை கன ஜோராக நடந்து வந்தது. குளம் வெட்டினவன் சத்திரம் கட்டினான் மரம் செடி வைத்தான். ஜனங்களுக்கு எவ்வளவு சௌகர்யம் செய்யலாமோ. அவ்வளவும் செய்தான்.

''இப்போது ஜனங்கள் ரதாங்கபாணியைப் பகிரங்கமாகவே திட்டத் தொடங்கி விட்டார்கள். 'கங்கையாட்டமா குளம் வழிந்து நிற்கிற பொழுது இந்தப் பாவிகிட்டப் போய் யார் காசு கொடுத்துத் தண்ணீர் வாங்குவாங்க?' என்று கூறிப் பெருமிதப்பட்டார்கள்.

''சலமையாவின் ஆஸ்திபாஸ்திகளையெல்லாம் ஏலம் போடும்படியாகக் கோர்ட்டில் உத்தரவாயிற்று. ஏலத் தேதியும் நெருங்கிக் கொண்டு வந்தது.

'''குஞ்சும் குளுவானுமாக இவன் யார் நிழலிலே போய்த் தங்க முடியும்?'' என்று அக்கம் பக்கத்து ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

'' 'இருக்கிற கொஞ்ச நஞ்சம் நிலத்திலே இரு போகம் பயிர் செய்யலாம் என்று மனக் கோட்டை கட்டிக்கிட்டிருந்தேனே! குழந்தைங்க வாய்ச் சோற்றையே பிடுங்கி ஏலம் போட்டுவிடுவான் போலிருக்கிறது ஐயா இந்தப் பாவி!' என்று புலம்பித் தள்ளினான் சலமையா.

''காது அறுந்த ஊசியும் கடை வழி வாராது காண்' என்று சொல்லியிருக்கிறார் பட்டினத்தார். இவரு என்னத்தைக் கட்டிக் கொண்டு போகப் போகிறாராம்?' என்றான் கிராமத் தலையாரி.

'''இந்தப் பாவி ரதாங்கபாணி இருந்தால் என்ன செத்தால் என்ன? நமக்கு இனிமேல் இவன் சங்காத்தியமே வேண்டாம். இவன் கொடுக்கிற காசும் வேண்டாம். விற்கிற தண்ணீரும் வேண்டாம்!' என்றனர் உடற்பயிற்சி நிலையத்தைச் சேர்ந்த பையன்கள்.

''' என்ன பார்த்துக்கிட்டிருக்கீங்க? இன்றைக்குச் சலமையாவுக்கு ஆகிற கதிதானே நாளைக்கு நமக்கும் வரும்?'' என்றார்கள் கடன் பட்டவர்கள்.

'ஊரிலே கட்சிகள் ஏற்பட்டன. கும்பல் கும்பலாகச் சேர்ந்து சதியாலோசனை நடத்தினார்கள். துவேஷம் வலுத்தது.

''உடற்பயிற்சி நிலையத்து இளைஞர்கள் எல்லோரும் தலைக்குத் தலை தோன்றியபடியெல்லாம் ஒன்றாகப் பேசத் தொடங்கி விட்டார்கள். ஏல நாள் மிகவும் நெருங்கி விடவே. துவேஷம் விஷமாக வளர்ந்தது.

''சேஷம்மாவின் ஆதரவில் இருந்த மக்கு கங்கியைக் கூடக் கண்ட இடத்தில் எல்லாம் பசங்கள் கல்லெடுத்து அடிக்க ஆரம்பித்தார்கள்.

''இது இப்படி இருக்க, கிணறு தோண்டும் வேலை முடியும் தறுவாய்க்கு வந்து விட்டது. இன்றைக்கோ நாளைக்கோ முழுசாக முடிந்து விட்டால், ரதாங்கபாணியின் தண்ணீர் வியாபாரமும் வட்டித் தொழிலும் கூட முறிந்துவிட வேண்டியதுதானே?

''அன்றைக்கு அமாவாசை. உடற்பயிற்சி சாலை களை கட்டியிருந்தது. கையிலே பாணாத் தடிகளுடனும் இலேசாகப் போதை மயக்கத்துடனும். இள வட்டம் உணர்ச்சி வேகத்தில் மிதந்து கொண்டிருந்தது.

''ரதாங்கபாணியை அன்றைக்குத் தீர்த்துக் கட்டி விடுவதென்று தீர்மானித்தார்கள். அப்புறம் யோசித்துப் பார்த்தால் அவன் வீட்டுக்குத் தீ வைப்பதே நல்லது என்று தோன்றியது. சலமையா தலைமைப் பதவி ஏற்றான். ராக்ஷஸ ரதாங்கபாணியின் வீட்டைக் கொளுத்தி, அவன் ஒருத்தன் ஒழிஞ்சு போனானால், எத்தனை பேர் சுகப்படுவாங்க?

''பக்கத்து ஊருக்குப் போய்த் திரும்பி வந்த மக்கு கங்கி அந்தப் பக்கமாக வந்தாள். அவர்களுடைய திட்டம் தற்செயலாக அவள் காதில் விழுந்தது. கலவரமாகவே, பதுங்கி, மரத்தின் நிழலில் ஒளிந்து குறுக்கு வழியில் இறங்கினாள். அறுவடைத்தாள் காலை முள்ளாக்குத்தி ரத்தக் காயமாக்குவதையும் பொருட்படுத்தாமல், பட்டணத்துக்கு ஓடி வந்தாள், ரதாங்கபாணியிடம் செய்தியைச் சொல்ல.

''அவர்கள் போட்ட திட்டம் என்னவென்றால், சில பேர் மண்ணெண்ணெய்ப் புட்டியும் தீப் பெட்டியுமாக ரதாங்கபாணியின் வீட்டுப் புழக்கடைப் பக்கம் வந்து காத்திருக்க வேண்டியது. சலமையா வாசற் பக்கத்துக் கதவைத் தாழ் போட்டு, ரதாங்கபாணி வெளியே ஓடி விடாமல் செய்ய வேண்டியது. அதற்கப்புறம் வீட்டுக்குத் தீ வைக்க வேண்டியது என்பதேயாகும்.

''அன்றைக்கு நடந்த நிகழ்ச்சி இன்றைக்கும் என் கண்ணெதிரில் அப்படியே நிற்கிறது. அன்றைக்கு நானும் ரதாங்கபாணியின் வீட்டில் இருந்தேன், பற்று வரவு கணக்குப் பார்த்துக் கொண்டு. இரவுச் சாப்பாடு கூட ஆகி விட்டது.

''உள்ளே இருந்த எங்களுக்கு யாரோ ஒரு பெரிய பாறாங்கல்லாலே கதவை 'மொக்கு, மொக்கு' என்று இடிக்கிற மாதிரி சத்தம் கேட்டது. யாராயிருக்கும் என்று நாங்கள் தயங்கினோம். ஊரெல்லாம் விரோதிகளாயிருந்தால் சட்டென்று கதவைத் திறந்து விடக்கூடாது என்று தீர்மானித்தோம்.

நாங்கள் ஏன் வாய் திறக்கிறோம்? மூச்சுத்தான் ஏன் விடுகிறோம்? சொடுக்கிய பேன் மாதிரி 'கப்சிப்' என்று இருந்தோம். ஆனால் அந்தக் கதவை இடிக்கும் சத்தம் மட்டும் நிறுத்தவே யில்லை.

''கடைசியில் 'எதற்கும் கடவுள் இருக்கிறார். ஒருவருக்கு நாலு பேராக இருக்கிறோம். கதவைத்தான் திறந்து பார்ப்போமே!' என்றார் ரதாங்கபாணி.

''நானும் என் பின்னாலே வீட்டில் இருந்தவர்களும் எழுந்து வந்து மெதுவாகக் கதவைத் திறந்தோம். யார்? கங்கியா? அடிமரம் வெட்டிச் சாய்ந்தாற் போல எங்கள் காலிலே வந்து விழுந்தாள். எல்லோரும் வாசற்படி பக்கம் கூடினோம்.

''நாங்கள் நல்ல தூக்கத்தில் இருக்கிறோம் என்று எண்ணி எங்களை எழுப்ப நினைத்திருக்கிறாள் கங்கி. குரல் கொடுத்துக் கூப்பிடலாம் என்றாலோ......? பின்னால் வந்து கொண்டிருக்கும் குரோதக் கும்பல் அவள் தலையைத் தவிடு பொடியாக்கி விடலாமே! அப்புறம் அவள் எங்களிடம் சொல்லவந்ததை எப்படிச் சொல்வது? அவளுக்கோ கைகள் கிடையாது. அதனாலே தன் தலையினாலேயே வாசற்கதவுகள் இரண்டும் உடைகிற மாதிரி முட்டிக்கொள்ள ஆரம்பித்து விட்டாள். எங்களுக்கு அந்தச் சங்கதி தெரிந்தால்தானே? அவள் தலையில் பெரும் காயமாகி ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது.

''எங்களுக்கு முன்னால் கதவைத் தாழிட வந்த சலமையாவினால் எங்கள் பார்வையில் படாமல் ஓடிப் போய் விட முடியவில்லை. வாசற்படியில் அப்படியே சிலையாகச் சமைந்து நின்று விட்டான்.

''ஒரு கணத்தில் தன்னைச் சமாளித்துக் கொண்டு 'நீ இங்கே எங்கே வந்தே? அதுவும் இந்த ராத்திரி வேளையிலே?' என்று என் பக்கத்தில் நின்று கொண்டிருந்த மங்கண்ணாவை வியப்புடன் கேட்டான் சலமையா.

'' 'பணம் வாங்கிப் போக வந்தேன்! வேறு எதுக்கு?' என்றான் மங்கண்ணா.

'' 'உனக்கு என்ன. போதாதகாலமா? இந்தப் பாவியிடம் கடன் வாங்க வந்திருக்கியே! கண்டிராக்ட் எடுத்தியே கிணறு குளம் வெட்ட. அதிலே பணம் கிணம் மிச்சப் படலியா? ஆற்றின் பழைய வெள்ளத்தைப் புதுவெள்ளம் அடிச்சிட்டுப் போன கதையாக, கண்டிராக்ட் எடுக்கப் போய்க் கைப்பணத்தையும் தோத்துவிட்டு வந்து நிற்கிறியா?' என்று கேட்டான் சலமையா.

''' அப்படியொண்ணும் இல்லை. இன்னிக்கு நாளைக்கு எங்கள் வேலை முடிஞ்சுடும். கண்டிராக்ட் பணம் முச்சூடும் கொடுக்கல்லே. அப்பொப்போ கொடுத்து வந்தார். இன்னிக்கு வா, பைசல் பண்ணிப்பிடுவோம்னு வரச் சொன்னார். அதற்காக வந்தேன். கணக்குப் பார்த்துக்கிட்டிருந்தோம்' என்றான் மங்கண்ணா.

''சலமையாவுக்குத் தலைகால் புரியவில்லை. அப்படியே ஸ்தம்பித்து நின்றான். சில கணங்களுக்கு வாயிலிருந்து பேச்சு எழும்பவேஇல்லை. அப்புறம் எப்படியோ தன்னைச் சுதாரித்துக் கொண்டு 'ஆமாம், நீ வெட்டுகிற இந்தக் கிணறு, குளம் இதெல்லாம் யார் தருமம்?' என்று கேட்டான்.

## கொலை, திருத்து!



நேற்றைய பத்திரிகையின் விமரிசனப் பகுதியில் ''இந்தச் சங்கீத வித்வானை அடித்துக் கொல்வதற்கு ஆளே இல்லை'' என்று வெளிவந்ததைத் தயவுசெய்து ''...சங்கீத வித்வானை அடித்துக்கொள்வதற்கு ஆளே இல்லை'' என்று திருத்தி வாசித்துக்கொள்ள வேண்டுகிறோம்!

---

'' 'வேறு யாருடையதாயிருக்கும்? எல்லாம் இந்த ரதாங்கபாணி ஐயாவினுடையதுதான். என்னிடம் பல வருசமாகச் சொல்லிக்கிட்டிருந்தாரு. இந்த வருசம் தான் வேளையும் கூடிச்சு. வேலையும் முடிஞ்சிச்சு!' என்றான் மங்கண்ணா.

சலமையாவுக்கு வாயிலே வார்த்தைகள் கூட வரவில்லை.

' 'வேலையோடு வேலையாகக் கூப்பிடு தூரத்துக்குக் கூப்பிடு தூரம் ஏழெட்டுச் சுமைதாங்கி நடச் சொன்னாரு. ஆடு மாடுகள் உராய்வதற்குச் சௌகரியமாயிருக்கட்டும் என்று. வழிப்போக்கங்க, சுமையை இறக்கி வைக்கக் களைப்பாறவும் வசதியாயிருக்கும். இல்லையா? — நெனைச்சதற்கு மேலே செலவு ஓடிப் போச்சு! இவரு சொன்ன சொல்லுக்குப் பின் வாங்காத மனிதராயிருந்ததனாலே எல்லாம் சரியாப் போச்சு! எங்கள் மனசு நோகாமல் சந்தோஷமாயிருக்கும்படியாகக் கூலி கொடுத்தாரு!' என்றான் மங்கண்ணா.

''அம்மன்கோயிலைக் கண்டால் அரைகாத தூரம் விலகிப் போகிற சலமையா இரு கைகளையும் எடுத்துக் கும்பிட்டான். அப்படியே ரதாங்கபாணியைப் பார்த்தபடி நின்றான். விளக்கு ஒளியில் அவன் கண்களில் நீர் முத்திட்டு நின்றது பளிச்சென்று தெரிந்தது.''

'என்னையும் என் குடும்பத்தையும் கூட ரதாங்கபாணி தமது உயிலில் மறக்கவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! இந்தச் சத்திரமே அவர் கட்டி விட்டதுதான். மக்கு கங்கியையும் அவர் மறக்கவில்லை.

''அதோ படுத்திருக்கா, பாருங்க. அவள் தான் கங்கி. கண் விழிக்கிற நேரம் தான்.

''கையிலே வேலை. உளியும் சுத்தியும் போட்டி போட்டுக் கொண்டு உதவின. இந்த மரச்சிலை சலமையா செய்ததுதான். ஆமாம்! ரதாங்கபாணியினுடைய சிலையேதான்!

தமிழாக்கம்: ரா. வீ

# நொண்டிக் கதை

ர. சு. நல்லபெருமாள்

மத்தியானம் இரண்டு மணி யிருக்கும். கோயிலில் நல்ல கூட்டம். கோடி அர்ச்சனை தடபுடலாக நடந்துகொண் டிருந்தது. கொஞ்சம் களைப்பாறக் கூட்டத்தை விட்டு விலகிக் கோயில் கோபுரத்துக்குள் ஏறினேன். மூன்றாவது தட்டில் கை ஒடிந்த கற்சிலை ஒன்று வடக்கு மூலையில் நின்றது. கோயிலுக்குள் ளிருக்கும் உற்சவ விக்கிரகத்துக்கு மூக்கு இல்லை; கோபுரத்துக்குள்ளிருக்கும் இந்தச் சிலைக்கும் கை இல்லை! வேடிக்கைதான். அந்த இடம் குளுமையாக இருந்தது. துண்டை விரித்துப் படுத்தேன். அந்த நொண்டிச் சிலையையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''அஹோ, வாரும் பிள்ளாய், பெருமாளே!'' சிலை பேசியது. நான் திகைத்தேன். சிலையை வெறித்துப் பார்த்தேன். அது, கரக் கம்பம் சிரக் கம்பம் செய்து, அட்டகாசமாய்ச் சிரித்துக் கொண்டு பேசியது.

''ஆனால் கேளுமய்யா பெருமாளே! கோயில் சுவாமிக்கு மூக்கு இல்லை, எனக்குக் கைஇல்லை. ஏன்?''—இப்படிப் பெரிய எழுத்து விக்கிரமாதித்தன் கதைப் பாணியில் ஒரு கேள்வியைக் கேட்டு விட்டு என்னைப் பார்த்தது சிலை. நான் விடை தெரியாமல் விழித்தேன்.

''கதை சொல்கிறேன். கேட்கிறீரா?'' என்றது. நான் தலையை அசைத்தேன்.

''முன்னொரு காலத்தில் இந்தக் கோயிலில் இருந்த ஓர் அர்ச்சகருக்குப் பத்துப் பெண் குழந்தைகள் இருந்தன. ஆண் குழந்தையே இல்லை. பதினோராவது தடவை அர்ச்சகரின் மனைவி கர்ப்பமானாள். ஒரு நாள் அர்ச்சகர் சுவாமிக்குப் பூஜை செய்து கொண்டிருந்தார். அப்போது அங்கு ஒருவன் வந்து அர்ச்சகருக்குப் பதினோராவது பெண் குழந்தை பிறந்திருக்கிறது என்று சொன்னான். அர்ச்சகர் கோபத்தினால் தீபாராதனைத்தட்டைச் சுவாமியின் மூக்கில் இடித்தார். சுவாமிக்கு மூக்கு மழுங்கி விட்டது. வீட்டில் போய்ப் பார்த்த போது ஆண் குழந்தை பிறந்திருந்தது. ஆனால் குழந்தைக்கு மூக்கு மொண்ணையாயிருந்தது. இதுதான் கோபாலசாமிக்கு மூக்கு மழுங்கிய கதை'' என்றது அந்தச் சிலை.

''உன் கை நொண்டியான கதையைச் சொல்'' என்றேன்.

''அப்படிக் கேளுமய்யா. இந்தக் கோயில் அப்போது இல்லை. நீர் வளம், நிலவளம், சாலை, சோலை, தடாகங்கள், நந்தவனங்கள் கூட கோபுர மாட மாளிகை ஆகிய சிங்கார விசித்திரங்கள் நிறைந்திருந்த தாமிரபுரி என்ற பெயருள்ள ஒரு பட்டணம் இந்த இடத்தில் இருந்தது...'' என்று நீட்டி முழக்கி நிறுத்தியது அந்த நொண்டிச் சிலை.

''இதென்ன விக்கிரமாதித்தன் கதைப் பாணியில் இருக்கிறதே! கொஞ்சம் இந்தக் காலத்துப் பாணியில் கதை சொல்லேன்'' என்றேன். அப்போது அது சொல்லும்: ''கேளுமய்யா, பெருமாளே! உம்முடைய ஆசைப்படியே கதை சொல்லுகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. குறுக்கே நீர் பேசக் கூடாது. அப்படிப் பேசுவீராகில் உம்முடைய தலை ஆயிரம் சுக்கலாகச் சிதறிச் சந்திப்



பிள்ளையார் கோயில் விடலை மாதிரி உடைந்துபோய் விடும். இனி, கதையைக் கேளும்'' என்று எச்சரித்து விட்டு நொண்டிச் சிலையானது சொன்ன கதையாவது:

காலாந்தகர் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தார். இருபது வருடக் கனவு நன வாகப் போகிறதைப் பார்க்கத் தாமிரபுரியை நோக்கி மாறு வேஷத்தில் புறப்பட்டு விட்டார். சூரியோதயத்துக்குள் தாமிரபுரியின் எல்லைக்குள் நுழைந்துவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் குதிரையை வேகமாகச் செலுத்தினார்.



பத்து வருடங்களுக்குமுன் காலாந்தகர் தாமிரபுரியின் மந்திரி யாகப் பணியாற்றினார். சேனாபதிவீரப்பனின் சூழ்ச்சியால் அவர் பழிக்கு ஆளாகி நாடு கடத்தப்பட்டார். தாமிரபுரியின் எல்லை யில் கால் வைத்தால் இவருக்கு மரண தண்டனை கிடைத்து விடும். அதற்காகத்தான் அவர் மாறு வேஷத்தில் சென்றார். அவருடைய மனத்தில் கடந்த காலச் சரித்திரம் நிழலாடியது.

இருபது வருடங்களுக்குமுன் தாமிரபுரியை ஆண்ட ஆதித்த பாண்டியனிடம் மந்திரியாக இருந்தார் காலாந்தகர். அப் போது, ஒரு மலை நாட்டு மன்னன், தாமிரபரணி நதியைக் கடந்து தாமிரபுரியைத் தாக்கினான். அப்போது பாண்டியனுடைய படையில் பெரும் பகுதி, சோழ மன்னனுக்கு உதவச் சென்றிருந்தது. அப் படை இன்னும் இரண்டு தினங்களில் திரும்ப வந்து சேர்ந்து விடும். அதற்குள் மலைநாட்டு மன்னன் புலியாகச் சாடிவிட்டான். போரில் ஆதித்த பாண்டியன் மரண மடைந்தார். அரண்மனையைச் சூறையாடினான், மலை நாட்டு மன்னன். எங்கு பார்த்தாலும் ரத்த ஆறு ஓடியது. தாமிரபுரி பட்டணமே சுடுகாடாகியது. பாண்டிய ராணி கனகாங்கியையும், மூன்று மாதக் குழந்தையாகிய இளவரசன் பூபதியையும் எதிரிகள் சிறைப்பிடித்துச் சென்று விட்டனர்.

எப்படியோ தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு தப்பி வந்த மந்திரி, இரவு தன் வீட்டுக்கு வந்த போது, தன் மனைவி ரத்தினவதியையும், மூன்று மாத ஆண் குழந்தையையும் எதிரிகள் கவர்ந்து சென்று விட்டதை அறிந்து அதிர்ச்சியடைந்தார்.

மறு நாள் காலையில் சோழ நாடு சென்றிருந்த பாண்டியப் படை வந்து சேர்ந்தது. கொள்ளை அடித்துச் செல்லும் மலைநாட்டு மன்னனைத் துரத்திச் சென்று வெற்றி கண்டு ராணியையும் அரச குமார னையும் மீட்டு வரும்படி சேனாபதியைத் தூண்டினார், காலாந்தகர். சேனாபதி வீரப்பனோ, தனக்குக் காலில் பலத்த காயம் பட்டுவிட்டது என்று கூறி மறுத்தான். வீரப்பனின் அந்தரங்கத்தை உணர்ந்துகொண்ட ராஜ குரு, மந்திரியையே சேனாபதி பதவி ஏற்கும்படி வேண் டினார். அதன்படியே தமது படையுடன் பாண்டியப் படையுடன் தாமிரபரணி நதியைக் கடந்தார் காலாந் தகர். மறு கரையில் கோர யுத்தம் நடந்தது.

மந்திரி போர்க்களத்தை விட்டு விலகி, அரச குடும்பத்தாரையும், தன் குடும்பத்தாரையும் தேடுவதில் முனைந்தார். பக்கத்துக் காட்டுக்குள் தேடியபோது, தம் மனைவி இரண்டு குழந்தைகளோடு இருப்பது தெரிந்தது. அரச குமாரனை பூபதியை ரத்தினவதியிடம் ஒப்படைத்து விட்டு ராணி வழியில் மாண்டு விட்டாள் என்பதைத் தமது மனைவி மூலம் அறிந்து இரு குழந்தைகளையும் அணைத்துக் கண்ணீர் வடித்தார் மந்திரி.

நதியைக் கடந்து தாமிரபுரியில் ராஜகுருவிடம் அவர்கள் மூவரையும் பத்திரமாகச் சேர்த்து விட வேண்டும் என்று நினைத்தார் காலாந்தகர். இரண்டு குழந்தைகளையும் இரு கரங்களில் அணைத்துக்கொண்டு நதியில் இறங்கினார். அவரைத் தொடர்ந்து ரத்தினவதியும் இறங்கினாள். பாதித் தூரம்கூட வந்திருக்க மாட்டார்கள். திடீரென்று நதியில் வெள்ளம் வரத் தொடங்கியது. ரத்தினவதி நீந்திக் கரை ஏறி விட்டாள். மந்திரி நீந்த முடியாமல் தத்தளித்தார். இரு கரங்களிலும் குழந்தைகள் இருந்ததால் நீந்த முடியவில்லை. வெள்ளம் பெருகியது. தண்ணீரின் வேகம் அதிகரித்தது. ரத்தினவதி மந்திரியின் நிலையைக் கரையிலிருந்து பார்த்துத் தவித்தாள்.

ஏதாவது ஒரு குழந்தையை ஆற்றில் எறிந்தால்தான் இரண்டு பேர்களாவது பிழைக்கலாம். இல்லையென்றால் மூவரும் பலியாக வேண்டியதுதான். என்ன செய்வது? இரு குழந்தைகளையும் மாறி மாறிப் பார்த்தார். ஒன்று தம் குழந்தை. மற்றொன்று அரச குமாரன். மந்திரி என்ன செய்யப் போகிறார் என்பதை உணர்ந்து ரத்தினவதி பதறினாள். மந்திரியின் எந்தக் கையில் தன் குழந்தை இருக்கிறது என்பதை அவ்வளவு தூரத்திலிருந்து அவளால் அடையாளம் காண முடியவில்லை.

மந்திரி, ஒருகணம் சிந்தித்தார். ஒரு முடிவுக்கு வந்து விட்டார். தம் இடது கையில் இருந்த குழந்தையை ஆற்றில் எறிந்துவிட்டு, வலது கையில் இருந்த குழந்தையை இடது கையில் எடுத்துக் கொண்டு வலது கையால் நீந்தினார். ரத்தினவதியின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாக ஓடியது.

கரை சேர்ந்ததும், மனைவியை வீட்டில் சேர்த்துவிட்டுக் குழந்தையை எடுத்துக் கொண்டு ராஜகுருவிடம் சென்றார் மந்திரி காலாந்தகர்.

''கடைசியில் அரசகுமாரனைக் காப்பாற்றி விட்டேன். இனி உங்கள் பொறுப்பு. திரும்பப் போர்க்களம் போகிறேன். நாளைக் காலைக்குள் மலை நாட்டரசனைக் கொன்று வெற்றியுடன் திரும்புவேன். சேனாபதி மீது எனக்குச் சந்தேகம். அரசைக் கைப்பற்றச் சூழ்ச்சி செய்வான். ஜாக்கிரதையாயிருங்கள்'' என்று எச்சரித்துவிட்டுச் சென்றார் மந்திரி.

ராஜகுருவிடம் கொடுக்கப்பட்ட குழந்தை அரச குமாரன்தான் என்று முக ஜாடையிலிருந்து தெரிந்து கொள்ளக்கூட அப்போது அரண்மனையில் யாரும் இல்லை. ராணியின் அந்தரங்கத் தோழிகள் அனைவரையும்தாம் மலை நாட்டு அரசன் படுகொலை செய்து விட்டானே. குழந்தையை அரண்மனையைச் சேர்ந்த மற்றப் பணிப் பெண்களிடம் ஒப்படைத்து, பலத்த காவலையும் ஏற்படுத்தினார் ராஜகுரு. அரசகுமாரன் மீட்கப்பட்டு விட்டான் என்ற செய்தியைக் கேட்டுச் சேனாபதி வீரப்பன் கொதித்தெழுந்தான். வாரிசற்றுப் போன அரசைத் தான் கைப்பற்ற நினைத்திருந்த போது, மந்திரி காலாந்தகர் அரச குமாரனை மீட்டு வந்துவிட்டாரே என்று புழுங்கினான். அவன் மனத்தில் பல திட்டங்கள் உருவாயின.

இரண்டு நாட்களில் மலை நாட்டு மன்னனைக் கொன்று வெற்றியுடன் தாமிரபுரிக்குத் திரும்பினார், காலாந்தகர். அவரை வாழ்த்துக் கூறி முதலில் வரவேற்றவன் வீரப்பன்தான்.

அதற்குப் பிறகு தாமிரபுரியை ஆட்சி செய்யும் பொறுப்பை மந்திரியும், ராஜகுருவும் ஏற்றுக் கொண்டனர். சேனாபதியின் சூழ்ச்சிகள் ஒன்றாவது பலிக்கவில்லை. இரண்டு வருஷங்களுக்குப் பிறகு மந்திரிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. குழந்தை பிறந்த இரண்டாம் நாள் ரத்தினவதி விண்ணுலகை அடைந்தாள். இப்போது மந்திரிக்குத் தம் குழந்தையை வளர்க்கும் பொறுப்பும் ஏற்பட்டு விட்டது. இந்தச் சமயத்தில் வீரப்பனுக்கு ஒரு யுக்தி தோன்றியது. தன் மகன் வேலப்பனுக்கு மந்திரியின் மகளை மணம் முடித்துவிட்டால், பிறகு அரசை வேலப்பனுக்காகக் கைப்பற்றுவதில் மந்திரிக்கு ஆட்சேபணை இருக்காது என்று நினைத்தான். பதினேழு அல்லது பதினெட்டு ஆண்டுகளுக்குப் பிறகு நடக்க வேண்டிய திருமணத்துக்கு இப்போதே திட்டம் வகுத்தான். ஆனால் மந்திரியின் மகள் வேதவல்லியை, சேனாபதியின் மகனோடு பழகவே வாய்ப்பில்லாமல் தடுத்துவிட்டார் ராஜகுரு. வேதவல்லி அரச குமாரனுடனேயே சேர்ந்து வளர்ந்தாள்.

இப்படியே வருடங்கள் பத்து கழிந்துவிட்டன. வீரப்பன் பொறுமை இழந்தான். கடைசியில் அரசகுமாரனையே கொன்றுவிடுவது என்ற முடிவுக்கு வந்தான். பூபதி இறந்துவிட்டால், பிறகு, வாரிசற்ற அரசைக் கைப்பற்றுவது சுலபம். அரண்மனை அந்தரங்க ஊழியன் ஒருவனை வசப்படுத்தி அரச குமாரனின் உணவில் விஷமிட ஏற்பாடு செய்தான். அதற்கும் ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. மந்திரி, தன் மகளுடைய பிறந்த நாளைக் கொண்டாட ஒரு விருந்து வைத்திருந்தார். இதைப் பயன்படுத்திக் கொண்டான் சேனாபதி. விருந்து ஆரம்பமாகியது. விருந்து நடந்து கொண்டிருக்கும்போது, சேனாபதி ஏதோ அவசரமாகப் போவதுபோல், எழுந்து மாளிகையினுள் சென்றான். இதைக் கவனித்த மந்திரி சந்தேகம் கொண்டு சற்று நேரம் கழித்து எழுந்து மாளிகையினுள் சென்றார். பழ ரசம் வைக்கப்பட்டிருந்த அறையினுள் மந்திரி தற்செயலாகப் பார்த்த போது அங்கிருந்த தங்கக் கோப்பையில் யாரோ ஒருவன் எதையோ போட்டுக் கலக்குவதைக் கவனித்தார். மந்திரியின் காலடிச் சத்தம் கேட்டதும் அவன் ஓடி மறைந்துவிட்டான். மந்திரி தங்கக் கோப்பையைக் கையில் எடுத்துப் பார்த்தார். இதை யெல்லாம் பக்கத்து அறையில் ஒளிந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த சேனாபதி, தன் திட்டம் தோல்வியடைந்து விட்டதை அறிந்தான். உடனே ஒரு யுக்தி தோன்றியது.

''துரோகி! ராஜகுமாரனையே கொல்லத் துணிந்து விட்டீரே!'' என்று உரக்கக் கூவிக் கொண்டு மந்திரியை நோக்கிப் பாய்ந்தான் சேனாபதி. இரைச்சல் கேட்டு அந்த அறைக்கு எல்லாரும் ஓடி வந்தார்கள். மந்திரி திகைத்து நின்றார். அவருடைய வலது கரத்தில் பழ ரசம் நிரம்பிய தங்கக் கோப்பை இருந்தது. இடது கரத்தைச் சேனாபதி பலமாகப் பற்றியிருந்தான்.

''என்ன நடந்தது?'' என்று ராஜகுரு பதற்றத்துடன் கேட்டார்.

''அரச குமாரனைக் கொல்லப் பழ ரசத்தில் விஷம் கலந்து கொண்டிருந்தார் மந்திரி. தற்செயலாக நான் பார்த்துவிட்டேன். எவ்வளவு பெரிய சதி?''—சேனாபதி கோபத்துடன் கூறினான். ராஜகுரு நம்பவில்லை. ஆனால் மற்றவர்கள் நம்பினார்கள். பழ ரசம் ஒரு பூனைக்குக் கொடுக்கப்பட்டது. பூனை உடனே செத்து விழுந்தது. மறு நாள், மந்திரியை நாடு கடத்திவிருப்பதாகவும், தாமிரபுரியின் எல்லையில் மந்திரி நுழைந்தால் மரண தண்டனை விதிக்கப்படும் என்றும் தீர்ப்பாயிற்று. தாமிரபுரியில் நீதி செத்துவிட்டது என்று புலம்பினார் ராஜகுரு. காலாந்தகர் பிரியும்போது, ''ராஜ குமாரனையும் என் மகளையும் இந்த நாட்டையும் உங்களிடம் ஒப்படைக்கிறேன். வீரப்பனிடமிருந்து காப்பாற்றுவது இனி உங்கள் பொறுப்பு'' என்று கூறி விட்டுச் சென்றார்.

நாடு கடந்து சென்ற மந்திரி அடிக்கடி மாறு வேஷத்துடன் தாமிரபுரிக்கு வந்து நிலைமையை அறிந்து செல்வார்.

மந்திரியின் மகள் வேதவல்லி, ராஜகுருவின் இல்லத்தில் வளர்ந்து கன்னிப் பருவத்தை அடைந்தாள். அவளுடைய நிகரற்ற அழகின் பெருமை நாடெங்கும் பரவியது. அவளுக்கு இருவர் போட்டியிட்டனர். ஒருவன் அரச குமாரன்; மற்றவன் சேனாபதியின் மகன் வேலப்பன். இந்தக் காதல் போட்டி யாருக்கும் தெரியாத இரகசியமாக இருந்தது. சேனாபதி வீரப்பனுக்கு அதிக வயதாகி விட்டதால், அவனுடைய மகன் வேலப்பன் சேனாபதி பதவியை ஏற்றான். சேனாபதியாகப் பதவி ஏற்ற மகனிடம் அன்று வீரப்பன் கூறினான்:

''மகனே! சேனாபதி ஆனது பெரிய விஷயமல்ல. இந்நாட்டுச் சிங்காதனத்தில் நீ அமர வேண்டும். என்னுடைய ஒரே ஆசை இது தான். இந்த நினைவிலேயேதான் உன்னை வீரனாக வளர்த்தேன். அரச குமாரன் உயிரோடு இருக்கும் வரை சிம்மாசனம் உனக்குக் கிடைக்காது. இன்னும் சில தினங்களில் வீரப் போட்டி நடக்கும். அதே சமயத்தில் பூபதியின் திருமணமும் நிச்சயமாகும். போட்டி மைதானத்தில் கன்னியர்கள் அனைவரும் வந்திருப்பார்கள். அரச குமாரன் தனக்குப் பிடித்த பெண்ணைத் தேர்ந்தெடுப்பான். அதே பெண்ணுக்காக நீயும் போட்டியிடு.....''— வீரப்பன் இப்படிச் சொன்னபோது வேலப்பன் இடைமறித்தான்.

''நான் வேதவல்லியை மணக்க விரும்புகிறேன். பூபதி ஒரு வேளை வேறு யாரையாவது தேர்ந்தெடுத்தால்......?''

''முட்டாளே! பெண்ணைவிட மண்தான் முக்கியம். நீ சிங்காதனத்தைக் கைப் பற்றினால் இந்த வேதவல்லியைப் போல் ஆயிரம் வேதவல்லிகள் உனக்காகக் காத்திருப்பார்கள். நான் சொல்வதைக் கவனமாகக் கேள். பூபதி எந்தப் பெண்ணைத் தேர்ந்தெடுத்தாலும் சரி, அதே பெண்ணுக்காக நீயும் போட்டியிடு. அப்போது நீயும், பூபதியும் வாட் போர் செய்ய நேரிடும். உன்னுடைய வாளில் விஷம் தடவி விடுகிறேன். எப்படியாவது பூபதியின் உடலில் காயத்தை உண்டு பண்ணிவிடு, போதும். விஷம் உடலில் பாய்ந்துவிடும். ஆனால் உடனே கொல்லாது. ஒரு மண்டலம் உடலிலிருந்து பிறகு கொன்று விடும். ஆகையால் உன் மீது யாரும் சந்தேகிக்க மாட்டார்கள். என் ஆசையை நிறைவேற்றுவாயா?'' என்று வீரப்பன் கேட்டான். வேலப்பன் அதற்கு உறுதி கூறினான்.

தை மாதம் முதல் தேதியன்று வீரப் போட்டி நடத்த ஏற்பாடு செய்தார்கள். இந்தச் செய்தியைக் கேட்டுத்தான், மாறு வேஷத்துடன் தாமிரபுரிக்கு வேகமாக வந்து கொண்டிருந்தார் காலாந்தகர்.

பல போட்டிகள் நடந்தன. கடைசியில் தாமிரபுரியின் நீதிபதி எழுந்து திருமணப் போட்டிகளின் விதிமுறைகளைக் கூறினார்.

''ஓர் இளைஞன், ஒரு கன்னியைத்தான் தேர்ந்தெடுக்கலாம். எந்தப் பெண்ணுக்காவது தன்னைத் தேர்ந்தெடுத்தவனைப் பிடிக்க

வில்லையென்றால் அவன் இட்ட மாலையைக் கழற்றிக் கொடுத்து விடலாம். ஒரு பெண்ணுக்குப் பலர் போட்டியிட்டால், வாட்போர் இட்டு வெற்றி பெறுபவனுக்கு அவள் சொந்தமாவாள். வாட்போரில் எதிரியை நிராயுதபாணியாக ஆக்கினால் போதும். எக்காரணம் கொண்டும் எதிரியைக் கொன்றுவிடக்கூடாது. இந்தப் போட்டியில் எதிரியைக் கொல்லும் உரிமை அரச குடும்பத்தாருக்கு மட்டும்தான் உண்டு. மற்றவர்கள் யாராவது போட்டியில் எதிரியைக் கொன்றால், கொன்றவருக்கு மரண தண்டனை விதிக்கப்படும். போட்டி ஆரம்பமாகலாம்.'' இப்படி நீதிபதி கூறி முடித்ததும் திருமணப் போட்டி பலத்த ஆரவாரத்துடன் தொடங்கியது. எல்லாருடைய போட்டிகளும் முடிந்த பிறகு, ராஜகுரு, அரசகுமாரனைத் தூண்டினார். உடனே, பூபதி தன் உடை வாளை உருவினான். ஒரு வீரன் வாளின் நுனியில் பெரிய மலர் மாலையைத் தொங்க விட்டான். வாள் நுனியில் மாலையை ஏந்திக் கொண்டு தன் இடத்தை விட்டு நகர்ந்தான் அரசகுமாரன் பூபதி.

கூட்டத்தில் நின்று இதைப் பார்த்துக் கொண்டிருந்த காலாந்தகர் பரபரப்படைந்தார். கூட்டம் மறைக்கவே, ஓரத்தில் நின்று கொண்டிருந்த ஒரு கற்சிலையின் மீது ஏறி நின்று பார்த்தார். அவர் மனம் ஆனந்தப் பரவசமடைந்தது. அரச குமாரன் தனக்குத் துணைவியாக வருங்கால ராணியைத் தேர்ந்தெடுக்கும் கட்டம் அது. மக்கள் அனைவரும் ஆவலோடு பார்த்து நின்றார்கள். பூபதி நடந்து சென்று, ராஜகுருவின் பக்கத்தில் வீற்றிருந்த வேதவல்லியின் கழுத்தில் மாலையைச் சூட்டினான். மக்கள் ஆரவாரம் செய்தார்கள். ஆனால் காலாந்தகர் ''ஐயோ!'' என்று அலறி விட்டார். அந்த அலறலை யாருமே கவனிக்கவில்லை. காலாந்தகரின் உடல் நடுங்கியது. மனம் பதைத்தது. தன்னுள்ளேயே பொருமினார்.

''முடியாது. இந்தத் திருமணம் நடக்கக் கூடாது. தங்கையின் கழுத்தில் மாலையைப் போட்டு விட்டானே பூபதி. ராஜகுமாரன் இல்லை. என் மகன். இருபது வருஷங்களுக்கு முன் தாமிரபரணி ஆற்று வெள்ளத்தோடு அரசகுமாரன் போய் விட்டான். உண்மையை ராஜகுருவிடம் கூறி இந்தத் திருமணம் நடைபெறாமல் தடுக்க வேண்டும்....'' காலாந்தகர் இவ்வாறு எண்ணித் துடித்தார். அப்போது இன்னொரு சம்பவம் நடந்தது.

வேலப்பன் திடீரென்று எழுந்து வந்து வேதவல்லியின் கழுத்திலிருந்த மாலையைத் தன் வாளினால் கழற்றினான். மக்கள் திகைத்தார்கள். நீதிபதி எழுந்தார்.

''நீங்கள் இருவரும் வாட்போரிட்டு முடிவு செய்து கொள்ளுங்கள்'' என்றார். இதைக் கேட்டதும், காலாந்தகர் சிறிது ஆறுதல் அடைந்தார்.

பூபதியும், வேலப்பனும் பயங்கரமாகப் போரிட்டார்கள். பழைய சேனாபதி, வேலப்பனுக்கு உற்சாகமூட்டினார். மக்கள் அனைவரும் பூபதியை உற்சாகப்படுத்தினார்கள். விஷம் தோய்ந்த வாளினால் பூபதியின் உடலில் காயம் ஏற்படுத்திவிட எவ்வளவோ முயன்றான் வேலப்பன். ஆனால் பூபதியின் வாள் வீச்சைச் சமாளிக்க முடியாமல் திணறினான். ஒருமுறை வேலப்பனின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பூபதி தரையில் விழுந்தான். மறுகணம் துள்ளி எழுந்தான். ஆவேசத்துடன் வேலப்பன் மீது பாய்ந்தான். பூபதியின் வாள் மின்னல் வேகத்தில் சுழன்றது. வேலப்பனின் தலை துண்டிக்கப்பட்டு மண்ணில் உருண்டது. அந்தக் கோரக் காட்சியைக் கண்டு வீரப்பன் மயங்கி விழுந்தான். மக்கள் சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். ஆனால் சிலை மீது நின்று கவனித்துக் கொண்டிருந்த மந்திரி பதறித் துடித்தார்.

''இளவரசர் வெற்றி பெற்றார். வேதவல்லி, நம்முடைய பழைய மந்திரியின் மகள், இந்நாட்டுக்கு ராணியாவாள்.'' நீதிபதி இப்படிக் கூறியதைக் கேட்டதும் காலாந்தகர் நிலைகொள்ளாமல் தவித்தார்.

''இந்தக் கலியாணம் நடக்கக் கூடாது. இதற்கு என்ன வழி?...... ஆ...... அதுதான் ஒரே வழி.......''—இப்படிக் கூறிக் கொண்டே சிலையின் ஒரு கை மீது காலை ஊன்றி அழுத்திக் கொண்டு கீழே இறங்கினார். அந்த வேகத்தில் சிலையின் கை ஒடிந்து நொண்டியாகி விட்டது.

''மந்திரி இப்படி என் கையை ஒடித்து நொண்டியாக்கி விட்டுக் கூட்டத்துக்குள் வேகமாக நுழைந்தார். கையை இழந்த நான் வேதனையோடு அங்கேயே கிடந்தேன். அன்று மாலையே என்னை அப்புறப்படுத்தினார்கள். வெகுகாலம் தாமிரபரணி ஆற்றங் கரையிலேயே கிடந்தேன். பிறகு இந்தக் கோயிலைக் கட்டும் போது ஒரு சிற்பி என்னைத் தூக்கிவந்தான். நான் நொண்டியாக இருப்பதைப் பார்த்து என்னைக் கோபுரத்தின் மீது வைக்க மற்றவர்கள் மறுத்து விட்டார்கள். இந்த மூலையில் நிறுத்தினார்கள். இன்றுவரை கவனிப்பாரற்றுக் கிடக்கிறேன். இதுதான் நான் நொண்டியான கதை.....'' என்றது சிலை.

''அது இருக்கட்டும். மந்திரி வேகமாகக் கூட்டத்துக்குள் நுழைந்து சென்றாரே, என்ன செய்தார்? அதைச் சொல்லு'' என்றேன் ஆர்வத்துடன்.

''நிபந்தனையை மீறி விட்டாயே. குறுக்கே பேசாதே என்றேனே. இதோ பிடி சாபம். உன் தலை, ஆயிரம் சுக்கலாக நொறுங்கட்டும்'' என்று கூறிக் கண்களை உருட்டி விழித்தது நொண்டிச் சிலை. மறுகணம் படார் என்று என் தலையில் ஏதோ மோதியது....

பதறி விழித்தேன். ஒரு வெளவால் என் தலை மீது விழுந்து பறந்து போய்க் கொண்டிருந்தது. நிமிர்ந்து பார்த்தேன். நொண்டிச் சிலை முன்போலவே அசையாமல் நின்று கொண்டிருந்தது.

''நீதான் நொண்டி. நீ சொன்ன கதையுமா முற்றுப் பெறாமல் நொண்டியாகப் போக வேண்டும்?'' என்று முனகிக் கொண்டே எழுந்து துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு சுவாரஸ்யமில்லாமல் கீழே இறங்கி நடந்தேன், கோடி அர்ச்சனையையாவது முழுதாகக் காணலாம் என்று.




## முத்துச் சிப்பி

இந்நாவல் குடும்ப வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது. காதல், கடமை, பாசம், விரக்தி முதலிய உணர்ச்சிகளெல்லாம் கதாபாத்திரங்களைப் பல விதத்திலும் ஆட்டி வைக்கின்றன. கதையின் ஊடே கணவனை இழந்த காரிகைகளின் கண்ணீரும், அவர்களுடைய வருங்கால வாழ்வுப் பிரச்னைகளும் அதிலிருந்து மீளக்கும் உள்ளப் போராட்டங்களும் விரிவாக இடம் பெற்றிருக்கின்றன. விதவைகளின் புனர்வாழ்வு மறுமணத்தில் தான் அடங்கியிருக்கிறதா என்ற கேள்விக்கு மறுமொழி அளிக்கிறது இந்நூல்.

பவானி ''முத்துச் சிப்பி''யின் முத்தான பாத்திரம். முதல் அத்தியாயத்தில் அவள் கணவனை இழந்த கட்டத்தைப் படிக்கும் போதே கதை விறுவிறுப்படைந்து விடுகிறது. பவானியின் ஒரே மகன் பாலு அவர்கள் இருவருக்கும் ஆதரவாயிருந்த கல்யாண ராமன், அவர் மனைவி பார்வதி, பவானியின் அண்ணா நாகராஜன், பவானியைப் பார்வையிலேயே கட்டுப் போசுக்கிய அவள் மன்னி கோமதி, மனம் போனபோக்கில் செல்லும் மூர்த்தி, அவன் பார்வையில் சிக்கிய ராதா, அவள் தமையன் டாக்டர் ஸ்ரீதரன், அவர் வீட்டுச் சமையற்காரர் சுவாமிநாதன் ஆகிய எல்லாரும் ''முத்துச் சிப்பி''யை உருவாக்க உறுதுணையாக இருந்திருக்கிறார்கள்.

ஆசிரியையின் சரளமான தமிழ் நடை 268 பக்கங்களுக்கு நாவலை மிகவும் சுவாரசியமாக நடத்திச் செல்லுகிறது. கதை சொல்லும் உத்தியும் வெகு அழகாக அமைந்திருக்கிறது. ஆசிரியை பவானியை எத்தனை உயர்வாக உருவாக்கினாரோ, அதே அளவுக்கு டாக்டர் ஸ்ரீதரனையும் உயர்த்தியிருப்பது மனத்துக்கு மிகவும் இதமாயிருக்கிறது. ஒரு புறம் கணவனை இழந்த பவானி, மற்றொரு புறம் மனைவியை இழந்த டாக்டர் ஸ்ரீதரன் — இருவருக்கும் இடையே நிலவிய மாசற்ற அன்பு—அந்த அன்பில் பிறந்த புனிதமான இலட்சியம் ஆகியவற்றை ஆசிரியை அற்புதமாகக் கையாண்டிருக்கிறார்.

எழுதியவர்: சரோஜா ராமமூர்த்தி; பிரசுரம்: தமிழ்நாடு புத்தக நிலையம், 5, ஸ்டேட் பாங்கி தெரு, சென்னை-2; விலை: 4.00

## செல்லப்பிள்ளை

செல்லம் கொடுத்து வளர்த்தால் ஒரு குழந்தை எப்படியெல்லாம் சீர்கேடுற்றுப் பல தொல்லைகளுக்கெல்லாம் உள்ளாகிறது என்பதை எடுத்துரைக்கிறது இந்த நாடகம். இந்த நாடகத்தில் தன் பிள்ளையின் தவறு கண்டு தந்தை அவனைக் காப்பாற்றக் கருதாது அவனுக்குத் தண்டனை வாங்கிக் கொடுப்பது பெற்ற பாசத்தையும் மீறி நீதிக்கு மதிப்புக் கொடுக்கும் சிறப்பை விளக்குகிறது. ஆனால் முதலிலேயே தம் மகனைத் தந்தை கண்டித்து வழிக்குக் கொண்டு வந்திருக்கலாமே என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? அப்புறம் நாடகம் எப்படி இவ்வளவு தூரம் வளர்ந்திருக்க முடியும்?

ஆசிரியர்: தமிழரசு; கிடைக்குமிடம்: மு. தமிழரசு, கண்டர மாணிக்கம், இராமநாதபுரம். விலை: 75 புதுக்காசு.

## கறுப்புப் பூனை

நம் வீட்டில் வளைய வருகிற பூனை, எலி தானே, அவற்றைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள என்ன இருக்கிறது என்று பல சிறுவர்கள் அசட்டையாக இருப்பார்கள். ஆனால் கோபு என்ற மாணவன் வீட்டில் நடக்கும் ஒவ்வொரு சிறு நிகழ்ச்சியையும் கூர்ந்து கவனித்து வந்தான். அதனால் அவனுக்கு அறிவு வளர்ச்சிப் போட்டியில் பரிசும், புகழும் கிடைத்து விட்டன. எந்த எந்தச் சிறு நிகழ்ச்சி அவனுக்கு இந்தப் பெருமையைத் தேடித் தந்தது என்பதைத் தெரிந்துகொள்ளச் சிறுவர்கள் விரும்பினால் கறுப்புப் பூனை என்ற புத்தகத்தை வாங்கிப் படித்துவிட வேண்டியதுதான்!

ஆசிரியர்: பி. இ. பாலகிருஷ்ணன்; பிரசுரம்: என். சி. பி. எச். பிரைவேட் லிமிடெட்; சென்னை-2; விலை: 75 புதுக்காசு.

## பூங்குளம் ராஜா

'அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்' என்பது பொய்யாமொழி. செல்வச் செழிப்பிலே வளர்ந்த பிள்ளை சுந்தரம். அவனுக்குத் தெருவிலே புண் பட்டத்த நாயிடம் அன்பு பிறந்ததென்றால் அவன் தந்தையும் தாயும் அதை விரும்புவார்களா? அந்த நாயை வீட்டை விட்டே துரத்தி விடுகிறார்கள். அந்தச் சிறுவன் சுந்தரம் பட்ட பாட்டையும் அந்தப் புண்பட்ட நாயின் உடலை வைத்தியர் மூலமாகக் குணப்படுத்தியதையும் நன்கு சித்திரித்து, கதையைச் சுபமாக முடித்திருப்பது நன்றாக இருக்கின்றது. நல்ல சித்திரங்கள் கதையைப் படிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டுகின்றன.

ஆசிரியர்: அரிமழம் இராம. கணபதி: பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5, திருச்சி-2; விலை: 80 புதுக்காசு.

## பூனைக் குடும்பம்

ஒவ்வொருவருக்கும் தங்கள் குடும்பத்தின் அருமை பெருமைகளைச் சொல்லிக் கொள்வதில் அலாதி ஆனந்தம் இருக்கும். விலங்கினங்களிலே சாது என்று பெயர் பெற்ற பூனையும் தன் இனத்தில் சிங்க ராஜாவும் இருக்கிறார் என்று சொல்லிப் பெருமைப்படலாம். அது மட்டுமா? புலி, சிறுத்தை, கழுதைப் புலி, மரநாய், ஓரி இவையும் அதன் இனத்தைச் சேர்ந்தவை தான். ஆச்சரியமாக இருக்கிறதா? இன்னும் இந்தப் பூனைக் குடும்பத்தில் உள்ள விசித்திரக் குணங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால் இந்தப் புத்தகத்தை நீங்கள் புரட்டிப் படித்துவிட வேண்டியதுதான்.

ஆசிரியர்கள்: கல்வி கோபாலகிருஷ்ணன், வி. ஆர். ஆர். மணி; பிரசுரம்: உமாதேவன் கம்பெனி, சென்னை-18; விலை: ரூ. 1.00.



பேபி உஷாராணியின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் சென்னை மியூஸியம் தியேட்டரில் நடைபெற்றது.

## தோற்றவருக்குப் பரிசு

பண்டைக் காலத்துச் சங்கீத வித்துவான்களைப் பற்றிய சுவாரசியமான நிகழ்ச்சிகளை ஆசிரியர் அழகாகத் தொகுத்துத் தந்திருக்கிறார். முப்பத்தைந்து சிறு சிறு நிகழ்ச்சிகள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொன்றும் தனிச் சுவையுடன் விளங்குகிறது.

''பஞ்சும் மெழுகும்'', ''மந்திரவாதியின் சூது'', ''அபிமானமும் அன்னவஸ்திரமும்'', ''நீர் கெட்டிக்காரர்தாம்'' என்ற கட்டுரைகளையெல்லாம் மீண்டும் மீண்டும் வாசிக்கத் தோன்றுகிறது.

எழுதியவர்: எல்லார்வி; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை — 18; விலை: 30 காசு.

## SANSKRIT LITERATURE

சம்ஸ்கிருத இலக்கியங்களைப் பற்றிப் பொதுமக்கள் அறிந்து பயன்பெறும் வகையில் அகில இந்திய வானொலி நிலையங்களில் அவ்வப்போது தக்க அறிஞர்களைக் கொண்டு பேச்சுக்களைத் தயார் செய்து ஒலிபரப்புவதை நாம் அறிவோம். செய்தி ஒலிபரப்பு இலாகாவினர் இவ்வகையில் சம்ஸ்கிருத மொழிக்கு ஆற்றி வரும் தொண்டு போற்றத்தக்கது. செய்தி ஒலிபரப்பு இலாகாவின் வெளியீட்டுத் துறையினர் இதுவரையில் காற்றில் மிதந்து வந்த சம்ஸ்கிருத மொழி பற்றிய ஒரு சில சிறந்த ஆங்கில உரைகளை இப்புத்தக வடிவில் வெளியிட்டிருக்கிறார்கள். இதில் இருபத்துமூன்று சொற்பொழிவுகள் சம்ஸ்கிருத இலக்கியத்தைப்பற்றி அடங்கியுள்ளன. இவற்றின் பெரும் பகுதி டாக்டர் ராகவன் அவர்களுடையது. திரு ஆர். என். தண்டேகர், பாபுராம் சாக்ஸேனா, கே. தேஷ்பாண்டே, பகதூர் சந்த் சாப்ரா, ஒய். மகாலிங்க சாஸ்திரி, எம். சிவகாமையா ஆகியோரின் பேச்சுக்களும் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. வேதம், இதிகாச புராணங்கள் ஆகியவற்றுடன் காளிதாசன், பவபூதி, ஹர்ஷர், சோமதேவர், தண்டி ஆகிய புலவர்களைப் பற்றிய உரைக்கோவை இதில் காணப்படுகிறது.

சம்ஸ்கிருத இலக்கியத்தைப் பற்றி டாக்டர் ராகவன் ஆற்றியுள்ள பேச்சு, ஒரு பரந்த இயற்கை எழிற் காட்சியை ஒரு சிறந்த சைத்ரிகன் சிறு வண்ண ஓவியமாகத் தீட்டினால் எப்படி இருக்குமோ அப்படி அமைந்திருக்கிறது. வேதத்தைப் பற்றிய சொற்பொழிவில் பண்டைக் காலத்திலேயே சம்ஸ்கிருத மொழியில் எப்படி அணி நலன்களும் தத்துவ விசாரணையும் நிறைந்திருந்தன என்பது எடுத்து விளக்கப்பட்டுள்ளது.

திரு தண்டேகர் கி. மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த பௌத்த கவியான அசுவகோஷரைப் பற்றிய தெளிவானதொரு கருத்துரையை வழங்கியிருக்கின்றார்.

தமிழ் நாடும் சம்ஸ்கிருத வளத்துக்குப் பெரிதும் துணை புரிந்திருக்கிறது. இதில் முக்கிய இடம் பெறுபவர் தண்டி. அவரைப் பற்றிய ஆராய்ச்சித் தெளிவுள்ள உரையும் இதில் அடக்கம்.

சோமதேவரின் கதாசரித்சாகரம் ஒரு கதைக் கடல் மட்டுமல்ல; அது மகாபாரதத்துக்கு அடுத்த ஆறாவது வேதமாகக் கருதுவதற்குரிய தகுதியுள்ளது என்று திரு மகாலிங்க சாஸ்திரிகள் மிகப் பொருத்தமாக மதிப்பிட்டிருக்கிறார்.

திரு சிவகாமையாவின் உரை சிறு காப்பியத்தைப் பற்றிய தெளிவான கருத்துக்களை வழங்குகிறது.

சுருங்கக் கூறினால் சம்ஸ்கிருத இலக்கியப் பூங்காவில் நுழைய விரும்புவோருக்கு இந்நூல் அதன் மணங்கவர் முகப்பைக் காட்டுகிறது.

பிரசுரம்: செய்தி ஒலிபரப்பு இலாகா, டில்லி; தொகுத்தவர்: டாக்டர் வே. ராகவன்; விலை: ரூ. 1 50.

பெ. திருஞான சம்பந்தன்

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடங்களுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள் ;

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

